சிவமயம்.

கண்டசுத்தி கதைகளென்கிற

## விகட

# அதிவிநோத கதை.



இஃது,

மதுரைமாநகரம்

கவிராஜர்

**கந்தசாமி பிள்ளையால்**

இயற்றப்பட்டு,

சென்னை - சூளை,

சிறுமணவூர்.

**அண்ணாமலை முதலியார்**

அவர்களாற்றமது,

ஆயுர்வேத அச்சுக்கூடத்திற்,

பதிப்பிக்கப்பட்டது.

1907.

Registered Copy Right.

இதன் விலை] [அணா 12.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத் தலைவருக்கும், இதரமான பலவித புத்தக வியாபாரிகட்கும் தெரிவிப்பது யாதெனில், (இந்த அதிவினோத கதை) இப் புத்தகத்தை 1867-வது வருஷத்திய 25-வது ஆக்டின் 2)-வது பிரிவின் 6-வது விதியின்படி கவர்ன் மெண்டார் அவர்கள்சட்டப்படி காபிரைட் ரிஜிஸ்தர் செய்திருப்பதி னால் இதை என்னுடைய உத்திரவில்லாமல் யாரும் அச்சிடக் கூடா து. அப்படி அச்சிடுவராகில் அதினாலுண்டாகும் நஷ்டத்திற்கும் பினல்கோர்ட் சட்டத்தின் கேள்விக்கும் ஜவாப்புதாரிக ளாவார்க ளென்று இதனால் தெரிவிக்கப்படுகிறது.

---

## விளம்பரம்.

இப் புத்தகமாவது இன்னும் பலவித புத்தகங்களாவது அவுஷ தங்கள், வெள்ளி, பொன் நகைகள், ஜர்மன்சில்வர் சாமான்கள், டியார தினுசுகள், பலவித சீமைசாமான்கள் எது தேவையானபோ திலும் அடியிற்கண்ட எமது விலாசத்திற்கு யெழுதிப் பெற்றுக்கொ ள்ளலாம்.

எமது ஆபீஸ் (கேட்லாக்குப் புத்தகம்) தேவையானவர்கள் தமது மேல்விலாசத்தைமட்டும் தெரிவித்தால் ஒருபுத்தகம் இனாமாக அனுப்பப்படும்.

சிறுமணவூர்.

அண்ணாமலை முதலியார்.

ஆயுர்வேத அச்சுக்கூடத் தலைவர்

என். சி. சூளை, போஸ்டு மதராஸ்.



உ

கடவுள் துணை.

சஞ்சலத்திற் சந்தோஷித்த.

# சந்த்ரகாந்தன் கதை.

—*(✳)*—

ஆழிசூழுலகிற் றாழ்விலாச் செல்வம் நிறைந்தோங்கிய சந்த்ரபுரி மன்னன் அருந்தவப் புத்திரனாகிய சந்த்ரகாந்த னென்பவன் ஓர் நாள் தனது நட்பினருடனே சேர்ந்து மனோல்லாசத்துடன் நந்தவன மார்க்கமாய்ச் செல்லுந்தருணம் ஓர் மதயானையைக் கண்டு மனமிரண்டு அவர்களனைவரும் ஒருவரை யொருவர் பிரிந்து நாற்றிசையும் பரவியோடிப் போயினர். அவ்வேழம் தனது பார்வையிற் சிக்கிய சந்த்ரகாந்தனை மாத்திரம் துரத்திக்கொண்டு ஓடியதால் அவன் மனமெலிந்து ஆ! விதிவசமே ஈதென்ன அநியாயம் யாங்கள் அரண்மனை விடுத்துப் புறப்பட்ட அவசகுண தூர்க்குறியின் காரணமோ இந்த கையதாய் எங்களைப் பிரித்துவிட்டதுமல்லாமல் இந்த யானையும் என்னைக் கொல்வதற்கு ஓடி வருகின்றனவேயென பயந்து அவ்வனத்திலிருக்கும் விருக்ஷங்களின்மீதுற்போய் ஏறிக்கொள்வதும், யானை அவனைவிடாமற் பின்தொடர்ந்துபோய் அவன் ஏறுகின்ற விருக்ஷங்களை வேருடன் பிடுங்கி பூமியில் மோதியடிக்கிறதுமா யிருந்தன. சந்த்ரகாந்தன் திகிலுற்று, ஐயையோ இனி என்னசெய்வேன் அநியாயமாய் எனதுயிர் ஆனையால் அந்தகன்பதி யணுகலாயிற்றே யென திகிலடைந்து அந்தக் கானகமுழுதும் ஓடி யோடி யலைந்தும் அந்த மதயானைவிடாமல் துரத்தலாயின. அச்சமயம் இவன்போகும்போது வழியிலெதிருற்ற ஓர் பாழ்கிணற்றைக் கண்ணுற்று அதில் ஜலமில்லாமற் காய்ந்துலர்ந் திருப்பதால் யாம் இதில் குதித்து விட்டால் யானை பள்ளத்தில் இரங்காமற் கரைமீருந்தவிதமாய் கர்வமடங்கி ஓடிப் போய் விடுமென மதித்து அந்தப் பாழ்கிணற்றில் திடீரென குதித்து விட்டான். அச்சமயம் அங்கிருந்த ஓர் நாகசர்ப்பம் தனது முட்டையின்மேல் அவயங் காத்திருந்ததால் கோபாக்னி ருத்திரன்போற் புஸ்ஸெனச் சீறி இவனைக்கடிக்க நகர்ந்தது. சந்த்ரகாந்தன் சிந்தை மெலிந்து, ஐயோ விதிவசமே ஆனைக்குப் பயந்து கிணற்றில் குதித்தும் அரவத்தால் மரணமெய்தலாயிற்றேயென திகைத்து, இனி எவ்

விதமாய் இதற்குத் தப்புவதெனத் தலையை நிமிர்ந்து பார்க்கையில் அந்தக் கிணற்றின் அருகிலிருந்த ஆலவிருக்ஷத்தின்வேர் கிணற்றின் மத்திய சுவற்றில் வேரோடியிருந்ததால் திடீரென்றெகிரி அதனைத் தாவிப்பிடித்துக் கொண்டான். முன்பு இவனைத் துரத்திக்கொண்டு வந்த யானையும் கிணற்றருகில் வந்து தனது தும்பிக்கையினால் அவன் குடுமியைப் பிடித்திழுத்து வெளியிற் போட்டுக் காலால் மிதித்துக் கொல்லவேண்டுமென்று தனது துதிக்கையால் தாவுவதைக் கண்ணுற்ற சந்த்ரகாந்தன் திகிலடைந்து, இனி நிமிர்ந்தால் ஆனையாற் சாவது நிக்ஷபமென தீர்மானித்து மூச்சை யடக்கிக்கொண்டு தலைகுனிந்த விதமாய் ஆலின்வேரைப் பிடித்துக்கொண் டிருந்தனன்.

இங்ஙனம் இவன்கதி இத்தகைய அற்புதமான ஆச்சர்ய ஆபத்தா யிருக்கையில், வெகுநாளாய் அந்தக்கிணற்றில் வாசஞ்செய்திருந்த ஓர் எலியானது இவனைப்பார்த்து, அடடா ஈதென்ன விபரீதம்? மாற்றானுக் கிடங்கொடேல் என்பதுபோல பகைஞனுக் கிடங்கொடுத்தாற் பிராணனுக் காபத்தாய் விடுமேயென மதித்து, இனி இதற்கென்ன செய்யலாமென் றுலோசித்து, முயற்சியுடையார் இகழ்ச்சியடையா ரென்பதுபோல இதற்கேதேனும் ஓர் உபாயஞ் செய்யவேண்டுமென மதித்து, எரிகிற கொள்ளியைப் பிடுங்கினால் கொதிக்கிற கொதி யடங்குமென்பதுபோல இவனிருக்கும் வேரைக் கத்தரித்துவிட்டால் பூமியில் வீழ்ந்து சர்ப்பத்தாற் கடியுண்டு விஷாக்கினியா லிறந்துவிடுவான். அச்சமயம் இவன் சரீரம் நமது இனத்தினர்கட்கும் நல்விருந்தாகுமென தீர்மானித்து, சந்த்ரகாந்தன் பிடித்திருக்கும் ஆலின்வேரைக் கரகரவென கடித்துக் கொண்டிருந்தன. அத்தருணம் அவன் ஆற்றொணா துயரசாகர சஞ்சலத்தி லாழ்ந்தவனாய் மனந்திகைத்து ஆ! ஹா! ஈதென்ன புதுமை இப்படியும் ஓர் மனிதனுக்கு ஆபத்தெய்துமோ வென துடிதுடித்து மனமிரண்டு அடடா! ஆனைக்கும் பாம்புக்கும் பயந்து ஆலின்வேரைப் பிடித்துக் கொண்டிருக்கும்போது அண்டின இடமும் அநியாய மானாற்போல இந்தப் பாழும் எலி கிஞ்சிற்றும் நெஞ்சமிரங்காமல் யான் பிடித்திருக்கும் ஆலின்வேரைக் கத்தரிக்கின்றதே ஈதறுந்து பூமியில் வீழ்ந்தால் அரவினால் மரணமெய்த ஆக்ஷேபனையுளதோ? வெனும் மனவிசாரத்துடன் ஓர் கையால் வேரைப்பிடித்துக் கொண்டும், மற்றோர் கையால் எலியை அதட்டித் துரத்திக்கொண் டிருந்தனன்.

இங்ஙனம், இவனுக்குற்ற ஆபத்தானது நினைக்கும்போதே பயமாயிருக்கிற தெனின் அவனுக்குற்ற சஞ்சலம் எத்தகைய கஷ்டநிஷ்டூரமா யிருக்குமோ வென்பது கவனிப்போ ரனைவருக்கும் தெரிந்த விஷய மெனினும் சந்த்ரகாந்தன் மனதில் வெகுவித துயாமுற்றிருந்தன. அப்படி யிருக்கையில் அந்தக்கிணற்றின் அருகிலிருந்த ஆலவிருக்ஷத்தின் கிளையிலிருக்கும் ஓர் தேன் கூண்டிலிருந்து மதுரமாகிய தேன் சந்த்ரகாந்தன். புஜத்தின் மீது சிறுதுளியாய் விழுந்துக் கொண்டிருந்தது, அச்சமயம் நிமிர்ந்தால் யானை கொல்லும், குனிந்தால் சர்ப்பம் கடிக்குமென்று ஆலின்வேரைப் பிடித்துக்கொண்டிருந்தாலும் இதனையும் எலிகடித்துக் கத்தரிக்கின்றதே இனியென் செய்வோமென்று தத்தளிக்கும் சந்த்ரகாந்தன் இவ்வளவு கஷ்ட நிலையிலிருந்தும், தனது புஜத்தின்மீது வீழுந் தேன் துளியை நக்கிக்கொண்டு நாவைத்தட்டி தட்டி அடடா! ஈதென்ன விநோதம்? இந்தத் தேன் மிகவும் ருசிகரமா யிருக்கின்றதே யென ஆனந்த சாகரத்தில் மூழ்கியவனு யகமகிழ்வெய்தினன். இத்தகைய அற்பசந்தோஷியாயிருக்கையில், எலியானது அவன் பிடித்திருக்கும் ஆலின்வேரைக் கத்தரிக்கும் முயற்சியை விடாமலிருந்தன. சந்த்ரகாந்தன் தேனையருந்தி சந்தோஷிப்பதும் எலியின் கொடுமையால் ஆலின்வேர் கத்தரித்து அறுந்து வீழ்ந்தால் பாம்பினுல் மரணமும், கிணற்றின்மீது பாய்ந்து ஓடிப்போவோ மெனினும் யானையால் மரணமும் சம்பவித்திடலாயினவே யென மனந்திகைத்தவனுய் விசனமுற்று இடம்விட்டுப் பெயர்ந்தவன் இறப்பது நிக்ஷயமாகையால் இனி ஈஸ்வர தியானமாயிருத்தல் வேண்டுமென மதித்து பகவானை தியானம் செய்துக்கொண்டிருக்கையில் கருணுகரன் கிருபையால் யானையானது சீ! இவன் கெட்டான் நமக்குப் பயந்து ஒளிந்துக்கொண்டவனை நமக்குச் சமானமாய் எதிர்த்துக் கொள்வது சரியல்லவென் றுஓடிப்போய்விட்டது. அச்சமயத்தில் சந்த்ரகாந்தன் மனம் வெறுத்து ஆலின்வேரறுந்து சர்ப்பத்தினுல் இறப்பதிலும் ஆனையால் இறப்பது நலமெனக்கருதி கிணற்றின் மீது வந்து யானையைக்காணுமல் மனமகிழ்ந்து இனி எப்போதும் ஆரண்யத்திற்கு வருவதில்லை யென்று சபதஞ் செய்துக் கொண்டு அரண்மனைக்குப் போய்விட்டனன்.

Madical Shop.

☞ படிப்பினை,

நாம்இந்தக் கதையில்கவனித்த தென்ன?

சந்தரகாந்தன் தனது வாசஸ்தானத்தைவிடுத்து வனவாசியாய்ச்சென்றது இளங்கன்று பயமறியா தென்னும் முரட்டுபுத்தி. காட்டில்யானை துரத்துக் கொண்டுபோனது அறிவின்மையால் ஆபத்துற்ற காலவிபரீதம். யானைக்குப் பயந்துகேணியில்வீழ்ந்தும் சர்ப்பத்தின் கொடுமையால் சுவற்றின்மத்தியிலூன்றிய ஆலின்வேரைப் பிடித்திருக்கையில் எலிபற்களால் கத்தரித்துக் கொண்டிருந்தவை வென்றேன்விதியை யென்றால் அன்றே தீங்குற்ற துன்பசாகரம் சந்தரகாந்தன். ஆனைக்கும்பாம்புக்கும் பயந்துசுவற்றின் வேரில் ஒட்டிக்கொண்டிருக்கையில், புஜத்தின்மீது வீழ்ந்த தேனை நக்கி நக்கி நாவைத்தட்டி சந்தோஷித்தது பிராணன் போகுந் தருணம்பெண்சாதியை மூத்தங்கொடுத்த அற்ப சந்தோஷம். இறப்பது நிக்ஷபமென்று கிணற்றின் மீதுபாய்ந்து யானையைக் காணாமல் மனோல்லாசமாய் ஆரண்யத்தை விடுத்து அரண்மனைக்குப் போயினது முழுதும் நினைந்தால் ஈரமில்லை யென்னும், மனதைரியம்.

ஆகையால் யாதாமொருவரும் சுகமனுபவிக்கையில் மனமகிழ்வதும், துயரானுபவிக்கையில் மனமெலிவதும் தகுதியன்று,

☞. இந்தக்கதையில் யாம் கவனிக்கும் ஞானரகஸ்ய மெவ்விதம்?

சிவானுக்ரகத்தினால் ஜீவன் பிராரத்வ கர்மானுசாரத்திற் கிசைந்தவிதமாய்ச்சஞ்சிதத்திற் சரீரமெடுத்து ஊழ்வினையை யொழிப்பதன்றி ஆகாமியத்திற்கு பாபபுண்ணியஞ் சேகரிப்பது சந்த்ரகாந்தன் அரண்மனையை விடுத்து ஆரண்ய மார்க்கமாய் வந்த அற்புதச்சாக்ஷி. ஜீவனை மாயப்பிரபஞ்ச இல்வாழ்க்கை சூழ்ந்து இம்சிப்பது, வனத்திற்சென்றவனை யானை துரத்திக்கொண்டு சென்ற விபரீத சேஷ்டை.

## அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

நிஷ்டையிலேயிருந்துமனத்துறவடைந்த பெரியோர்கள்
    நிமலன்றாளங்
கிட்டையிலேதொடுத்துமுத்திபெருமளவும் பெரியசுகம்
    கிடைக்கும் மாந்தர்
இஷ்டமதாய்த் தமதருமை மைந்தருக்கு மணம்பேசி
    விரும்பித் தாலி
கட்டையிலேதொடுத்து நடுக்கட்டையிலே கிடத்துமிட்டும்
    கவலை தானே.

என்றார்தன்மையாய்,இளவயதிற் கலியாணஞ்செய்து மனைவிமைந்தருடனே சஞ்சலப்படுவது சந்த்ரகாந்தன் யானைக்கும் பாம்புக்கும் பயந்து சுவற்றின்வேரில் ஒட்டிக் கொண்டிருக்கையில், தேன்துளி புஜத்தில் வீழ நக்கிக் கொண்டு

சந்தோஷித்தும், ஆலின்வேரை எலிகடிக்கிறதே பூமியில் வீழ்ந்தால் பாம்பு கடிக்குமே யென மனத்துயரடைந்த அற்பசந்தோஷம். ஜீவன் அஷ்டவித துர்க்குணமாகிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், இடும்பை, வேட்கையென்பதிற் சிக்காமல் மனதை ஆக்ரேபத்திற் செலுத்தி, சைதன்யத்தைநாடி ஜனனமரணோபாதையகற்றியது சந்த்ரகாந்தன் மனதைரியத்துடன்பூமியில் வீழ்ந்து சர்ப்பத்தாற் சாவதிலும் யானையாலிறப்பதே மேன்மையென்று கிணற்றின் மேல்வந்துயானைக்கும் தப்பித்துக் கொண்டோமென்று சந்தோஷித்த மனவைராக்கியம், நம்பினஜீவனை சிவத்துடன் சேர்த்துக் கொண்டது, யானையைத்துரத்திய சந்த்ரகாந்தனை ஆதரித்த கருணாகரன்கிருபாவீக்ஷண்யம்.

## மதியூகிமந்திரி சனிபகவானுக்குப் பயந்து பெட்டிக்குள்ளிருந்தும் பட்டதுன்பம்

காயாபுரி யென்னும் நகரில் மனோல்லாச னென்னும் மன்னனிடத்தில் மதியூகியென்னும் மந்திரி இணைபிரியாமல் இராஜாங்கவிஷயத்தைக் கவனித்துக் கொண்டிருக்கையில், இவன் சர்வசாஸ்திர புராண இதிகாசங் களனைத்தும் கவனித்தவனாகையால் நவக்ரகங்களில் ஒருவனாகிய சனீஸ்வரன் சகலரையும் பிடித்துவெகுவித கஷ்ட நிஷ்டூரமடையச் செய்வதினால் அவர் நம்மைப் பிடிக்காமலிருக்கும்படி ஓர் தந்திரோபாயஞ் செய்யவேண்டு மென வெகுநேரம் வரையினும் ஆலோசனை புரிந்தும் ஒன்றும் தோற்றாமையால் சண்டையடங்க கண்டவிட மெல்லாம் ஓடி ஓடி யொளிவதிலும் சண்டைக்காரன்காலில் வீழ்ந்து சமாதான மாவதே நலமென்பதுபோல, நாம் பலவித ஆலோசனைசெய்வதிலும் அந்த சனீஸ்வரனை நோக்கித் தபம்புரிந்து அவர் பிரசன்னமானவுடன் என்னைப் பிடிக்காதீரென்று வரம் பெற்றுக்கொண்டால் சூழ்வினையின்றி சுகானந்தமா யிருக்கலாமென்று மனதிலெண்ணி, அவன்அரசனைவிட்டு நீங்காதஅமைச்சனாகையால் அந்தப்பொழுதிற் கொலுகலைந்து அரசன் முதலானோரவரவ ரிருப்பிடமேகிய பின்னர் மதியூகி மந்திரி நந்தவனத்திற் சென்று அன்னந் தண்ணீரருந்தாமல் சனீஸ்வரனை நோக்கி அகோரதபம் புரியலாயினன்.

இங்ஙனம் மதியூகி மந்திரியின் தபோபலத்திற்கு மனமிரங்கிய சனீஸ்வரன் ஆனந்த சாகரத்தில் சூழ்கிய நன்மனத்தினனாய் சந்தோஷித்து உலகில் வசிக்கும் உத்தமன் எவனோ நமது தரிசனங்காண அருந்தப மியற்றுகிறானென மனமகிழ்ந்து தனதுவாகனமாகியகாகத்தின் மீதமர்ந்து. அதிகவேகமாய் மதியூகி மந்திரியின் முன்வந்து ஏன

ப்பா! எனைநாடி தபம் புரிய லாயினை யென்று வினவினர். மதியூகி தபநிலைவிடுத்துக் கண்ணைத்திறந்து பார்த்து ஐயா! சனீயீஸ்வரா என்னை நீர் பிடிக்காதிருக்கும்படியாய் உமதுதிருவாய்மலர்ந்து உண்மையான நல்வர மருளல் வேண்டும் தயாநிதியென்று பணிந்தனன்.

இவன்கேட்ட வரத்தைக் கவனித்த சனீயீஸ்வரர் சிரித்து, அப்பப்பா! இவன் வெகு தந்திரசாலியென மதித்து, ஐயா! மதியூகி மந்திரியே நீர்சொல்வதைக் கேட்போர் வியப்புறுந் தன்மையன்றோ? அஃதெவ்விதமெனின் நவக்கிரங்களாகிய சூரியன், சந்திரன், குஜன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேதுவென்னும் யாங்கள் ஒன்பதுபேரும் அவரவர் முறைக்கிசைந்த விதமாய் ஜீவர்களைச் சார்ந்து சுகதுக்கம் விளைவிப்பது யாவருக்கும் தெரிந்தவிஷயமேயெனினும் நீயும் கவனித்திருப்பாய், அவ்விதமேயானும் எனது முறைக்கேற்ற விதமாய் மனிதரானாலும் சரியே தேவரானாலும் சரியே ஏழரைவருஷம் பிடித்து அவர்கள் தியங்கி மயங்கி திப்ரமையடைந்து அப்பப்பா! போதும் போதுமென்று திகிலுற்றுத் திகைக்கும்படியாய் ஓர் ஆட்டங்காட்டி தமாஷாய் வேடிக்கைப்பார்க்கும் சனீஸ்வரனுச்சுதே யானென்ன பரமசிவனை மாத்திரம் பிடிக்கவில்லையா? அட! போடாபோ மூடாத்மாவேஎன்னமோ பயப்படுகிறாய் உன்னையும் ஒருசமயம் பிடித்து ஆட்டி அசக்கி குலிக்கிவிட்டு ஏழரைவருஷமானால் இருப்பிடம் போய்விடுவேன். இதற்குத்தானா பயப்படுகிறாயென்றனர், மதியூகி மனமிரண்டு, ஐயா! சனீயீஸ்வரரே நீர்சொல்லும்போதே பயமாயிருக்கின்றனவே ஐயையோ நீர் என்ன! வாய்க்குச் சுளுவாய்ச் சொன்னபோதிலும் அனுபவத்தில் ஆபத்து தானே அப்பப்பா! ஏழரைவருஷமானால் என்னாலாகாது இப்போதே உயிரை விட்டுவிடுகிறேனென்று முரட்டுத்தனமாய் இதோ கிணற்றில் விழுந்துவிடுகிறேனென்று ஓடினான், சனீஸ்வரன் மனமிரங்கி இவனென்ன சுத்தசோம்பேரியாய்க் கஷ்டத்திற்குப் பயப்படுகிறானென்று அவனை வழிமடக்கி சமாதானஞ்செய்து, அப்பா! நீயாதொன்றுக்கும் பயப்படதே உன்னை ஏழரை மாதத்திற்கு மாத்திரம் பிடித்து அப்பால்விட்டுவிடுகிறேனென்றனர். மதியூகிகிஞ்சிற்றும் சம்மதமின்றி ஏழரை மாதமானால் மாத்திரம் இலேசானதா என்னால் முடியாதையாவென்று தலையாட்டினன், சரி! அப்படியானால் ஏழரை நாள்பிடிக்கிறேனென்றனர், இதுவும் சகிக்கமுடியா தென்றனன், சனீயீஸ்வரனுக்குக் கோபம் பிறந்து இன்னமும் யானென்ன சொல்வேன் ஏழ

ரை நாழிகையாகிலும் பிடிக்கிறே னென்றனர் இதுவும் தாளேன். ஆனால்அதிலே பாதியாகிய மூனே முக்கால் நாழிகையென்றால் சம்மதிப்பேன். அச்சமயம் யான் எவ்விதமாயாவது சமாளித்துக்கொள்வே னென்றனன், சனீயீஸ்வரனும் அப்படியே நல்லதென்று சம்மதித்து, ஆனால் என்றைக்கு வரவேண்டுமென்று கேட்டனர், இன்னும் பத்துநாள் பொறுத்து பதினோராவது நாள்காலை மூன்றுநாழிகைக்கு மேல்வந்து, ஆறேமுக்கால் நாழிகையானால் ஓடிப்போவீரென்றனன். அவ்வார்த்தையைக் கேள்வியுற்று சரி! அப்படியே நல்லதென்று சம்மதித்துச் சனீஸ்வரர் போய்விட்டனர்.

அப்பால், மதியூகி மந்திரி நந்தவனத்தைவிட்டு மாளிகையில் வந்து ஸ்நானபான நேமநிஷ்டை முடித்துக்கொண்டு பலகாரபக்ஷணங்களருந்தி ஆடை ஆபரண சிங்காரங்கிரதனாய் அரண்மனையிற்சென்று அரசனுடனே கொலுவமர்ந்து இராஜாங்க விஷயத்தைக் கவனித்துக்கொண் டிருந்தனன். ஆனால், சனீஸ்வரன் பிடிக்கவருவாரே எப்படி தப்பித்துக் கொள்வதெனும் ஏக்கத்தினால் ஓர்வித மனவிசாரமா யிருந்தனன். இவன் முகவாட்டத்தைக் கண்ணுற்ற வேந்தன் அதிசயித்து மந்திரி! நீ ஏன் இரண்டு மூன்றுநாள் வரையினும் சதா சஞ்சலத்தி லாழ்ந்தவனாய் விசனப்படுகிறாயென்று வினவினன். மதியூகி மந்திரி உண்மையை எவ்விதம் சொல்வதென மறைத்து, அரசே! யான் எனது சிறிய தந்தையின் தேசத்திற்குப் போகவேண்டுமென்று வெகுநாளாய் விருப்பங்கொண் டிருக்கிறேன். ஆனால், உம்மைவிட்டுப்பிரிய மனமில்லாதவனாய் இதற்கெவ்விதமென்று ஆலோசனை செய்துக்கொண் டிருக்கிறேன். ஆனால், எவ்விதத்திலேனும் தேசத்திற்குப் போகவேண்டும் உத்திரவு கொடுப்பீரென்றனன். அரசன் கிஞ்சிற்றும் சம்மதியின்றி மந்திரி யானெவ்விதமாய் உன்னை ஊருக்கனுப்பிவிட்டுந் தனியாயிருப்பேன்? நல்ல திருக்கட்டும். இன்னுஞ்சிறிது நாட்சென்று அனுப்புகிறே னென்றனர். மதியூகி மந்திரிக்கு சனீஸ்வரனை ஏமாற்றிவிட்டு எங்ஙனமேனுஞ்சென்று ஒளிந்துக்கொள்வோமெனும் யோசனையே பெரிதாயிருந்ததால் சனீஸ்வரன்சொன்னகெடுவும் நெருங்கிவிட்டது. மந்திரி தனது வழக்கம்போல இராஜபத்தினி மாளிகையிற்சென்று நவரத்ன கசிதமயமாய்த் துலங்கும் தங்கத்தொட்டிலில் படுத்திருக்கும் குழந்தையாகிய இராஜகுமாரனை எடுத்து முத்தங் கொடுத்து விளையாடிக் கொண்டிருந்து இராஜபத்தினியைப் பார்த்து அம்மணி நாளையதினம் காலை எனது சிறியதகப்பனார் ஊரு

க்குப் போகவேண்டும். அரசனிடந் தெரிவித்து என்னை அனுப்பும்படியாக சொல்லுவீரென்று வேண்டினன். இராணியும் நல்லது அரசனுக்குச் சொல்லுகிறேனென்றனள், அப்பால், மந்திரி சந்தோஷித்து இனி நமது காரியம் ஜெயமாயிற்று நாளைய அதிகாலையிலிருந்து பதினைந்து நாழிகை வரையினும் எவ்விடத்திலேனும் போய் ஒளிந்துக் கொண்டால் சனீஸ்வரன் வந்து தேடிப்பார்த்து அகப்படவில்லையென்று ஏமாந்து போய்விடுவார். அச்சமயத்தில் நாம் தப்பித்துக் கொள்ளலாமென்று சந்தோஷித் திருந்தனன். அன்றையபகற் பொழுதகன்று அந்திப் பொழுதானவுடனே கொலுகலைந்து அவரவரிருப்பிட மேகினர்.

அப்பால் மதியூகி மந்திரியானவன் இன்றைய இராப்பொழுதகன்று பொழுது விடிந்தால் சனீஸ்வரன் வருவாரே இதற்குள் தப்பித்துக் கொள்வோமென்று தன் வீட்டை விடுத்து இராஜமாளிகையிற் சென்று அங்ஙனமே உலாவிக்கொண்டிருந்தனன். அச்சமயம் இராஜபத்தினி அரசனைப் பார்த்து பிராணபதி! நமது மந்திரி ஊருக்குப் போகவேண்டுமாம் நாளையதினம் அனுப்புவீரென்றனள். அரசனும் அப்படியே நல்லதென்று சம்மதித்தனன். அச்சமயம் அருகிலிருந்த மதியூகி மந்திரி ஓடிவந்து இராஜேஸ்வரா இப்போதே அனுப்புவீராகில் நாளையபகல் பதினைந்து நாழிகைக்குமேல் வந்துவிடுகிறேனென்றனன். மன்னனும் அவ்விதமே போய்வருவீரென்றனுப்பினன். மந்திரி மனமகிழ்ந்து இனி சனீஸ்வரனை ஏமாற்றி விடுவேனென்று சந்தோஷித்து, அதிவேகமாய் கம்மாள வீதியிற்சென்று இரண்டு தச்சர்களை அழைத்துக்கொண்டு தனது வீட்டிற்குச்சென்று பத்தடிநிகளம் ஆறடி அகலம் ஐந்தடி உயரமான ஓர் பெட்டி செய்வித்து தச்சர்களுக்கு பத்துவிராகன் கொடுத்து அனுப்பிவிட்டு, பொழுதுவிடிந்தவுடனே தனது வயறுநிறைய அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜன பலகாரபக்ஷணம் புசித்துவிட்டு பெட்டியில் படுத்துக் கொண்டு தனது மனைவியை அழைத்து பெண்ணே! இந்தப் பெட்டியைமூடி தாளிட்டுத் திறவுகோலை யாரிடத்திலும் காண்பித்திடாமல் பத்திரப் படுத்திவைத்துக் கொள்வாய். எவர்களாயினும் வந்து மந்திரி யெங்கேயென்றால் ஊருக்குப் போய்விட்டனரென்றுசொல்லித் துரத்திவிடுவாய். இராஜன் வந்தாலும் மர்மத்தைச் சொல்லாதே சீக்கிரத்தில் வெளிகதவை தாளிட்டுவைப்பாயென்றும் திட்டம் செய்துவிட்டனன்.

இவ்வார்த்தையைக் கேள்வியுற்ற மந்திரியின் மனைவி சந்தேகித்து ஐயோ ஈதென்ன விபரீதம்? இவருக்கு யாதேனும் தீங்கு நேரிட்டதோவென மனமிரண்டு கலவர சந்தேகத்துடன் தீடீரென பெட்டியைப் பூட்டித் தாளிட்டுத் திரவுகோலை அடுக்குப்பானையில் ஒளித்து வைத்துவிட்டு தெருக்கதவையும் மூடித் தாளிட்டுக்கொண்டு மனதைப் பலவிதத்திலுஞ் செலுத்தி! விசனசாகரத்தி லாழ்ந்தவளாய் துயரப்பட்டுக்கொண் டிருந்தனள்.

இங்ஙனம் இவர்கள் நிலை இத்தகைய அற்புதானந்த விபரீத ஆச்சரிய காக்ஷியாயிருக்கையில்! அன்றையதினத்தில் காலை இரண்டு நாழிகையில் சனீஸ்வரன் ஒருசேவகன் போல மந்திரியின் வீட்டுக்கு வந்து கதவைத்தட்டி ஐயா மந்திரியாரே சீக்கிரமாய் வருவீரென்றழைக்க மந்திரியின் மனைவி ஓடிவந்து அவர் எங்கேயோ போய்விட்டார் அவர்போன வழிதெரியவில்லையென்றனள். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற சனீஸ்வரனுக்குக் கோபம்பிறந்து, அடா திருட்டுப் பயலே என்னை ஏமாற்ற உன்னால் முடியுமா வென்று மந்திரியைப் போல வேஷமணிந்து, அரண்மனையிற் சென்று தங்கத்தொட்டிலில் சயனித்திருக்கும் குழந்தையை எடுத்து விளையாடிக் கொண்டிருந்தனன், இராஜபத்தினியும் உண்மையான மந்திரி தானென மதித்து அருகிலிருந்த ஓர் சிற்றறையிற் சென்றனள் உடனே அந்தக்குழந்தை வீறிட்டலறும் படியாய் இரண்டு துண்டாக வெட்டி தொட்டிலில் வைத்து விட்டு அரண்மனையிற் சென்று மிகவும் கோபத்துடன் அரசனை பார்த்துசிரித்து விட்டு ஓடிப்போய் மறைந்தனர். இராஜபத்தினி குழந்தையின் கூக்குரலைக்கேட்டு ஓடிவந்து பார்க்கையில் இருதுண்டாய் வெட்டுண்டிருப்பதைக் கண்ணுற்று அப்படியே சேர்ந்து புத்திரவாஞ்சையால் மூர்ச்சித்து வீழ்ந்தனள். அருகிலிருந்த தாதிகளெடுத்து உட்சாரணைத்து களையாற்றினர். இராஜத்பதினி களைதெளிந்து மர்மமுணராமல் ஐயையோ பாதகனாகிய மந்திரி குழந்தையைக் கொன்றானே யென்றுக் கண்ணீர்த் ததும்பக் கதறியழுதனள். அருகிலிருந்தவரனைவரும் கடலிறையும் பாவனைபோற் கதறியழுது அரண்மனையிற்சென்று அரசனுக்குத் தெரிவித்தனர். மன்னன் மனக்கவலையடைந்து, அடா துரோகி யானுனக்கு யாதொருதீங்கும் புரிந்திலேனே இதற்குத்தானோ இப்போது இங்குவந்து என்னைப்பார்த்துசிரித்து விட்டுப் போனனென்று மாளிகையிற்சென்று குழந்தையைப் பார்த்து மையலெறிந்து உடனே மந்திரியின் வீட்டுக்கு ஓடிவந்தனன், அர

எனுக்கு இவ்வளவு வருத்தம் நேரிட்டால் ஊரார்மனம் சகிப்பரோ? அந்நகரத்தி லிருப்போரனைவரும் திரளாய்க்கூடி வந்தனர். அரசன் மந்திரியின் வீட்டுக்கதவைத்தட்டி அடா மந்திரியென்றழைக்க, மந்திரியின்மனைவி மனநடுக்கமுற்று அவர் எங்ஙனமோபோய் விட்டாரென்றனள். அரசன் முதலானோர் கோபித்து, அடீ துன்மார்க்கி இப்போதோடி வந்தானே இதற்குள் எங்கு ஓடிப்போவான், வீட்டில் ஒளிந்துக்கொண் டிருக்கிறனென்று சொன்னவுடனே அவள் திகிலுற்று திகைத்தழுதனள் அச்சமயமே அருகிலிருந்தவூராரனைவரும் வீட்டின் மேலேறி ஓட்டைப்பிரித்து கதவைத்திறந்து கபகபவென்று யாவரும் வீட்டிற்குள் பிரவேசித்து வீடுமுழுதும் நாலாபக்கமும் சோதித்துப் பார்க்கையில் மந்திரியானவன் சனீஸ்வரனுக்குப் பயந்து ஒளிந்திருக்கும் பெட்டியைக்கண்டு அடடா! இவ்வளவுபெரிய பெட்டியும் இருக்கின்றதோவென சந்தேகித்து அந்த துஷ்டன்இந்தப்பெட்டியில் ஒளிந்திருப்பானென்று அரசனானவன் மந்திரியின் மனைவியைப்பார்த்து சீக்கிரமாய்ப் பெட்டியைத் திறப்பாயென, அவள் கையைமுறித்து வயற்றைப் பிசைந்துக்கொண்டு திரவுகோல் கொண்டுவர அடுக்குப்பானையருகிற் செல்வதற்குள் அருகிலிருந்தோர் பெட்டியை உடைத்து விட்டனர். அதற்குள் மந்திரி திருடனைப்போற் படுத்துக் கொண்டிருப்பதைக்கண்டு மர்மரகஸ்ய முணராத அரசன் கோபாக்னி ருத்திரன்போற் சினந்து, அடா பாபி அருமையாயின்ற குழந்தையைக் கொன்றுயே துரோகியென ஓர் உதை உதைத்தனன். அரசன் முதலில் உதைக்க ஊராரனைவரும் ஆளுக்கொருஉதை உதைத்து அவனை இழுத்து வெளியேபோட்டு அடியடியென்று அடித்தனர். அச்சமயம் மந்திரிக்கு சனிபகவான்கிருபையால் உயிர்போகாமல் ஆவிதுடிதுடித்து ஐயையோ என்னை இப்படித் தொந்தரைசெய்யாதீர் என்னசங்கதியானாலும் இராஜ சமுகத்தில் தெரிவிக்கிறேனென்று அடிபொறுக்க முடியாமல் பூமியில்வீழ்ந்து புரண்டழுதனன். அரசன் ஆற்றோணு வெஞ்சினத்துடன் அடா துரோகி குழந்தையைக்கொன்ற பாதகனுக்கும் நீதியோவென்று தனதிருகரத்தினாலும் அவன் முகத்திலறைந்து, தனது அருகிலிருப்போரைப் பார்த்து இந்தத் துஷ்டனை அரண்மனைக்கு இழுத்துக்கொண்டு வருவீரென்றுக்ஞாபித்துவிட்டு அரண்மனையிற் சென்று சிம்மாதனத்தி லமர்ந்திருந்தனன். ஊராரனைவரும், குடுமியையும் காலையும் கையையும் பிடித்திழுத்து உரித்தஆட்டைத் தூக்கிக்கொண்டுபோவதுபோல பலவித

மாய்த்தூஷித்து அடித்து உதைத்து இழுத்துக்கொண்டு பேரவையில் பலநாள் துன்பம் ஒருநாளில் அனுபவிப்பதுபோல மந்திரியானவன் சனீஸ்வரன் சமர்த்தைக்குறித்து ஆச்சரிய முற்றவனாய் அம்மம்மா! ஏழரைவருஷம் வரையிலும் கொஞ்சங் கொஞ்சமாய் கஷ்டப்படுவதை விடுத்து, மூன்றேமுக்கால் நாழிகை பிடிக்கும்படியாய்க் கேட்டோமே அதனாலேதான் இவ்வளவுதுன்பம் நேரிட்டதென்று பிரேதம்போலிருந்தனன். ஊரார்மாத்திரம் கிஞ்சிற்றும் நெஞ்சமிரங்காமல் அடித்துதைத் திழுத்துக்கொண்டு அரண்மனைக்குப் போயினர். மந்திரி வரங்கேட்ட மூன்றேமுக்கால் நாழிகையும் தீர்ந்துவிட்டது. வெட்டுண்டு இறந்தகுழந்தையின் சரீரமும் ஒன்றாய் ஒட்டிக்கொண்டு சனீஸ்வரன்கிருபையால் உயிர்பெற்று பிழைத்துக்கொண்டு தொட்டிலிற்றானே விளையாடிக்கொண்டிருந்தது. ஆனால் அங்கு ஒருவருமில்லை சகலரும் அரண்மனையில் வந்துவிட்டனர்.

இங்ஙனம், இவ்விதமாயிருக்க, அரசன் மந்திரியை நிற்கச்செய்து தலையாரிகளை சுற்றிலும் நிற்கவைத்து, அடாதுரோகி எனது குழந்தையை நீ கொல்லத்தகுமோ வென்றனன், மந்திரி கண்ணீர்த்ததும்பக் கதறியழுது அரசேயான் கொல்லவில்லை யென்றனன்

அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற வேந்தன், கோபித்து அடா துரோகி உனது துர்க்குணத்தை முன்னிட்டு உனது புத்திரனுக்கு இந்நகரினை முடிசூட்டுவேனென்று என்மகனைக் கொன்றகாதகா! பாதகா! கைக்குமெய்யாய் களவுபுரிந்துங் கண்ணிற்காண வில்லையென்று சாதிப்பதுபோல தொட்டிலி லிருந்தகுழந்தையை எடுத்துவிளையாடுவது போலதைந்திரோபாயமாய் இராணிஅருகிலில்லாசமயம் இருதுண்டாய்வெட்டி யெறிந்து விட்டுப்போய் பெட்டிக்குள் ஒளிந்துக்கொண்டனையே எதனைக்கு நீதியோ வென்று வினவினன். இவையனைத்துங் வனித்த மந்திரியானவன் விதியைநொந்தழுது விசனமாய்ச் சொல்லதாயினன்.

**மதியூகி மந்திரி**— அரசே! உலகிற்ஜனித்த மாந்தர்கட்கு ஊழ்வினை சம்பவத்திற் கியன்ற விதமாய் சனீஸ்வரன் ஏழரை வருஷம் பிடித்து ஆட்டங் காட்டுவதெனின் எனக்கு மூன்றே முக்கால் நாழிகையிற் றானே ஏழரை வருஷத்தின் கஷ்ட நிஷ்டூரமனைத்தும் காண்பிக்கலாயிற்று. இனி இதைக் குறித்து யோசிப்பதாற் பயனில்லை இந் துன்மையைக்கவனிக்க வேண்டுமாயின்

உமது குழந்தையை இச்சமயம் போய் பார்த்து விட்டுவா ரும் அது இன்னமும் உயிர் பெறுதிருந்தால் என்னைக் கொன்று விடுவீர்,

என, பகர்ந்ததவை வினவிய வேந்தன் ஆச்சர்யமுற்றவனாய் நல்லது அப்படியே கவனிப்போமென்று, மாளிகையிற் சென்றுபார்க்கையில் தங்கத்தொட்டிலில் வெட்டுண்டிருந்த குழந்தையின் சரீரம் ஒன்றாய்ஒட்டிக் கொண்டுஉயிர்பெற்றுலாவி விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்ணுற்ற அரசன்முதலானோர் ஆச்சர்யமடைந்து, அடடா! ஈதென்ன காலவிபரீதமென்று அங்கிருந்து அரண்மனைக்குவருவதாயினர், அச்சமயம் மனோல்லாசராஜன் மதியூகிமந்திரியின் முகத்தைப் பார்த்து விசனமுற்றவனாய் விளம்புவதாயினன்,

அரசன்:— எனதன்பிற்கினிய மந்திரி ஈதென்ன தர்மசங்கடம்? உமக்கித்தகையதுயரம் வருவதற்குக் காரணம் என்மகன்வெட்டுண்டிறந்ததற்குத்தானே. இச்சமயம் எவ்விதமாய் வெட்டுண்டிறந்த சரீரமொட்டிக் கொண்டு உயிர்பெற்றனவோ? இதை கவனிக்க வெகுஆச்சரிய மாயிருக்கின்றனவே.

மந்திரி:— அரசே! யாதாமொருவருக்கும் ஊழ்வினை சம்பவத்திற்கியன்றவிதமாய்ச் சஞ்சிதத்திற் சர்ப்பமமைந்திடின் நவக்கிரகாதிகளாகிய சூரியன், சந்திரன், குஜன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேதுவென்னும் ஒன்பது பேர்களும் அவரவர் முறைக்கிசைந்த விதமாய் ஜீவர்கட்குச் சுகதுக்கம்விளைவிப்பது வழக்கம், இவர்களில் சனீஸ்வரன் மாத்திரம், ஏழரை வருஷம் பிடித்துவெகுவித ஆபத்துகள் விளைவித்து வேடிக்கைபார்ப்பது சகஜமாகையால்யான் பலவிதசாஸ்திர புராணங்களுணர்ந்துஅவற்றில் நளச்சக்ரவர்த்தி நாடு நகரிழந்து மனவிமைந்தரைப்பிரிந்துவனவாசியாயலைந்துதுரிதுபர்ணனுக்குஅடிமைத்தொழிற்புரிந்து, அப்பால் தனது சுயராஜ்யம்வந்து சுகானந்தமாய் நவரத்தன கசிதமணி மகுடம் சிரசிற் சூடி செங்கோற் காந்தாங்கி இராஜரீகம் புரிந்தனர். இவ்விதமே அரிச்சந்திரன், புரூரவன், முதலான இராஜராஜாக்களும், பலவித துயரடைந்திருக்கின்றனரே. ஆதலால்யாம் விதியைமதியால் விலக்கவேண்டு மென்னும் பேராசையால்சனீஸ்வரனைநோக்கித்தபம்புரிந்தேன் அவர்

பிரசன்னமாகி உனக்கு என்னவரம் வேண்டுமென்றனர், யான் அவரைப்பணிந்து, சுவாமிநீரென்னைப் பிடிக்காதிருக்கும்படியாய் நல்வரம் அனுக்கிரகஞ் செய்தல் வேண்டுமென்றேன். அவர்சம்மதியாமல், யான் பரமசிவனைபிடிக்க வில்லையோ? அடா போடாபோ மூடாத்மாலே என்னமோ அஷ்டகிரகங்களைப்போல்யானும் ஓர்நாளைக்குவந்து உன்னை ஏழரை வருஷம் பிடித்து ஒரு குலுக்கு குலிக்கிவிட்டுப் போவேனென்றார். யான் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை, மூன்றேமுக்கால் நாழிகையாகினும் பிடிக்கிறேனென்று கெடுவு சொல்லிவிட்டு போயினர், அச்சமயம்யான் பெட்டிக்குள் ஒளிந்துக்கொண்டிருந்தும் சனீஸ்வரனால் பட்டபாடு நீங்கள் அறியாததோ? ஆனால், இனிமேல் என்னை சனிபிடிக்கமாட்டார். யான்சுகானந்த மாயிருப்பேன்.

அரசன்:— மந்திரி! நீவெகு புண்ணியசீலனானகையால் சனீஸ்வரன் தரிசனங் கண்ணுற்றாய். யாங்களிருந்தென்னத்திற்கு சோற்றுச்செலவும் பூமிபாரமுந்தானே!

மந்திரி:— அரசே! சனியன்பேரைச் சொன்னாலும் பயமாயிருக்கின்றனவே, யான் அவரைநோக்கி தபம்புரிந்ததும் போதும், அவர்முகதரிசனம் செய்ததும் போதும், அவர்என்னை மூன்றேமுக்கால் நாழிகை பிடித்ததும் போதும். செக்கிலகப்பட்ட என்னைப்போல் நீங்களனைவரும் குத்துதை யடி யபிஷேகம் செய்ததும்போதும் போதும் போதும்.

போதுமையாவென்று கண்ணீர்த்ததும்பக் கதறியழுதனன். இவன் பரிதாபநிலையைக் கண்ணுற்ற அரசன் மந்திரிபிரதானியரனைவருடனும் நகரவாசிகளும் விசனமுற்றழுதனர். மனோல்லாசராஜன் அன்றையதினத்திலிருந்து தனது மந்திரியின்மீது அன்புசெலுத்தித் தன்னுடைய கண்களுக்குச் சமானமாய் ஆதரித்து இணைபிரியாதிருந்தனன்.



☞ படிப்பினை,

நாம்இந்தக் கதையில்கவனித்த தென்ன?

மதியூகி மந்திரிதான் ஏழரைவருஷம் வரையிலும் கொஞ்சங் கொஞ்சமாய்க் கஷ்டப்பட்டு காலங்கழிப்பதற்கு சோம்பலுற்றமையால்தான், மூன்றேமுக்கால் நாழிகைக்குள் வெகுதுயரடைந்தனன். மனோல்லாசராஜன் யாதொன்றையும் தீரவிசாரியாமற்செய்ததினாற்றான் சதாபரிதாபமுற்ற சஞ்சலமனத்தினனாய் வருத்தப்படலாயினன்.

ஆகையால் யாதொன்றையும் ஆராய்ந்துணர்ந்து அவற்றிற்கிசைந்தவிதமாய் நடப்பதுதான் உத்தமரியல்பு. அஃதன்றி அவசரமாய் ஒன்றை விசாரியாமற் செய்துவிட்டால் விபரீத ஆபத்தாய் முடியும்.

☞ நாம் இவற்றில் கவனித்த ஞானரகஸ்ய மென்ன!

ஜடசம்பந்தமா யிருக்கும் மனது பேராசையால் அலைச்சற்படுவது மதியூகிமந்திரி சனீஸ்வரனைநோக்கித் தபம்புரிந்து மூன்றேமுக்கால் நாழிகைவரையிலும் அனுபவித்த கஷ்டநிஷ்டூரம்.

ஆகையால் உலகிற்ஜனித்த மனிதர்கள் சந்ததமும் பகவத்யானமாயிருந்து வருவதுவரும் போவதுபோகும் இல்லதுவராது உள்ளது போகாதெனும் தன்மையாய் முன்ஜனனத்திற் புரிந்த ஊழ்வினையின் பிராரத்தவகர்மா சாரத்திற் கியன்றவிதமாய்ச் சரீரமெடுத்து அனுபவிக்கும் சுகதுக்கமனைத்தும் ஆண்டவன் கட்டளையென்று சதாசந்தோஷியாய்த் துர்க்குணமின்றி உலகில் ஜீவித்திருப்பதுதான் உத்தமம்.

## ஒற்றைக்கண்ணர் சண்டையில் முடவர்களின் விசாரணை.

ஓர் சிற்றூரில் வசித்திருக்கும் ஓர் குடியானவனுக்கு மூன்று ஆண்பிள்ளைகள் பிறந்து வளர்ந்தனர். அவர்களில் இருவருக்கு ஒற்றைகண், ஒருவனுக்கு மாத்திரம் இரண்டுகண்ணும் தெரியும் இப்படியிருக்க ஓர் நாள் தமது இனத்தினர்வீட்டிற்கு விருந்துண்க யாவரும் கும்பலாய் வந்தமையால் இவர்களும் அவர்களுடனே கும்பலிற்கோவிந்தம் போடுபவர்போல ஒருகண்பார்வையாய்ச் சென்றனர். அங்ஙனம் அழகில் தங்கநிறமும் அங்கயீனத்தில் கோணக்கால் முடவராகிய இரண்டுவாலிபப் பெண்கள் வருகலாயினர், அச்சமயம் குரூபிக்கு அதிகசேஷ்டை யென்பதுபோல, ஒற்றைக்கண் ஆசாமிகள் மனோகர்வமாய் அந்தப்பெண்களின்மேல் கையைவைத்து உராய்ந்துக்கொண்டு போயினர். அந்த நொண்டி பெண்களின் அண்ணனாகிய சப்பாணிக்குக் கோபம் பிறந்து தனதுகரத்திலிருக்கும் தடியால் ஒற்றைக்கண்ணரிருவரையும் ஓங்கியடித்தனன், அவர்களென்ன இலேசானவர்களா? அந்தத்தடியைப் பிடுங்கிக் கொண்டு சப்பாணியின் இடுப்பொடிய அடித்தனர், இதற்குள் கும்பல் பெருத்தால் வம்புக்கிடமாகுமென்னுந்தன்மையாய் விருந்துக்குவந்தவரெல்லாம் அன்றையசோற்றை மறந்தாலும் சூரத் தன்மையையும் மறந்து விடுவோமோ வென்று தமது கைகொண்டவரையினும் ஒற்றைக்கண்ண ரிருவரையும் அடித்துக் காயப்படுத்திவிட்டு அகஸ்மாத்தாய் யாவரும் கலைந்து ஓடிப் போயினர்,

இங்ஙனம் இவ்வளவு பிராணபயமான சண்டைநடக்கையில் லஞ்சத்திற் பிறந்து லஞ்சத்தில் வளர்ந்த வஞ்சகதலையாரிகள் கண்டுங்காணமல் அங்ஙனமே மறைந்திருந்து கும்புகலைந்து யாவரும் ஓடிப்போய் குருடரும் முடவரும் நடக்கச்சக்தியற்று அழுதுக்கொண்டிருக்கையில் எங்களைப்போன்ற வீரப்ரதாபசேவகர் எவ்வுலகத்திலுமில்லை யாங்களென்ன அற்பமானவர்களா வென்று குடுகுடுவென்றோடி வந்து அடி உதைப்பட்டு அழுதுக்கொண்டிருக்கும் குருடரையும் முடவரையும் மிரட்டி பயமுறுத்தி நீங்களென்ன [illegible] சண்டைசச்சரவு செய்யலாயினீரோ [illegible]

னும் லஞ்சத்தொகை செலுத்திவிட்டு வந்தவழியைப் பார்த்துக்கொண்டு போய்விடுவீர். இல்லையாகில் உங்களனைவரையும் அரண்மனையில் அழைத்துச்சென்று ராஜதண்டனை யடையும்படி செய்வேனென்று மிரட்டினர்,

இவன் மிரட்டலுக்கு அவர்களென்ன அயர்ந்தவரா? ஆதியில்ஒற்றைக்கண் நட்சத்திரேசன் அரிச்சந்திரமகாராஜனை எவ்வளவோ ஆட்டங்காட்டிவிட்டார் அந்தகாலத்து ஒற்றைக்கண்ணர் அவ்வளவு சாமர்த்தியம் செய்தால் இந்தகாலத்து ஒற்றைக்கண்ணருக்கு அவற்றில் பத்திலொரு பங்காயினும் சமர்த்திராதா? அப்படியிருக்க தலையாரிகள் மிரட்டியதைக்கண்ட அண்ணன்தம்பியாகிய ஒற்றைக்கண்ணரிருவரும் கோபித்து, சரிதான் நிறுத்துமையா உமதுசமர்த்தை யாங்களோ அடி உதைபட்டு நடக்கச்சக்தியற் றிருக்கின்றோமே யாங்கள் உமக்கு லஞ்சங்கொடுப்பதற்குக் காசேது பணமேது துட்டேது துக்காணியேதுவென்று அடாவடியாய் தூஷித்திகழ லஞ்சப்பிரியராகிய வஞ்சகதலையாரிகள் அவர்கள் ஐந்துபேரையும் மாட்டு மந்தையைப் போல வரிசையாக அழைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றனர். அவர்களுடன் சாக்ஷிசொல்வதற்காக ஒற்றைக்கண்ணர் அண்ணனாகிய வாயாடிவம்பன் வழக்கிற்க்கு காரணகார்த்தா யான்தானென்று போயினன்,

இங்ஙனம், இவர்கள் ஆறுபேரையும் தலையாரிகள் அழைத்துக்கொண்டு வந்ததை அரசன் கண்ணுற்று அருகிலிருந்த மந்திரியை விசாரிக்க சொன்னர். அவனும் அப்படியே நல்லதென்றுசம்மதித்து வினவுதலாயினன்.

மந்திரி:—அடாதலையாரிகளே இன்றைக்கென்ன அங்கயீனரைப் பிடித்துக்கொண்டு வந்தீர்கள்?

தலையாரி:—மஹாப்ரபு! இவர்களை பார்த்தால் உமது கண்ணுக்குப் பரிதாபமாயிருந்தாலும் சண்டைசெய்வதில் இவர்கள்தான் முன்னணியில்நிற்கும் வீரப்ரதாபர். இவர்கட்குத்தகுந்த தண்டனை விதித்திடாமற்போனல் அனுமார் இலங்கையை அழித்ததுபோல உலகை அதஞ்செய்து மனிதரை யெல்லாம் மசகம்போல நசுக்கிப்போடுவாரென்பதற்குச்சந்தேகமில்லை,

ஒற்றைக்கண்ணன்:—ஐயா! யாங்கள் சண்டைசெய்வதில் சமர்த்தரென்பது உமது கண்களுக்கே தெரியவரும் பாலைக்காய்

ச்சி பூனையை காவல்வைத்ததுபோல இந்தத் தலையாரிகளை இந்ந கரிற் சேர்த்திருப்பது ஊருக்கனர்த்தமேயன்றி சவுக்கியமில்லை யென்பது உலகமறிந்த விஷயந்தானே.

மந்திரி:—இதைப்பற்றி பின்னால் விசாரிக்கின்றேன் நீங்கள் என் சண்டைசெய்தீர்கள்?

ஒற்றைக்கண்ணன்:—இந்த சப்பாணிதான் எங்களைத் தடியாலடித்தான் சரியாய் விசாரிக்கவேண்டும் மஹானுபாவரே,

மந்திரி:—ஏண்டா; சப்பாணி! உண்மைதானோ?

சப்பாணி:—இல்லைஐயை! எனது சகோதரிகளாகியஇவ்விருவரும் நடந்துபோகையில் இவர்கள் மேலே விழுந்தார்கள். யான் தடியால் தட்டிவிட்டேன், இவர்கள் மனோகர்வமாய் எங்களையெல்லாம் அடித்தனர், வேணுமானால் அந்த ஒற்றைக்கண்ணர் அண்ணன் இதோ இருக்கின்றனர் விசாரித்துக் கொள்வீர்.

என, புகன்றவையுணர்ந்த மந்திரி ஆலோசித்து ஏனையா சாக்ஷியாரே உண்மையனைத்தும் உமக்குத் தெரிந்திருந்தால் ஒளியாமற் சொல்லுமென்று வினவ, அந்த வாயாடிவம்பன் ஆலோசித்து அடடா ஈதென்ன ஆபத்தாய்விட்டதே. இந்தப்பக்கம் பார்த்தால் சகோதரர், அந்தப்பக்கம் பார்த்தால், மைத்துனனும் மைச்சினச்சிகளுமா யிருக்கின்றனரே யென்று தந்திரோபாய மாய்ப்புகலலாயினன்.

வாயாடி வம்பன்:—ஐயா! இவர்கள் சண்டையின் உண்மைநிலையைக் கவனிக்கவேண்டுமாயின் இவர்களனைவரையும் எதிரெதிர் முகமாய் நிற்கவைத்து நடக்கும்படி செய்துபார்த்தால் நீங்களே கவனித்துக் கொள்ளலாமே இதையான் விவரித்துச் சொல்ல வேண்டுமோ?

என, பகர்ந்தவை வினவிய மந்திரியும் அரசனும் சற்றுயோசித்து ஈதென்ன இத்தினம் இத்தகையவிபரீத விசாரணை,நிகழ்ந்தனவென்று வாயாடிவம்பன் சொன்னவிதமே அஞ்சுதலின்றி அரண்மனையில் வந்திருக்கும் பஞ்சபிரதி வாதிகளையும் ஒருவர்முகமாய் ஒருவரை நிற்கும்படி ஆக்ஞாபித்தனர். அரசன் உத்திரவின்படியே அந்த ஒற்றைக்கண்ண ரிருவரில் வலக்கண் குருடனும் இடக்கண் குருடனும் எதிரெதிராய் நின்றனர். சப்பாணியும் அவன் சகோதரிகளான சோணைக்காலிகளும் திரும்பும்போது வழக்கப்படியே தட்டுகெட்டு

டுத் தடுமாறி இடித்துக்கொண்டனர். அச்சமயம் அரண்மனையிலிருப் போரனைவரும் கலகலவென சிரித்து அடா தலையாரிகளே இத்தின மென்ன அற்புதகேஸ் கொண்டுவந்தீர்களென வினவுதலும் வாயாடி வம்பன் ஐயா! இவர்கட்கிசைந்த தலையாரிகள்தான் ஏற்பட்டனர். இவர்கள் நியாயத்தை யானே தெரிவிக்கின்றேன் கொஞ்சம் கேட்க வேண்டுமென பரிகாசமாய்ப் புகன்றனன். அரசனும் மந்திரியும் சம் மதப்பட்டு சரி! அவ்விதமே தெரிவிப்பாயென் றுக்ஞாபித்தனர். அப் படியாகுல் தெரிவிக்கிறேனென்று தனது பெருவாயைத்திறந்து அர ண்மனை அதிரும்படியாய்ப் புகலலாயினன்.

**வாயாடி வம்பன்**:—ஐயா! இந்த இரண்டு ஒற்றைக்கண்ணர்களும் எனது சகோதரர் இந்த சப்பாணி எனது மைத்துனன். இந்தக் கோணைக்காலிகள் எனதுமைச்சினிச்சிகள். இனிஇவர்களுக்குள் நிகழ்ந்தவிபரீதகலகத்தைத் தெரிவிக்கின்றேன் கவனிப்பீர்.அஃ தெவ்விதமெனின். ஓர் தனவந்தன் வீட்டில் விருந்து நடந்தது. அச்சமயம் யாங்களனைவரும் போயினோம், அந்தவீடுகொஞ்சம் இருட்டரையா யிருந்தமையால் ஒற்றைக்கண்ண ரிருவரும் உராய்ந்துகொண்டு செல்ல கோணைக்காலிகள் எதிரில்வந் திடி த்துக்கொண்டனர். மூன்றுகாலுடனே நடக்கும் சப்பாணிகட் டையைத்தூக்கி அடிபோட்டுக்கொண்டு போகையில் கைதவறி குறுக்கே நடக்கையில் ஒருவர்மீ தொருவர் இடித்துக்கொண்டு வெகுதமாஷாய் சண்டையிட்டனர். இவர்கள் வேடிக்கையைப் பார்த்த அக்கம் பக்கத்தார் ஆளுக்கொரு அடி அடித்து அகஸ் மாத்தாய் ஓடிவிட்டனர். இவர்கள் அடிபட்ட காயத்துடன் அழுதுக்கொண் டிருக்கையில், இந்தத் தலையாரிகள் ஓடிவந்து காசுகொடுத்தா லாச்சுது இல்லாவிடில் அரசன்முன் கொண்டு போய் விடுத்து ஆக்கினை செய்விப்பேனென்று மிரட்டி பயமு றுத்தி இழுத்துவந்தனரே இதுதானோ இராஜாங்கத்திற் கிசை ந்த நியாயம். அரண்மனை உத்தியோகஸ்தர்கட்கு நீரென்ன சம் பளம் கொடாமல் ஊராரிடம்மிரட்டி வசூலித்துக்கொள்ளச் சொ ல்கின்றீரோ? அவ்விதமா யிருந்தால் பகுதிவாங்குகின்ற பண மெல்லாம் எங்கேபோச்சுது.

என, குறுக்கு வழக்குபோட்டு விசாரணையை உடைத்து விட் டான், அரசனும் மந்திரியும் இந்தவிபரீத விசாரணையில் குற்றவாளி கள் தலையாரிகள்தானென தீர்மானித்து,அவ்விருவரையும் தண்டித்து அங்கயீனரை அனுப்பிவிட்டான்.

☞ படிப்பினை,

இந்தக்கதையில் யாம் கவனித்த தென்ன?



அங்கயினர்கட்கு எப்போதும் மனோகர்வமே துணையாயிருக்கின்றது. ஆனாலும் தமது நிர்வாகமோ தத்தளிப்பா யிருக்கையில் கும்பலிற்சென்றது வம்புக்கிடமாயிற்று, தலையாரிகள் சமயமறிந்து மனிதருடைய குணத்தைக்கண்டு இலஞ்சம் கேழ்க்கவேண்டியது, இவர்கள் அகத்தின் குறிமுகத்திற் றெரியுமென்பதை கவனியாமல் அவர்களை அநியாயமாய் அரண்மனைக் கழைத்துச்சென்றதில் ஆபத்தடைந்தனர்.

ஆகையால் யாதாமொருவரும் முன்பின் யோசனைசெய்து ஒரு காரியத்தைச் செய்யவேண்டியதன்றி கவனியாம லொன்றைச்செய்தால் கலகமாய்விடு மென்பதிற் சந்தேகமில்லை.

## மணாளனை துரோகஞ்செய்து மனதிற்கிசைந்த அங்கயீனனை மன்னனெனபாவித்து மஹாதுயரடைந்த குமரிகதை.



மகாபுரி யென்னும் நகரில் மனுநீதிமுறை வழுவுறுமல் அரசுபுரியும் மன்மதகாந்தனென்னும் மகாராஜன் வேட்டைமார்க்கமாய்ச் செல்கையில் ஓர் குடியானவன் குமாரத்தியாகிய குமரியென்னும் பெண்ணைக்கண்டு மதன்வாளினால் மனமயங்கி மோகவெறியாற் களைத்து அச்சமயமே அவருடன் மெல்லென வழிப்போக்கன்போல அவள்வீட்டைக் கண்ணுற்று அடையாளமிட்டு தனது அரண்மனைக்கு வந்து இச்சங்கதியை எவரிடஞ் சொல்லி நமது எண்ணத்தைப் பூர்த்திசெய்துக் கொள்வோமெனும் ஏக்கத்தினால் மனவிசார முற்றிருந்தனன். அச்சமயம் அருகிலிருந்த மந்திரியானவன் இவன் முகக்குறிப்பை யுணர்ந்து, அரசே! இன்றைக்கென்ன ஓர்வித மனவிசாரமா யிருக்கிறீரென்று வினவினன். அரசன்றான் வேட்டைக்குச் சென்றபோது வழியிலேலகிருந்த காக்ஷியை விபரமாகத் தெரிவித்தனன், மந்திரி யதனையுணர்ந்து அரசே எதோர் பெரியகாரியமா? யான் அந்

இப்பெண்ணையே உமக்கு மணமியற்றுகிறேனென்று வாக்குதத்தஞ் செய்து மன்னன் குறிப்பித்த அடையாளத்தின்படியே குடியானவன் வீட்டில்வந்தனன். குமரியின் தாய் தந்தையர் மனமிரண்டு ஈதென்ன ஆச்சரியம்? மாநிலம் புகலநம் கீர்த்திவாய்ந்த மந்திரியே நமதுவீட்டில் வருவதானால் நமக்கென்ன குறையென்று சந்தோஷித்தனர். அத்தருணம், அமைச்சன் அவ்விருவரையும் பார்த்து உமது வயறு செய்த பாக்கியவசத்தினால் நீங்கள் பெற்றபெண்ணை எமது அரசன் கண்டு மோகித்து விவாகம் செய்துக்கொள்ள விரும்பினார். உங்களுக்கு அரசன் மருமகனானால் அதைவிட அதிர்ஷ்டானுகூலமும் வேறுளதோ வென்றனன், குடியானவனுக்கு சந்தோஷம் அதிகரித்து வறுமையாளனுக்கு பணப்புதையல் கிடைத்ததைபோற் குதித்துக் கும்மாளமிட்டு, ஐயா! இவள் இதுவரையினும் எமதுகுமாரத்தி இனி உமது குமாரத்திபோல் மதித்து அரசனுக்கு இவளைக் கலியாணஞ் செய்துவைத்து எங்கள்வறுமை நோயகற்றி ஆதரித்திடல் வேண்டுமென பிரார்த்தித்தனன்.

இவர்கள் இவ்விதமாய்ப் பகர்ந்தவை வினவிய மந்திரி சந்தோஷத்துடன் அரண்மனையில்வந்து அரசனுக்கு இச்சுபசெய்தியைப் புகன்றனன். மகாராஜன் மனமகிழ்ந்து இனி விவாக காரியத்தை நடத்துவீரென்று ஆக்ஞாபித்தனன். அமைச்சன் அவ்விதமே நன்கெனச் சம்மதித்து அரண்மனை ஜோதிடனால் சுபமுகூர்த்த மேற்படுத்தி நவரத்ன கசிதமயமாய் மணவரைப்பந்தல் ஜோடித்து, குமரியென்னும் பெண்ணையும் அவள் தாய் தந்தையருடனே வரவழைத்து. மன்மதகாந்தனுக்கும், குமரிக்கும் மங்கிலிய ஸ்திரீகளால் நலங்கிட்டு ஸ்நானபானஞ் செய்வித்து நவரத்ன கசிதமயமாய்த் துலங்கும் ஆடை ஆபரணங்களாற் சிங்காரித்து மணவரையி லுட்காரவைத்து வேதவேதிய ராசீர்த்து சுகீபவாவென்று அக்ஷதைத் தூவும்படியாய் ஆசீர்வதித்தனர். மன்மதகாந்தன் சந்தோஷமாய் குமரியின் கழுத்தில் மங்கிலியஞ்சூட்டி மனமகிழ்ந்தனன்.

அப்பால், வந்த விருந்தினரனைவரும் அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜனம் புசித்துவிட்டு அவரவ ரிருப்பிடமேகினர். திருமண வைபவசுப சடங்கனைத்தும் முடிந்தவுடனே மன்மதகாந்தனும் குமரியும் பஞ்சணை யறையிற்சென்று மனோல்லாசமாய் விளையாடிக்கொண் டிருக்கையில், குமரியாமி தனது பழைய சிநேகி

தனுகிய முடவன்மீது காதலுற்றவளாகையால் அரசன்மீது வெறுப் புற்றிருந்தனள். அச்சமயம் இவள் மனக்குறிப்புணராத மன்மதகாந் தன் ஓர் பூச்செண்டையெடுத்து குமரியின்மீது விட்டெறிந்தான் அந்த வஞ்சகி பாசாங்குதன்மாய் அப்படியே சோர்ந்து வீழ்ந்துவிட் டனள். இந்த அதிசயத்தைக்கண்ட மன்னன் வியப்புற்றவனாய் அட டா! ஈதென்ன ஆச்சர்யம் மலர்செண்டடி தாங்காதமிருதுவான சரீ ரமுடையவள் நமக்கு மனைவியானாள் யாமெவ்விதமாய் இவளுடன் சுகித்து வாழ்வதென மனவருத்தமுற் றிருந்தனனன்றி அவளிடத் தில் யாதொரு வார்த்தையாடாமலும் சரசம் புரியாமலும்நித்திரையி ன்றி ஆலோசனையி லிருந்தனன், விபசாரத்வத்திற்சிறந்த குமரி தன து இஷ்ட நாயகனாகிய முடவனிடத்திற் போகவேண்டு மென்னும் ஆசையினால் கண்ணைத் திறப்பதும் அரனைப் பார்ப்பதும் இன்னும் இவன் நித்திரை புரியவில்லையேயென மனவருத்தப்படுவதும் எழுந்தி ருப்பதும் உட்காருவதும் படுப்பதும் கண்ணை மூடுவதுமா யிருந்த னள். இவளுடைய மனக்குப்பின் மர்ம்மரகஸ்ய முணராத மன்மத காந்தன் விசனமுற்று, அடடா இப்படியும் பெண்கள் உலகிற்சனித் திருப்பரோ வென்று மனமெலிந்து நாம் இவளை ஆசைக்கு மணந்து அழகுக்கு மாலையிட்டு பேசுவதற்கும் சொந்தமில்லாதவனாய் இருக் கின்றேனே யென விசாரமுற்றுக் கஷ்டப்பட்டும் பட்டினி கலியா ணஞ் செய்தும் சந்நியாசியான விந்தையைப்போ லாயிற்றேயென விசனமுற்றவனா யிருந்தனன்.

இங்ஙனம் இவ்விதமாயிருக்க குமரியானவள் அன்றையதினம் தனது இஷ்டநாயகனாகிய முடவனிடத்திற் போகசமயம் சரிப்படா மையால், மிகவும் விசனமுற்றவளாயிருந்தனள். இப்படியிருக்கையில், அரசன்இரவுமுழுதும் நித்திரையின்றியதால் இருபது நாழிகைக்கு மேல் கொஞ்சம்கண்ணைமூடினான், அத்தருணம் குமரி திடீரென்றெழு ந்து பஞ்சணையறையில் வைத்திருக்கும் பலகாரதட்டை அப்படியே தூக்கிக்கொண்டு மெல்லென எழுந்து வெளியேசென்றனள், அரசன் ஆச்சரிய முற்றவனாய் இவளென்ன பலகாரதட்டைத் தூக்கிக்கொ ண்டு போகிறாளேயென்று அவளுக்குத் தெரியாமல் பின்பற்றி சென் றனன்.

அப்பால், குமரியானவள் அந்நகர் புரத்தி லிருக்கும் பழையசா வடியில்வந்தனள், அங்ஙனம் இவளுடையசோரநாயகனாகிய முடவன் கோபாக்னிருத்திரன் போற்சினந்து என்னடி துன்மார்க்கி மூன்றுநா

ளாய் ஏன்வரவில்லையென்று தனது நொண்டிக்காலால் எட்டியுதைத் தனன். அந்தக்குமரியானவள் பலகாரதட்டைத் கீழே இறக்கிவை த்து விட்டு பிராணபதிஎனக்கு இந்த நகரத்தரசனை கலியாணஞ் செ ய்து வைத்தனர். அதனாலே யான் வெளியே வருவதற் கில்லாமையா யிருந்தது.இன்றையதினமும்அரசனும் யானும்பஞ்சணையறையிலிருக் கையில் அவன் என்னை, பூச்செண்டால் அடித்தனன். யான்பாசாங்கு செய்துசோர்ந்து வீழ்ந்து விட்டேன் அந்தமூடராஜன் என்னைத்தீண் டாமலே யிருந்துவிட்டான். யான்தந்திரமாய் தப்பித்துக் கொண்டு வந்துவிட்டேனென்று தான் கொண்டுவந்தபலகாரங்களை வாழையிலை யில்வைத்துஅருந்துவீரென்று உபசரித்துத்தானும்புசித்துஜலமருந்தி அவ்விருவரும் அந்த சவாடியிற்றானே சரசசல்லாப மனோல்லாசத்து டன் சுகானந்தமா யிருந்தனர்.

இங்ஙனம் இவ்விருவரின் நிலை இத்தகைய அற்புதானந்த ஆச்ச ரிய காக்ஷியாயிருக்கையில் மன்மதகாந்த மஹாராஜன் அதிசயித்து அடடா! ஈதென்ன ஆச்சர்யம்? இன்றிரவில் யான் ஓர் மல்லிகைப்பூச் செண்டினா லடித்தவுடனே திரேகம் மெலிந்து திடுக்கிட்டு மரணமூர் ச்சையாய்ச் சோர்ந்து வீழ்ந்து பாசாங்குசெய்தனளே, இப்போது இந்த அங்கயீன அவலக்ஷண முடவனிடத்திற் சிக்கி இத்தகையதாய்க் குத்துதை அடி யபிஷேகம் பெற்று இவனுடன் கொஞ்சிக்குலாவி சுகானந்தமா யிருக்கின்றனளே இவ்விதமும் பெண்கள் உலகத்திலு ளரோவென மனம்பதறி இனி கலகம்செய்தாற் காரியம் கெட்டுப் போகுமென மதித்து, இன்னமு மென்னென்ன நடக்குமோ அவை யனைத்தும் கவனிக்கவேண்டுமென்று ஆவலுற்றவனாய் கோபத்துடன் அவணிருந்து மிரண்டு அரண்மனைக்குப்போய் தனது மலரணைமஞ் சத்திற் சயனித்து நித்திரையின்றி மெத்த விசாரமுற்றவனாய்ச் சித்தப் ரம்மை யுற்றிருந்தனன்.

அப்பால், சத்திரத்தில் முடவனுடனே சரசசல்லாபமா யிருந்த குமரியானவள் அன்றிரவு இருபதுநாழிகையாயினபின் இனி தாமதி த்தால் தனது விபசாரத்வம் வெளியாய்விடுமென் றஞ்சினவளாய் முடவனைப்பார்த்து எனதன்பிற்கினிய சரசா! யான்சென்று வருகி றேன் செலவருள்வீரென வேண்டினள், அந்தமுடவன் கோபித்து அடீ துன்மார்க்கி உனக்குக் கிஞ்சிற்றும் பயமில்லை யான் இரவுபதி

ஐந்து நாழிகைவரையினும் பசியால் வருத்தப்படுவதும் நீமாத்திரம் நாவிற்கினிய நல்லுணவாதிகளாகிய அறுசுவைபதார்த்த திவ்யான்ன சுகபோஜனாதிகளருந்தி அரசனுடன் சுகானந்தமாயிருந்து உனக்கிஷ்டமானபோது வருவது நீதியோ பாதகியென்று அடித்து உதைத்து இனிமேல் இரவு மூன்று நாழிகைக்குள் வரவேண்டும் இல்லாவிடில் உன் இடுப்பை யொடித்து உன் உயிறை ஏமலோகத்திற் கனுப்புவேனென்று பயமுறுத்தினன். குமரி யாதொன்றும் பதிற்சொல்லாமல் பிராணபதி! இனி உமது உத்திரவின்படியே வருகிறேனென்று அங்கிருந்து புறப்பட்டு திருட்டுத்தனமாய் அரண்மனையில்வந்து தலைநிறைய முக்காடிட்டுக்கொண்டு பஞ்சணையறையிற் சென்று மெத்த உத்தமா பத்தினியைப்போற் சத்தமிடாமற் சயனித்துக் கொண்டனள். இவையனைத்துங் கவனித்த மன்மதகாந்தன் மனது எவ்விதமா யிருக்குமோ இதை வாசிப்பவர்களே கவனித்துக் கொள்ளவும்.

அப்பால், அருணோதய மானபிறகு குமரி எழுந்து ஸ்நானபானஞ் செய்து பலகாரபக்ஷண மருந்தி தனது சகிகளுடன் மனோல்லாசமா யிருந்தனள். மன்மதகாந்தனும் எழுந்து ஸ்நானபான நேமநிஷ்டை புரிந்து பகவத் பக்தியானந்தமாய்க் கடவுளைத் தொழுது போஜனசாலையிற் சென்று சுயம்பாகிகளால் வட்டித்த பலகாரபக்ஷண மருந்தி ஆடைஆபரண சிங்காரலங்கிர்தனாய் அரண்மனையிற் சென்று சிம்மாசனத்தமர்ந்து அரசுரிமை புரியலாயினன். ஆனால் இரவிலுற்ற அதிசயத்தை மாத்திரம் நினைத்து நினைத்து ஆச்சரியப்படுவதும, சிரிப்பதும், விசனப்படுவதும், ஆ! விதிவசமே யென்று பெருமூச்சு விடுவதும்,வெறியனைப்போலதலையசைப்பதுமாயிருந்தனனேயன்றி,இராஜாங்க விஷயத்தில் மனமில்லாதவனா யிருந்தனன். இவ்விபரீத வேடிக்கையைப் பார்த்த மந்திரி பிரதானியர் வியப்புற்றவராய், அடடா! ஈதென்ன ஆச்சரியம்? நமது அரசனுக்கு இத்தினம் யாதோ அகஸ்மாத்தாய் வெறிபிடித்து தலையாட்டங்கொடுத்து விட்டனவேயென தமாஷாய் வேடிக்கைபார்த்திடினும் அரசனைச்சுதேயென பரிதாபமுற்றவராய்க் கண்ணீர்த்ததும்பத் விசனப்படுவதாயினர்.

இங்ஙனம், குமரியின் விபசார விபரீதத்தைக் கண்ணுற்ற மன்னன் மனமயக்க முற்றதனால் மர்மரகஸ்யமுணராத அரண்மனையிலுள்ளோர் அரசனுக்கு வெறிபிடித்தனவோ வென அழுதுக்கொண்

டிருப்பதையும் கவனித்த மந்திரியானவன் வியப்புற்றவனாய் மன்மத காந்தனைப் பார்த்து அரசே! இத்ததினும் மனதித்தகைய சஞ்சலத்தி லாழ்ந்து [சித்தப்ரம்மையுற்ற காரணமென்ன வினவினன். அரசன் பின்னும் வெகுவாய் துக்கித்து மந்திரி காணுகாக்ஷியைக் கண்ணு ற்று வீணான யோசனைபுரிந்திடில் விபரீதமாகும், யாவும் பின்னற் கவனிப்பீரென்றனன். மந்திரியும் சந்தேகித்து என்னமோ? ஏதோ வென்று கலவரமா யிருந்தனன்.

அப்பால் அந்திப்பொழுதகன்று கொலுகலைந்தவுடனே அர சன், மந்திரி, பிரதானியரனைவரும் அவரவ ரிருப்பிடமேகினர். மன் மதகாந்தனும் சந்தியாவந்தன ஜபதப முடித்துக்கொண்டு போஜன சாலையிற்சென்று சுயம்பாகிகளால் வட்டித்த திவ்யான்ன சுகபோஜ னம் புசித்துவிட்டுத் தனது வழக்கம்போற் பஞ்சணையறையிற்சென்று சயனித்துக் கொண்டனன். விபசார வஞ்சகியாகிய குமரியானவளும் அன்னம் புசித்துவிட்டு ஆடை ஆபரண சிங்காரலங்கிர்தமாய் பஞ்சணை யில்வந்து சயனித்திருப்பவள்போற் கண்ணைத் திறப்பதும் அரசனை பார்ப்பதும் கண்ணைமூடுவதும் எழுந்திருப்பதும் உட்காருவதுமான பலவித விபசாரத்வ விபரீத சேஷ்டைகளனைத்தும் தமாஷ் செய்துக் கொண் டிருப்பதைப்பார்த்த அரசன் ஆச்சர்யமுற்றவனாய் அடீபா தகி! ஈதென்ன அநீதமென்று தன்மனதிற்றானே பெருமூச்சு விடு த்து, சற்றுநேரம் கண்ணை மூடிக்கொண் டிருந்தனன், அச்சமயம், குமரி மெல்லென எழுந்து மணாளன் தூங்கிவிட்டானென மதித்து இனிமைசேர் பலகார பக்ஷணதட்டை யெடுத்துக்கொண்டு பழைய சத்திரத்திற் போயினள், மன்மதகாந்த மஹாராஜனும் மெல்லென எழுந்து, அவளுக்குத் தெரியாமல் பின்பற்றிசென்று சாவடியின்பின் புறத்தில் நின்று ஜன்னலின் வழியாய்ப் பார்த்துக்கொண் டிருந்த னன். மணாளனை வஞ்சித்த மாபாவியாகிய குமரி பலகாரதட்டை யெடுத்துக் கொண்டு சத்திரத்தில் வருகையில் பதினைந்து நாழிகை யாய் விட்டமையால் முடவனுக்குக் கோபம்பிறந்து திடீரென்றெ கிரி குமரியின் தலைமயிரைப் பிடித்துக் கையில் சுற்றிக்கொண்டு கை யினால் அடித்தும் காலினால் உதைத்ததும் இலேசானதல்ல அவளைத் தவிற மற்றவராயின் அச்சமயமே ஆவியகன்று எமலோகத்திற் செ ன்றிருப்பர். அந்தப் பாதகியாகிய குமரிக்குக் கிஞ்சிற்றும் வருத்தமி ன்றி சரசக்குத்து, சரச அடி, சரசஉதையாய் முடவன் அடிப்பது மலர்செண்டடி மேனியில் விழுவதுபோல தமாஷாயிருந்தன. ஆனால்

அங்கயீன ஆசாமியாகிய முடவனுக்குக் கைகால் சோர்ந்து அப்படியே மூர்ச்சையாய் விழ்ந்து விட்டனன். குமரி மனந்தாளாமல், ஐயோ, ஆசைநாயகா! ஆவியிழந்தீரோவென மனம்பதறி தான் கொணர்ந்த பலகாரத்தை வாழையில் வைத்துவிட்டு பாத்திரத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அந்த இருட்டிற்றானே காட்டிற்சென்று ஆற்றின்ஜலங்கொண்டுவந்து அங்கிருக்கும் மூன்று கற்களால் அடுப்பு மூட்டி, ஜலபாத்திரத்தை வைத்து * தண்ணீரை வெந்நீராகச் செய்து முடவனுக்கு ஸ்நானஞ் செய்வித்து வஸ்திரத்தால் துடைத்துக் காய்ந்துலர்ந்த வஸ்திரமணிந்து, அத்தர் பன்னீர் புனுகு ஜவ்வாதெனும் வாசனைகளை திரேகத்திற்பூசி பலகாரபக்ஷணத்தை எதிரில்வைத்து பிராணபதி அருந்திக்களை தெளிவீரென் றுபசரித்தனள். முடவன் நாவிற்கினிய நல்லுணவதிகளனைத்தும் புசித்து நன்னீரருந்திக் களைதெளிந்து, கனைத்து கர்ஜ்ஜித்து மறுபடியும் குமரியின் தலைமயிரை பிடித்துக்கொண்டு அடி துன்மார்க்கி! யானுனக்கு நேற்றையதினம் புகன்றவையனைத்தும் கவனியாமல் உனது மனோகர்வத்தினால் இவனென்ன முடவன்தானே யென்று பயமில்லாமற் பதினைந்து நாழிக்குமேல் வந்தனையே ஈதென்ன அநீதமென்று முன்னிலும் விசேஷமாய் அடித்து உதைத்தனன். குமரி அவன்காலைப் பிடித்துக்கொண்டு சரசா! வீணாக உமது சரீரத்தைக் கஷ்டப்படுத்திக் கொள்ளாதீரென்று அழுது இனிமேல் அந்திப்பொழுதான வுடனே வருகிறேனென்றனள். முடவனும் சரிதானென்று சம்மதித்தனன். அப்பால், இருவரும் சரசசல்லாப மனோல்லாசமாய் சற்றுநேரம் விளையாடி சுகானந்தமா யிருந்தனர்.

இவையனைத்தும் கண்ணுற்ற சந்த்ரகாந்தனுக்கு மனம்பதைத்து அச்சமயமே அந்த * பதித்திரோகியை சித்திரவதை செய்யவேண்டுமென சித்தந் துணிந்திடினும், பொறுமைகடலினும் பெரிதெனுந்தன்மாய் இவளை பகவானே தண்டிப்பார். நாம் இன்னமும் பொறுத்து நாளையதினமும் கவனிக்கவேண்டுமென்னும் கோபாவேசத்துடனே தனது மாளிகையில் சென்று மலரணை மஞ்சத்தின்மீதிற் சயனித்துக் கொண்டனன். ஆனால், அவனுக்குக் கிஞ்சிற்று நித்திரையில்லாமல் மனோவிசாரமே பெரிதாயிருந்தன. அப்பால் சத்திரத்திலிருக்கும் குமரியானவள் முடவனை காலில்வீழ்ந்து பணிந்து சரசா! யான் சென்று வருகிறே னென்றனள். முடவன் சற்றுயோசித்து, பெண்ணே! இனிமேல் நாழிகைசென்று வருவாயாகில் உன்னைக் கொன்றுவிடுவதே

நிர்மாணமென்று அதட்டி, மிரட்டி, பயமுறுத்தி அனுப்பினன், அந்த பயங்கரவார்த்தையைக் கேள்வியுற்ற குமரியானவளும் அப்படியே நன்கெனச் சம்மதித்து மாளிகையிற்சென்று ஒன்றுமறியாத உத்தமி போல மஞ்சத்தின்மீதுற் சயனித்துக் கொண்டனள்.

அப்பால், அருணோதய மாயினபின், சந்த்ரகாந்தன் எழுந்து ஸ்நானபான நேமநிஷ்டை முடித்துக்கொண்டு போஜனசாலையிற் சென்று பலகார பக்ஷணம் புசித்துவிட்டு ஆடைஆபரண சிங்காரலங்கிர்தனுய் நவரத்ன மணிமகுடம் சிரசிற்சூடி செங்கோற்கரந்தாங்கி மந்திரிபிரதானியருடன் சிம்மாசனத்தமர்ந்து அரசுரிமை புரியலாயினன். ஆனல் இவனுடைய மனமயக்க மாத்திரம் விடாமல் அடிக்கடி சிரித்துக்கொண்டு, அகஸ்மாத்தாய் ஆ! விதிவசமேயென தலையசைத்துக்கொண்டு சித்தப்ரம்மை யுற்றவனயிருந்தனன். மந்திரிபிரதானியர் ஆச்சரியத்துடன் ஈதென்ன அரசன் இரண்டுநாளாய் வெறியனைப்போற் பிதற்றுகின்றனரே யென ஆலோசித்துக்கொண் டிருந்தனர். அன்றையதினத்தின் பகற்பொழுதகன்று அந்திப் பொழுதானவுடனே கொலுகலைந்து யாவரும் அவரவரிருப்பிடமேகினர். சந்த்ரகாந்தனும், அன்னம்புசித்து தனது வழக்கம்போல மஞ்சத்தின்மீதிற் சென்று சயனித்துக் கொண்டனன். அந்த விபசாரியாகிய குமரியும் போஜனம் புசித்துவிட்டு மஞ்சத்தின்மீதிற் சென்று சயனிப்பவள் போற் பாசாங்கு செய்பவள்போற் கண்ணை மூடுவதும், அரசனைப் பார்ப்பதும், எழுந்திருப்பதும் உட்காருவதுமா யிருந்தனள், இவளுடைய விபசாரவிபரீத திருட்டுசெய்கையைக் கவனித்த சந்த்ரகாந்தனும் வெகுநேரம் வரையினும் பார்த்துக்கொண்டிருந்து நித்திரை புரிபவன்போற் கண்ணை மூடினன். அச்சமயமே குமரி திடீரென்று பலகார பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அரண்மனையை விடுத்துத் தனது வழக்கம்போல சத்திரத்திற்குப் போகலாயினள்.

அப்பால், மன்மதகாந்தனும் தனது வழக்கம்போலவே, குமரியின் கண்ணுக்குத் தெரியாமற் பின்பற்றிசென்று சத்திரத்தின் பின்னலிருக்கும் ஜன்னலின் வழியாய்ப் பார்த்துக்கொண் டிருந்தனன். அச்சமயம் குமரியானவள் அதிவேகமாய் சத்திரத்தில்வந்து பலகார பக்ஷண பாத்திரத்தை இறக்கிவைத்தனள். முடவனுக்குக் கோபம் பிறந்து அவளை அருகில் வரவழைத்துத் தலைமயிரைக் கையில் சுற்றிக் கொண்டு அடீ! துன்மார்க்கி! உனது மனோகர்வத்தினல் இந்த மூன்

றுதினமாய் வெகுநேரம் சென்றுவருவது நியாயந்தானோவென்று தனது நொண்டிக்காலாலும் கையாலும் அடித்துஉதைத்தனன் அந்தஅடி உதையும்பெற்று அந்த இருட்டிற்றானே காட்டிற்சென்று ஆற்றின்ஜலங் கொணர்ந்து அக்கினிமூட்டிக் கொதிக்கவைத்து அவனுக்கு ஸ்நானபானஞ்செய்வித்து சந்தோஷப்படுத்தி அந்த விபசாரியாகிகுமரி இவனிடம் தினந்தோறும் குத்துதை அடி யபிஷேகம் பெறுவது வழக்கமாகையால், அன்றையதினமும் என்னென்னமோ சாக்குபோக்குச்சொல்லி சரசா! இன்றையதினம் வரையினும் யான் காலதாமதமாய்வந்த குற்றத்தை மன்னித்துக்கொள்வீர். இனிமேல் யான் அதிதீவிரமாய் வந்துவிடுகிறேனென்று அவன் காலில்வீழ்ந்து பணிந்து தான் கொணர்ந்த பலகாரபக்ஷணங்களை வாழைஇலையில் வட்டித்தனள். முடவன் கிஞ்சிற்றேனும் மீதிவையாமல் யாவையும் புசித்துவிட்டு ஜலமருந்திக் களைதெளிந்தனன். குமரி அவன்கை வாயலம்பி வஸ்திரத்தால் துடைத்துவிட்டு அவனுடனே சரசசல்லாபமனோல்லாசமாயிருந்தனள்.

இங்ஙனம், இந்த அநியாயத்தைக் கண்ணுற்ற மன்மதகாந்தனும் மனஞ்சலித்து இனிமேல் இந்தப் பாதகியின் முகதரிசனங் காணலாகாதென, தனது அரண்மனையில்வந்து மஞ்சத்தின் மீதமர்ந்து சயனித்துக் கொண்டனன், அப்பால் குமரியும் முடவனிடம் செலவுபெற்றுக்கொண்டு அரண்மனைக்கு வந்துவிட்டாள். அருணோதயத்தில் அரசன் விழித்தெழுந்து ஓர் சேவகனையனுப்பி குமரியை யாதொன்றும் விசாரியாமற் சிறைச்சாலைக் கனுப்பும்படியாய் ஆக்ஞாபித்து இரவும் பகலும் வெகுஜாக்கிரதையாய் காவல்புரியும், கொலைஞர்களையும் காவல் வைத்தனன். அப்பால், பொழுது விடிந்தவுடனே வேட்டைமார்க்காய்ச் செல்பவனைப்போல் கரத்தில் தனுசேந்தி ஓர் வெண்புரவியின் மீதமர்ந்து, ஓர் தலையாரியை அழைத்துக்கொண்டு நந்தவன மார்க்கமாய்த் தந்திரோபாயமாய் வந்து பழைய சாவடியில்வந்து அடா! தலையாரி இந்தமுடவனைப் பிடித்துக்கொண்டு வருவாயென்று அரசன் உத்திரவளித்தான் அப்போதுத் தலையாரிகள் அம்முடவனை அழைத்து வந்து அரசன் முன்விட அரசன் அழைத்துக் கொண்டுபோய் மற்றோர் சிறைச்சாலையில் அடைத்து வைத்தனர். ஆனால் அந்த மன்மதகாந்தன் தர்மசொரூபியாகையால் குற்றவாளிகட்கு வேளைக்கு அன்னங் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தான் முடவன் அதிசயித்து, அடடா! என்னமோசம்?

சத்திரத்தி லிருந்தவனை அநியாயமாய் இழுத்துவந்து சிறைப்படுத்தலாயினரேயென விசாரமுற்றிருந்தனன், குமரியும் அதிசயித்து நம்மை யாதொன்றும் தீரவிசாரியாமல் இவர்கள் சிறைபடுத்தின காரணமென்னவென்றும் நமது விபசாரம் வெளியாய் விட்டனவோவென்றும் ஆலோசனை செய்துக்கொண்டு என்ன தண்டனை நேரிடுமோவெனும் பிராணபயமும் கூடவன்மீது ஞாபகமுமாயிருந்தனள். ஆனால் இந்த மர்மரகஸ்யம் மற்றவர்க்குத் தெரியாது மந்திரிபிரதானியரனைவரும் பலவிதமாய் ஆலோசித்து அரசனுக்கு மூன்றுநாளாய் சித்தப்ரம்மையாயிருந்ததும் இத்தினம் மஹாராணியைச் சிறைப்படுத்தினதும் யாதொரு விபரீத கலகமாய் விளையுமென்று பேசிக்கொண்டிருந்தனர். ஆனால் முதன் மாத்திரம் அரசனைப்பணிந்தே வேந்தே ஈதென்ன விபரீதம் இராணியைச் சிறைப்படுத்தினீர்? அன்றியும், உமது மனமும் யாதோ பித்தம்பிடித்ததுபோற் கலவரமாயிருக்கின்றனவே, இவையனைத்தும் யான் கவனித்துணர்ந்து விவரித்துரைப்பீரென்று வினவினன், அவ்வார்த்தையைக்கேள்வியுற்ற அரசன் கண்ணீர்த்ததும்ப விசனமுற்றவனாய் மந்திரி! என்மனத்துயர் புகன்றிடில் மண்ணும் மரமுங் கண்ணீர்சொரிந்துக் கதறியழுதிடுமெனின் எனதுளம் எத்தகைய சஞ்சலத்தி லாழ்ந்திருக்கும் இதனை வெளியிற் சொன்னாலும் வெட்கக்கேடுதான், சொல்லாவிடினும் துக்கமதிகரிக்கின்றதென்றனன். இவன் சொல்லைக் கேள்வியுற்ற மந்திரி அதிசயித்து ஈதென்ன ஆபத்தாயினவென ஆலோசித்து யாதொன்றும் தோற்றாமல், அரசே! உற்றதைச் சொன்னால் அற்றது பொருந்தும் என்னபதுபோல, உமதுமனதிலுற்றவை தெரிவித்தால், யாங்கள் அவற்றிற் கிசைந்தவை யாதேனும் ஓர் யோசனை செய்து ஒழுங்குபடுத்துவோம், அஃதன்றியாதொரு சங்கதியையும், மனதில் வைத்துக்கொண்டு மவுனமாயிருந்தால் விபரீதவிசாரமாய் மனதை யிருகச்செய்து சித்தப்ரம்மையடையச்செய்திடுமென்றனன், அவன்புகன்றவையுணர் மன்மதகாந்தன் ஆலோசித்து, மந்திரி நீ பகர்ந்தவை சரிதான் ஆயினும், எனது மனத்துயரை யானே சொல்வதற்கியலாது, யாவரேனும் கண்டசுத்தியாய்ப்பாடி தெரிவிப்பாராயின் அவர்கட்குப் பதினாயிரம் விராகன் கொடுப்பேனென்று தலையாரிகளாற் பலதேசத்திலும் பறையறையச் செய்வீரென் றுக்ஞாபித்தனன். மந்திரியும் அவ்விதமே யென்றெனச்சம்மதித்து அரசன் சொற்படியே தலையாரிகட்குக் கட்டளையிட்டனன்.

இங்ஙனம் இவர்கள் இத்தகைய அற்புதானந்த ஆச்சர்ய அசியா யகாக்ஷியா யிருக்கையில், தென்தேசத்திலிருந்து செந்தமிழ் கவிராஜர்களாகிய அண்ணன்தம்பி நால்வரும் ஆரண்யமார்க்கமாய்ச் சென்று அநேகதேசங்களிற் பிரவேசித்து ஆங்காங்கு பிரசங்கஞ்செய்தும் கண்டசுத்தி பாடியும் வெகுபொருள் சேகரித்துக்கொண்டு அரசமைந்தர்களைப்போற் ஆடைஆபரண சிங்காரலங்கிர்தமாய் பலதேசமுந்திரிந்து, மனவருத்தத்தால் மவுன்முற்றிருக்கும் மன்மதகாந்தன் தேசத்தில்வந்து அந்நகரின் தர்மசத்திரத்திலிறங்கி செந்தமிழ்கவிராஜரில் இளையவராகிய மூவரும் மூன்றுபிரிவாய் தெற்கு, வடக்கு, மேற்கென்னும் மூன்று திசையிலும்போய் பிரசங்கஞ்செய்து ஜெயம் பெற்று வருகிறோமென்று அண்ணனிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு ஒவ்வொருவரும் ஐந்துகாத தூரத்திற்குப்போய பனிரெண்டாவதுநாள் யாம் மூவரும் அண்ணன் முன் வருவோமென்று சொல்லிக்கொண்டு போயினர்.

அப்பால், அவர்கள் மூவரும் தமது மனம்போற் சென்றதேசங்களிற் பிரசங்கஞ் செய்துக்கொண்டிருந்தனர், ஆனல் அவர்களின் மூத்தவன் மாத்திரம் மன்மதகாந்தன் தேசத்திலிருந்தனன். அன்றையதினம் அந்திபொழுதில் அறுசுவைபதார்த்த திவ்யான்ன சுகபோஜனம் புசித்துவிட்டு நவரத்ன கசிதமயமாய்த் துலங்கும் ஆடைஆபரண சிங்காரலங்கிர்தனாய் தாம்பூலம் தரித்துக்கொண்டு தாசிவீதியில் வருகையில் அங்ஙனம் அழகானந்த முகவஜீகர தேஜஸமைந்த முகவஜீகரியாகிய முத்துமாலையென்னும் ஓர் தாசியானவள் அந்திப்பொழுதில் உப்பரிகையின்மீது உலாவிக்கொண்டிருந்தனள், தாசிவீதியில் தமாஷாய்ச் செல்லும் செந்தமிழ்கவிராஜன் முத்துமாலையைப்பார்த்து சித்தப்ரம்மை யுற்றவனாய் திகைத்து அருகிலிருப்பவளைப் பார்த்து,

விருத்தம்.

மனமெனும்புரவிக்கன்பாய் மகிழுடன்சேணமிட்டு
கனமுடனறிவானந்தன் காக்ஷியாயேகும்போது
தினகரன்மதியும்நாளுந் திகழொளிமாதைக்காணில்
எனதுளம்சகிக்குமோதான் என்செய்வேன்மதியுளோரே

என, சோர்ந்து வீழ்ந்தனன். அச்சமயம் அவ்வீட்டின் தாய்க் கிழவி யோடிவந்து இவனைப்பார்த்தால் வெளிதேசத்தின் அரச புத்திரனைப்போற் காண்கிறது இவன் தமது முத்துமாலையின் மையலிற் சிக்கி யிருக்கின்றான். இத்ததியே இவனை கைவசப்படுத்த வேண்டுமென்று திடீரென ஓடிவந்து ஆ! எந்தன் ஆசைநேச விஸ்வாசமிருந்த மருமகனே வருவீரென்று கையைப்பிடித்து அழைத்துக்கொண்டு உப்பரிகையிற்சென்று முத்துமாலைக்கு இவன்வருகையைத் தெரிவித்தனர், அந்த தாசியும் அதிவேகமாய் ஓடிவந்து செந்தமிழ் கவிராஜனுக்கு வந்தனோபசாரம் புரிந்து ஐயாநீர் யாவரென்று வினவினள். அவன் இவளுடையஅழகை வர்ணித்துச் சொல்லவதற்கு ஆதிசேடனாலு மாகாதேயென்று மனமயக்கமுற்றவனாய்ச் சொல்லவதாயினன்.

செந்தமிழ்கவிராஜர்:—பெண்ணே! யான் தென்தேசத்தினன் எமது வம்ஸத்தினர் கல்வியிற்றேர்ந்த கவிராஜர்களேயாகும் அன்றியும் வாழையடிவாழை வளருந்தன்மையாய் எமது சந்ததி பெருகுவதற் கிசைந்தனவாய் யாங்கள் நான்கு சகோதரர் பிறந்து வளர்ந்து தேசமெங்ஙனும் சுற்றித்திரிந்து கவியில் வல்லவரென அநேக புலவர்களையும் கொண்டு அரசர்களிடமும் தனவந்தரிடமும் வெகுமதி பெற்றுக்கொண்டு பலதேசமுந் திரிந்து ஜெயிப்பவரில்லாமற் கீர்த்திவாய்ந்தவராய் யாங்கள் நான்கு சகோதரரும் இந்நகரத்தில் வந்தோம்.

முத்துமாலை:—சரி! அவ்விதமாயின் மற்றமூவரும் எங்குசென்றிருக்கின்றனர்?

செந்தமிழ்கவிராஜன்:—பெண்ணே! அவர்கள் அடுத்த தேசங்களிற் பிரசங்கம் செய்யப் போயிருக்கின்றனர்.

முத்துமாலை:—அவர்களென்ன கல்விக்களஞ்சியமோ? உம்மை ஜெயிப்பவ ருலகிலில்லையோ? நீங்களென்ன கவிப்புலியோ?

செந்தமிழ்கவிராஜர்:—ஆ! அதற்கென்ன சந்தேகமா? எங்களை வெல்பவரும் வையகத்திலுளரோ? யாங்கள் நால்வரும் கவிராஜசிங்கங்களென்று உலகிலுள்ள கலைவாணரும் மனமிரங்கின்றனரே. [illegible] நீ கவனித்துணர்திலாய் அவர்களில் யான் [illegible] [illegible] கண்டசுத்தியும் பாடுவேன்.

முத்துமாலை:—சரி! சரி!! சமயத்திற்கிசைந்த ஞாபகப்படுத்தினீர்? நல்லது! கண்டசுத்தி என்றால் என்ன? அதுவும் ஓர் பாட்டு தானோ!

செந்தமிழ்கவிராஜன்:—சீச்சீ! கண்டசுத்தியென்றால் சாதாரணமானபாடலாகுமோ? பேதாய் யாதாமொருவன் மனவிசாரமாயிருந்தால் அவனுக்குற்ற சங்கதியனைத்தும் சற்றேனும் விடாமல் பாடலாகப் பாடுவது இதுதான் கண்டசுத்தியாகும்?

முத்துமாலை:—சரி! அப்படியானால், இந்நகரத்தின் மன்னனுக்குற்ற விசாரத்தைப்பாடும் கவனிப்போம்.

என! தந்திரோபாயமாய் வினவினள். செந்தமிழ்க் கவிராஜன் அவள்மீதிருக்கும் மோகத்தினால் மனமயங்கிபெண்ணே! எனதுகாதலைத்தவிர்ப்பாயாகில் உன்னிஷ்டப்படியே இந்கரத்தரசனுக்குற்ற மனவிசாரத்தின் காரணத்தைக் கண்டசுத்தியாய்ப்பாடுகிறேனென்றனன். முத்துமாலை இதுதான் சமயமென்று சந்தோஷமுற்று அன்றயதினம் அவனுக்கு நல்ல விருந்தமைத்து பகற்பொழுதனைத்தும் அவனுடன் விளையாடிக்கொண்டிருந்து இரவில் மலரணைமஞ்சம் ஜோடித்து முத்துமாலை தாசி செந்தமிழ் கவிராஜனை அழைத்துச்சென்று சரசசல்லாபமாயிருக்கையில், தாசி சொல்லுவதாயினள்.

முத்துமாலை:—சரசா! யான் உமது காதற்றணித்தேனே. இனியாகிலும் இத்தேசத்தின் அரசன் மனவிசாரத்தினைக் கண்டசுத்தியாய்ப்பாடுவீர்.

என, பகர்ந்தவை வினவிய கலைவல்லோன் சற்றுநேரம் ஆலோசனை புரிந்து, மன்மதகாந்தனுக்குற்ற மனவிசாரம் விபசாரியாகிய குமரியின் குரூரசேஷ்டையென் றெண்ணி சகலமும் ஞானதிருஷ்டியா லுணர்ந்து, எனதன்பிற்கினிய காதலி! கவனிப்பாய்,

விருத்தம்.

தாஷ்டிகமுள்ள தீரன் தர்மத்திற்சிறந்தமன்னன்
வேட்டையாடுதற்கன்னுளில் விரும்பியேசெல்லும்போது
மேட்டியாயுலாவிநின்ற மெல்லியைக்கண்டுசொக்கி
காட்டினில்நிகழ்ந்தசேதி கழறினன்மந்திரிக்கே. (1)

மந்திரி அரசனுக்கு மாதினை மணந்தபின்னால்
சுந்தரமன்னனுந்தான் சூழும்நன்மோகத்தாலே
அந்தமாம்மலர்செண்டாலே அடித்தனனவள் திகைத்து
விந்தையாய்க்களைத்துவீழ்ந்தாள் விபசாரகுமரிதானும் (2)

குமரியான் மனத்துள்வாய்ந்த குறிப்பினையறியாமன்னன்
தமதுநன்மோகந்தீர தையலாள்உதவாளென்று
சமர்முனைசிக்கிநிற்கும் சஞ்சலமனத்தோன்போல
இமையிலாவிழித்திருந்தான் இரவினைக்கடிந்தேமன்னன். (3)

கடிமலர்செண்டுநொந்து கணவனன்கதியைக்காய்ந்து
இடியெனச்சோர்ந்துவீழ்ந்தாள் இருதயந்துடித்திளைத்து
மூடவன்பாற்சிக்கிமன்னன் மூன்னுதாய்சுற்றிக்கொண்டு
அடிபடக்கண்டதெல்லாம் அம்பலத்ததிசயந்தான் (4)

வர்ரிடைபிடிங்கிமூட்டி வளரிளங்கொடியாள்நங்கை
நீரினையெரித்துச்சென்றும் நீதியில்லாதபாவி
காரிளங்கூந்தல்பற்றி கையினாலடித்துதைத்தும்
நாரியாள்மூடன்தன்னை நாயன்போல்மதித்திருந்தாள் (5)

வெண்பா.

கம்பத்தூணுட்டிக் கனகவிளக்கெரிய
செம்பொன்அமிளியின்மேற் சேராமல்செம்புருள்
புல்லூரல்வாரி புகைச்சல்புகைந்தனளே
கல்லுருளமுத்துருளக் கண்டும்.

என, செந்தமிழ் கவிராஜனனவன் மன்மதகாந்தன் மனவி சாரத்தைக் கண்டசுத்தியாய்ப் பாடியதைக் கேள்வியுற்ற தாசியர்கிய முத்துமாலை சற்று நிதானித்து அடடா! இனி நமக்கு நற்காலம் வந்தெய்திய தென்னு மனேல்லாசத்துடன் அவன் நித்திரை புரியுந் தருணம். 'ஆத்திரகாரிக்கு புத்திமட்டு என்பதுபோல' அவன் கழுத்தை அறுத்து கட்டிலிற்றனே வைத்துவிட்டு, கதவைமூடி தாளிட்டு வெளியே வந்துய ஆடை ஆபரணம் அணிந்துக்கொண்டு, இராஜ முசகத்தில் வந்து தனது வருகையைத் தெரிவித்து, அரசன் மனக்குறிப்பினைக்கண்ட சுத்தியாய் பாடுவேனெனப் புகன்றனள். மன்மத காந்தன் சந்தோஷித்து அச்சமயமே சகல தேசத்தரசரையும் வரவழை

த்து குமரியையும் மூடவனையும் சபைமத்தியில் நிற்கச்செய்து, தாசியை அவர்கள் பக்கத்தில் நின்று தனது மனவிசாரத்தைக்கண்ட சுத்தியாய்ப்பாடும்படி ஆக்ஞாபித்தனன். அச்சமயம், தாசியாகிய முத்துமாலையானவள் சொன்னதை சொல்லும் கிளிப்பிள்ளை யென்பது போல நேற்றிரவு செந்தமிழ் கவிராஜன் கற்றுக்கொடுத்த கண்ட சுத்தியைப் பாடலாயினள்.

இங்ஙனம் இவ்விதமா யிருக்கையில், கவிராஜனுடைய சகோதரர் மூவரும், அந்நகரில் வந்து குறிப்பித்த இடத்தில் தமது மூத்தவனைக்காணாமல் விசனமுற்றிருந்தனர். அன்றியும் அன்றையதினத்தில் அந்நகரத்தரசன் அரணில் யாவரோ? கண்ட சுத்திபாடுவதாகக் கேள்வியுற்றதை ஆனால், தமது தமையன் தவிர மற்றவரால் முடியாதென்று இவர்கள் கவனித்தவராயினும் வல்லோரினும் வல்லோருலகிலிருப்பாரென மதித்தவராய் மிகவும் ஆவலுடன் தமது மனவிசாரத்தியல்பினைக் கண்ட சுத்தியாய் பாடும்படி கேட்போமென அரண்மனையில்வந்து சபையோரைப் பார்த்து, ஐயா! எமது மனக்குறையொன்றுளதாயது அவற்றையும் இவ்வம்மையார் கண்ட சுத்தியாய்ப் பாடவேணுமென பிரார்த்தித்தனர். இவர்கள் வாய்மையைக் கேள்வியுற்றவனைவரும் அவ்வாறே யாகுகவென தலையசைத்தனர். மந்திரி பிரதானியரும் நன்கென்றிசைத்தனர். அச்சமயம் அரசன் தாசியைப்பார்த்து பெண்ணே! நீ என்கருத்திலுற்றவை யனைத்தும் கவியாய்ப் புகன்றனை ஈதனைத்தும் உண்மையேயன்றி பொய்யல்ல, ஆயினும் இம்மூவரின் மனதிலுற்ற சஞ்சலந்தீர இவர்கட்குற்றவையும் கண்ட சுத்தியாய்ப் பாடுவாயென் றுக்ஞாபித்தனன். அவ்வார்த்தையைக் கேள்வியுற்ற தாசிக்கு நரஹத்திசூழ்ந்து மனமிருளச் செய்ததுமன்றி, ஈதென்ன விபரீதம்? இத்தனை லக்ஷம் மனிதரின் மனத்துள் விளங்கும் சங்கதியனைத்தும் வெளிப்படுத்துவதெனின் யாவராலாகும், ஈதென்ன விந்தை ஆழமறியாமற் காலிட்டு ஆற்றில் வீழ்ந்து தத்தளிப்பது போலாயிற்றே யென மனந்திகைத்து எந்தப்பக்கம ஓடிப்போவோமென எட்டுத்திசையும் சுற்றிப்பார்த்து போனுக்குட் சிக்கிய புலியைப்போற் சுற்றிலுமிருக்கிற சபையோர் முன் திருட்டுவிழி விழித்துக்கொண்டு கையைமுறிப்பதும் வயற்றைப்பிசைவதும் வாயை மெல்லுவதுமாய் வெறிபிடித்தவள்போலிருப்பதைக் கண்ணுற்றோரனைவரும் வியப்புற்றவராய் ஈதென்ன விந்தை

இந்நகரத்தரசன் இந்த தாசியை மிகவும் புகழ்ந்து கண்ட சுத்திபாடுவதிற் சிறந்தவளென் றுரைத்தனரே. இவளென்ன இப்படிபேய்போல் விழிக்கின்றாளேயென ஆலோசித்துக்கொண் டிருக்கையில் அரசன் சந்தேகித்து பெண்ணே! என்ன இந்நேரமாய்த் தாமதிக்கலாயின? தீவிரமாய்ப்புகலுகவென கடிந்துரைத்தனன். அத்ததி வஞ்சகவேசியின் நெஞ்சந்திடுக்கிட்டு, ஐயோ! இனி என்ன செய்வேனென்றழுதனள். அரசன் ஆச்சரியமடைந்து பெண்ணே! நீ கண்டசுத்திபாடுவதிற் சிறந்தவளென சிலாகித்திருக்க, இத்ததி நீ திகிலுற்றவளாய்த் திகைத்தழுங்காரணம் யாதென வினவுதலும் அவ்வஞ்சகி புகலலாயினள்.

முத்துமாலை:—அரசே! பிரம்ம சிருஷ்டியா லுற்பவித்த மாந்தர் நரை, திரை, மூப்பு, சாக்காட்டிற் குட்பட்டவராயிற்றே. அத்தகைய மாந்தரில் யானும் ஒருத்தியல்லவோ? அன்றியும்பேதமையென்பது மாதர்க்கணிகலமென்பது யாவருக்குந் தெரிந்த விஷயந்தானே அவ்வித அற்ப ஜீவனான யான் ஒருவர் மனதிலிருப்பதை எவ்விதமாய்ப் புகல்வேன்?

அரசன்:—ஆ! ஈதென்ன விந்தை என் மனதிலுற்றவை யனைத்தும் கண்டசுத்தியாய்ப் புகன்றனையே? இத்ததியேன் இவர்கள் மனக்குறிப்பினைப் புகல்வதற் கியலாதென்கின்றனை? இதை கவனிக்கின் உன்னிடமும் யாதோ சூது நிகழ்ந்திருக்கின்றன. உண்மையைப் புகலாவிடில் உன்னை சித்ரவதை செய்வேன் துன்மார்க்கி.

முத்துமாலை:—அரசே! யான் உண்மையைப் புகலுதும் கவனிப்பீர். அஃதியாதெனின், நேற்றிரவு ஓர் செந்தமிழ்க்கவிராஜரொருவர் வந்திருந்தனர். அவரிடம் சற்றுநேரம் சம்பாஷித்துக்கொண் டிருக்கையில் தான் கண்டசுத்திபாடுந்திறமை வாய்ந்தவரெனப்புகல, யான் இந்நகரத்தரசனுக்குற்றவை யனைத்தும் கண்டசுத்தியாய்ப் பாடுவீரென வினவினேன். அவர் தமதுகவிசாதுர்யத்தினல் ஆறுபாட்டு பாடினார். அவற்றையான் கற்றுக்கொண்டு வந்து சபையோர் முன் புகன்றேன்.

அரசன்:—ஆ! அப்படியா! மந்திரி! பிரதானியரே கேள்வியுற்றீரோ? பெண்களைக் கினவிலும் நம்பலாகாதென்பது சரியாயிரு

க்கின்றனவே. நல்லது இவற்றைபின்னால் விசாரிப்போம் பெண்ணே இச்சமயம் அவரெங்கிருக்கின்றனர்.

**முத்துமாலை**:—அரசே! அவர்யாதோ மனவருத்தத்தால் தனது கழுத்தை யறுத்துக்கொண்டிறந்தனர்.

**அரசன்**:—அடீ! பாதகி நீயே அவனைக்கொன்றிருப்பா யென்பதற்கு ஆக்ஷேபணையில்லை அவருடையசரீரத்தை யெங்குஅடக்கஞ் செய்தனை?

என, சொல்லி வாய்மூடு முன்னே அருகிலிருந்த மூவரும்வாய்விட்டலறி தாசியின்வீட்டை விசாரித்துக்கொண்டுபோய் கதவை எட்டியுதைத்துப் பேர்த்தெரிந்துவிட்டு கட்டிலின்மேல்வெட்டுண்டிறந்துகிடக்கும் செந்தமிழ்கவிராஜனை மூவரும் கட்டிலுடனெடுத்து தலைமீதிற்சுமந்துகொண்டுவந்து சபையிலிறக்கிவிட்டு தலைவிரிகோலமா அழத்தொடங்கினர்.

விருத்தம்.

தன்னகர்விடுத்துயாமும் தனிமையாய்தேசஞ்சுற்றி
பொன்பொருள்சேகரித்து போய்விடுவோமென்றாலும்
சொன்னசொற்கேளாமற்றான் சேர்ந்தீரிந்நகரிலண்ணா
உன்னிடகழுத்தறுத்து உயிர்தனைபிரித்தாள்வேசி. (1)

பன்னுமாமறைகளோதும் பரமனுக்கினிமையாக
நன்மையாய்பிரணவத்தை நவின்றிடுந்தகப்பன்சாமி
தென்திசைதனில்விளங்குந் திருத்தணிமுருகா எங்கள்
அண்ணனையெழுப்பித்தந்து ஆதரித்திரக்ஷிப்பீரே. (2)

மாரனைஎரித்தஈசன் மறுபடியெழுப்பிவிட்டார்
வீரமாய்யமர்க்களத்தில் வீழ்ந்தவரனுமாராலே
தீரமாயுயிர்ப்பெற்றாரிச் சிவனையெழுப்புதற்கு
பாரமோயுந்தனுக்கு பார்வதியருள்சுபுத்ரா (3)

என மூவரும் கண்ணீர்த்ததும்பக் கதறியழுது கரங்குவித்துநிற்கையில், அரசனும் மந்திரிபிரதானியரும், சபையிலிருப்பவர்களும் விசனசாரெத்தி லாழ்ந்தினவராய் துயரப்படுகையில் கருணாகரனாகிய கந்தஸ்சுவாமி கடைக்கண்பார்வையாய் செந்தமிழ் கவிராஜன் மீது கிருபைகூர்ந்து இவன் உயிர்பெற்றெழுந்திருக்கவென்று அனுக்

கிரகம் புரிந்தனர். அச்சமயம் தாசியால்வெட்டுண்ட சரீரம் ஒன்றாய் சேர்ந்து ஒட்டிக்கொண்டு பிரிந்த ஆன்மாஜடத்திற் புகுந்து பிராணு தாரமானவுடனே செந்தமிழ்க்கவிராஜன் உயிர்பெற்றெழுந்தனன். இவ்விநோதத்தை கண்ணுற்றோரனைவரும் வியப்புற்றனர் அரசன் மந்திரிபிரதானியரனைவரும் ஆச்சரியமடைந்தவராய் அவனை வினவுதலாயினர்.

அரசன்:—ஐயர்! நீர் யாதுகாரணமாய் வெட்டுண்டிறந்தீர்?

செந்தமிழ்கவிராஜன்:—அரசே! யானென்னவென்று சொல்வேன்? இந்நகரின்கொடுமையை; மானிலம்புரக்கும் மகிபாயாங்கள் நால்வரும் தென்தேசத்தினர் தமிழில் வல்லவரானபடியால் சகலதேசமும் சுற்றித்திரிந்து கவிஞருடனெதிர்த்து ஜெயம்பெற்று இந்நகரில்வந்தோம் யாம் ஓர் தாசியின்வீட்டிற்சென்றுஇந்நகரத்தரசனின் மனக்கவலையைக்கண்ட சுத்தியாய்ப்பாடினேன் அந்தப்பாதகி யான்நித்திரைசெய்யுந்தருணம் கூர்மையானகத்தியினால் கரகரவென என்கழுத்தை அறுத்துவிட்டனள். ஈதென்ன அநியாயம்? இந்நகரத்தியல்பு இத்தகையதாய் விளங்கினால் மனுநீதிமுறைக்கியன்றதாகுமோ?

என, தனது சவிஸ்தாரமும் தாசியினாலடைந்த ஆபத்தும் ஆதிபோடந்தமாய்ப் புகன்று விசனசாகரத்திலாழ்ந்தவனாய் பரிதாபத்துடன் பகர்ந்தவை வினவிய அரசன் ஆலோசித்து, அச்சமயமே! அந்தத் தாசியைப்பார்த்து அடீ துன்மார்க்கி! நீ செய்த அநியாயத்திற்கு என்னவிதமாய் தண்டித்தாலும் என்கோபந்தீராதென்று அருகிலிருந்த மந்திரியினால் கொலைஞரை வரவழைத்து அடா! நீங்கள் இந்தப்பாதகியை சித்ரவதை செய்வீரென்றாக்ஞாபித்தனன் அவர்களும் முத்துமாலையை கொலைகளத்திற்கு அழைத்துச்சென்று அரசன் உத்திரவின்படியே சிரச்சேதம் செய்துவிட்டனர்.

அப்பால் அரசன் செந்தமிழ்க் கவிராஜனைநோக்கி நீர் தன்மனவிசாரத்தினைக் கண்டசுத்தியாய்ப்பாடி அவற்றின்விபரங்களும் சபையோர் கவனிக்கும் விதமாய்ப்புகல்வீரென்க, கலைவல்லோன் மகிழ்வெய்தி * புரவலன் மனதின்படியே குமரியாலுற்ற கொடுமையனைத்தும் முத்துமாலை தாசியினிடம் புகன்றவையோற் கண்டசுத்தியாய்ப்பாடி அவற்றின் காரணாதிகளும் வழுவின்றி ஒன்றேனும் விடாமல் ஆதியோடந்தமாய்ப் புகன்றனன். இவ்விபரீத அநியாயத்தைக் கேள்

* புரவலன்—இராஜன்.

ன்று அவனை வம்பானவார்த்தைகள் பேசிவிட்டுதாசி வீட்டைவிட்டு தன்னிருப்பிடம் வந்து இருவரும் ஒன்றாய்க்கலந்து தான் போய் வந்த சங்கதிகளெல்லாம் விபரமாய் தெரிவித்து தான்கொண்டுவந்த ஆடையாபரணங்களை யெல்லாம் எடுத்துகாண்பித்தான் இருவரும் சந்தோஷமாயிருந்தார்கள்.

அப்படியிருக்கப் பொழுதுவிடிந்து சூரியுதயமானது அவ்வேளையில் நாலாங்கொத்து நாகாளானவள் தன்வீட்டுக் கடுத்தவீட்டுத் தாசி நாகாள் துலாவில் நிற்பதைக்கண்டு கொல்லைவழியிற்போய் நுழைந்துப் பார்க்கையில் மந்திரிகட்டுண்டிருப்பதைக் கண்டு இதென்ன அனியாயமா யிருக்கிறதென்று தெருவாசற்கதவைப் போய்த் திறந்தாள் அப்போது தெருவிற்போகிறவர்களெல்லாம் போய்ப்பார்த்து வியப்படைந்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருப்பது அந்நகர முழுவதுக்தெரிந்து கூக்குரலாகி இராஜனுக்குத் தெரிந்தது அப்போது இராஜனும் மற்றுமுள்ளவர்களும் நாலாங்கொத்து நாகாள் வீடுவந்து மந்திரியைக்கண்டு ஏதுபிள்ளாய் மந்திரி திருடனைப்பிடித்து கட்டிவிட்டாயோவென்று இரான்கேட்டான் அப்போது மந்திரிவெட்கி இராசனைப் பார்த்துச் சொல்லுகிறான் கேளுமையா சுவாமி எனது தாசியையும் வேலையாக்கி அவள் பொருள் யாவற்றையுஞ் சுற்றிக்கொண்டு எனதாடையாபரண முதலானதும் பறித்துக்கொண்டு என்னை இக்கோலமாக்கிவிட்டுப் போனானென்று சொன்னான் அப்போது இராசனுக்குக் கோபமுண்டாகி யாவர்களையும் பார்த்துச்சொல்வான் இப்பேர்ப்பட்ட ஜெகஜாலத் திருடனை இன்றிராத்திரிக்குப் பிடித்துக்கட்டி அவனுக்குத் தகுந்த ஆக்கினை செய்யாமற்போனால் நான் இராசன் தானோவென்று வகையான வார்த்தைசொல்லி சபதமிட்டு மந்திரியை அவிழ்த்துவிட்டு இராஜன் அரண்மனை போய்சேர்ந்தான் மற்றவர்கள் அவரிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள் அன்றையதினம் சூரியனஸ்தமித்தவுடன் மாயாதிருடரிருவரில் இன்னொருவன் இன்றிரவு நான்போகிறேனென்று சாப்பிட்டு புறப்பட்டு கடைத்தெருவில்வந்து இந்த ஊரில் என்ன அதிசயமென்றான் அங்குள்ளவர்கள் சொல்லுகிறார்கள் கேளாய் வழிப்போக்கனே எட்டாளைக்குமுன் கெம்புகல், புஷ்பராகக்கல், பச்சைக்கல், இதுகளை அபகரித்துக்கொண்டு போய்விட்டார்கள். மூன்றும்தினம் தலையாரி மகள் தூங்கிக்கொண் டிருக்கும்போது கட்டிலோடு தூக்கி

ஞர்கள் அவள் விழித்துக்கொண்டு கூச்சலிட்டாள் விட்டுவிட்டு ஓடிப்போய்விட்டார்கள். நேற்றையதினம் இராத்திரி மந்திரியை மோசஞ்செய்து அவனுடைய ஆடையாபரணங்களையும் அவனுடைய தாசியினிடத்திலும் சிலபொருள்களை திருடிக்கொண்டு ஓடிப்போனுனுகையால் இன்றிரவு அத்திருடனை இராசன் பிடிக்கிறதென்று சபதமிட்டிருக்கிறர். இதுதான் அதிசயமென்று அங்கிருந்தவர்கள் சொல்ல அப்போது மாயாதிருடன் பலசரக்குவிற்குங் கடைக்குப்போய் பாக்கு வெற்றிலை புகையிலை தின்பண்ட முதலியதும் நாலைந்து ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு பெட்டிபேழைகளும் தண்ணீர் தொட்டிகளும் விளக்கு கூண்டு விளக்கெண்ணெய் இவையெல்லாமோர் ரெட்டுப்பையி லடக்கஞ்செய்து இரண்டு ஓலைப்பாயும் வாங்கிக்கொண்டு ஓர் கோமட்டிபோல வேடந்தரித்து இரவில் ஒரு சாமத்துக்குமேல் அந்நகரத்திற்கு கூப்பிடுந்தொலைக் கப்புறத்தில் தன்னூருக்குப்போகும் வழிமார்க்கத்திற்போய் இரண்டுபாயும் விரித்து அதின்பேரில் வெற்றிலை முதலிய தின்பண்டங்களைப் பரப்பி விளக்கேற்றி கூண்டில்வைத்து அந்நகர் மூலமாய் கடைவைத்திருந்தான் அந்நேரத்தில் ராசனெழுந்து முப்பதுதலையாரிகளுடனே தான் பஞ்சகலியாணி குதிரைமேலேறிக்கொண்டு திருடனைப் பிடிக்கவேண்டுமென்னும் விருப்பத்தால் அந்நகர முழுதுஞ் சுற்றிப்பார்க்கையில் கள்ளனகப்படாமையால் நகருக்குவெளியில்வந்து பார்க்கும்போது ஓர் தீபவெளி தோன்றியது அவ்வொளியைப்பற்றி இராசனும் தலையாரிகளும் போய்க் கடைவிற்கும் மாயாதிருடனுகிய கோமட்டியைக் கண்டு இங்கென்ன கடையென்றிராசன் கேட்க முழுத்திருடன் பயந்தவன் போலெழுந்து கேளுமையா சுவாமி நான் தினந்தோறும் இந்நேரத்தி லிவ்விடத்தில் கடைவைத்திருக்கிறதும் இம்மார்க்கத்தில் சில கள்ளர்வந்து இப்பட்டணத்தில் திருடிகொண்டு என்னிடம் வருவார்கள் அப்போது அவர்கள்கேட்குந் தின்பண்டங்களும் பாக்கு வெற்றிலை புகையிலை இவைகள்கொடுப்பேன் அவர்கள் வாங்கித்தின்று இருந்திளைப்பாறி சிலபொருள்கள் நகைகள் முதலியது கொடுப்பார்கள் இவைகளை வாங்கிக்கொண்டு போகிறது ஒரு வாரத்திற்கு முன் குடியானவர்களிடத்திலும் மூன்றுனளிரவு தலையாரி மகளிடத்திலும் நேற்றிரவு மந்திரியிடத்திலும் திருடிக்கொண்டு வந்ததாய்ச் சொன்னுன். இன்றைக்கும் இராஜனிட பொக்கிஷத்திற்றிருடுவதாய்ச் சொல்லிக்கொண்டு போனுன் அவன் தனியாக

இம்மார்க்கத்தில் வருவான் ஆகையால் நானிங்கு கடைவைத்திருக்கிறேனென்றான் இவ்வாக்கியத்தைக் கேட்ட ராசன்யோசித்து இந்த செட்டியார் அத்திருடனைப் பிடிக்கவேண்டுமென்று இவனை நட்புக்கொண்டு இராசன் சொல்லுகிறான் வாராய்செட்டியாரே நீ அத்திருடனைப் பிடித்துக்கொடுப்பாயாகில் உனக்குவேண்டிய பொருள்கொடுத்து சில கிராமங்களும் விடுகிறேன் இதற்குயோசனை யென்னவென்று இராசன் கேட்டான் அப்போது மாயாதிருடனாகிய கோமுட்டி சொல்வானப்படியே யத்திருடனைப் பிடித்துக் கொடுக்கிறேன் என்யோசனைப்படி தாங்கள் செய்வீர்களாகில் அத்திருடனைப்பிடிக்கலாமில்லாவிடி லவனைப் பிடிக்கமுடியாது அந்த யோசனையெப்படியென்றால் நீர் மாத்திரம் என்னிடமிருக்கவேண்டும் மற்றவர்கள் திக்குக்குப் பத்துபெயரால் மூன்று திக்கில் மறைவாகயிருக்கவேண்டும் மற்றோர் திக்கில் அவன்வருகிற வழியானபடியால் அப்பக்கத்தில் ஆளரவமாகாதென்று திருடனாகிய செட்டிசொல்ல ராசன் அக்கருத்துக்கிசைந்து மூன்றுதிக்கிலும் பத்துதலையாரிகளனுப்பி மறைவாக யிருக்கும்படிசெய்து ராசன் செட்டியிடமிருந்தான் அப்போது செட்டி சொல்வான் வாருமையாசுவாமி தாங்களிப்படி யிருந்தால் வேற்றாளிருக்கிறதென்று திருடன் வரமாட்டான் ஆகையால் தாங்கள் ஆடைமுதலிய பூஷணாதிகளெல்லாம் கழற்றி என்னிடத்தில் வைத்துவிட்டு யிந்த ரெட்டுப்பைக்குள் நுழைந்துக்கொள்ளும் திருடன்வந்தவுடனே பைக்குள் சரக்கெடுக்கும் பாவனையால் பையை அவிழ்த்துவிடுகிறேன் அப்போது நீரவனைப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும் அப்போது நான் கூச்சலிடுகிறேன் அந்தச் சத்தங்கேட்டுத் தலையாரிகள் வந்தவுடன் அவனைக்கட்டிக்கொண்டு போகலாமென்றான் ராசன் அக்கருத்துக்கிசைந்து கண்டிசரப்பளி மோகனமாலை அஸ்தகடகம் ஆடைமுதலிய ஆபரணாதிகளெல்லாங்கழட்டி ஓர் முடிப்பாய் முடிந்து மாயாதிருடனாகிய கோமுட்டி கையில் கொடுத்து ரெட்டுப் பையினுள் நுழைந்துக்கொண்டான் அப்போது திருடனாகியசெட்டி அந்த ரெட்டுப்பையின் வாயைக் கயிற்றாற்கட்டி ராசனுடைய ஆடையாபரணம் பூஷணாதிகளெல்லாஞ் சுருட்டிக்கொண்டு தண்ணீர்ச்சாலை யெடுத்து ராசனுழைந்த ரெட்டுப்பையின்பேரில் கவிழ்த்து விட்டதுமன்றி விளக்கையும் நிறுத்திவிட்டு தன்னூருக்குப் போகும்படியான வழியாய் அதிசீக்கிரமாய் நடந்துபோனான் அப்போது இராஜன் தண்ணீர்ச் சாலுக்குள் அகப்பட்டுக்கொள்ள

விளக்கும் அணைந்துபோய்விட ஒகோ கள்ளன் வந்தாப்போலிருக்கு மென்று பதுங்கியிருந்த தலையாரிகள்முப்பதுபேரும் ஓடிவந்து ஒரு திருடரென்று பிடிக்கிறதும் அடிக்கிறதும் இப்படி ஒரு முகூர்த்த காலம் இவர்கள் மற்கட்டிச்சேருகிற அதிர்ச்சியால் தண்ணீர் சாலு டைந்து ரெட்டுப்பையைக் கண்டார்கள் அப்போது இராசன் பைக் குள் பெருமூச்செறிந்து அதிக வருத்தத்துடனிருந்தான் அப்போது தலையாரிகள் ஒருவரையொருவர் பார்த்து திருடனில்லாமையால் யாவருமொன்றுபட்டு நமதுராசனெங்கேயென்று பார்க்கும்போது ரெட்டுப்பைக்குள் பெருமூச்செறிவதைக் கண்டு ஒகோ இதென்ன அதிசயமா யிருக்கிறது இந்த ரெட்டுப்பைக்குள் மனிதனிருப்பதா ய்த் தோன்றுகிறதென்று அவிழ்த்துப் பாக்கும்போது இராசனு யிருந்தது அப்போது தலையாரிகள் ஏதுசுவாமி இவ்விதமாயிருந்த தென்றுகேட்க அப்போது ராஜன் சாலில்மூடப்பட்டதினாலும் தலை யாரிகள் மிதிப்பட்டபடியாலும் வெட்கத்தினாலும் வாய்பேச இடமி ல்லாமலிருந்தான் அப்போது தலையாரிகள் இராசனை கைதாங்கலா கக் கூட்டிக்கொண்டு அரண்மனை போய்ச்சேர்ந்தார்கள் பின்பு மாயாதிருடன் இராசனுடைய ஆடைமுதலிய பூஷணாதிகளெல்லாம் எடுத்துக்கொண்டு தன்னுடைய இருப்பிடத்திற்குப் போய் இருவ ரும் ஒன்றாய்க்கலந்து ஒருவருக்கொருவர் தாங்கள் செய்தசெய்கை மனதிடமாக நினைத்துக்கொண்டு ரொம்பவும் சந்தோஷத்துட னிரு ந்தார்கள்.

## பகல்வேஷ மாயா திருடர்கள் ஊரை ஏமாற்றிய

---

## தேவர்கள் துதி விருத்தம்.

அப்பனே ஆளிவாயா! (1) அரகரா (2) பாதிமூஞ்சி!
தப்பில்லா (3) எட்டுக்கண்ணு! தறிதலை (4) ஒற்றைப்பல்லா!
ஒப்பிலா (5) ஒருடஜன்கை யுள்ளவா! நீங்களெல்லாம்
இப்பொழுதே என்னுவில் இறங்குவீர் சீக்ரம் சீக்ரம்!

## விகட வேடிக்கை கவி.

விரிபுவன மெண்டிசை விளங்குமன் பதைகட்குள்
  வித்வஜனர் கரமலர்கள்மேல்
விளையாடி மிருகளிப் பூட்டும் விவேகியே
  விகடதூதக்குருசிலே!
விஜயகேதன நாட்டி யதியுகழ் பராவுமின்
  விகடசபை யோர்கண்டுவில்
விபரீத கவிவாண னையானின்று முதல்
  வேடிக்கை பேசவந்தேன்
பரிவுமிகுமெனது சாமர்த்திய மென்னென்னிலோ
  பகருவேன் கேண்மி னொழியாப்
பகைகொண்ட பிரம்மசிவ விஷ்ணுவாம் மூவரையும்
  பாகசாலையி லடைத்துப்
பானைசட்டிகளோடு கூட்டிவைப்பேனந்த
  பார்வதியை மிதிமிதி யெனப்
பகடுகாலால் துவைப்பேன் லக்ஷ்மியின் முதுகில்
  பாய்கட்டி யோட்டிவருவேன்
தெரியவருமேசுவை கடித்துதறி மறியைசிறு
  சிறுதுண்ட மாகவெட்டிச்
செறிவாக உப்புமிளகாய்போட்டு வாட்டித்
  திமிர்த்திக் கடித்துமெல்வேன்
திகழ்பரவு மகமதுவை சீசாவிலேயடைத்
  தேவாயில் உட்கொள்ளுவேன்
சீர்த்திமிகு சூர்யசந்திராதிகளை காத்தோடு
  சேர்த்தறுக் கொணர்ந்து

(1) நரசிம்மாவதாரன் (2) பார்வதிசமேதன் (3) சதுர்முகன் (4) விநாயகமூர்த்தி (5) பன்னிருதோளன்.

பொரியென பொரித்துவாயில் கொட்டிக்கொள்ளுவேன்
புலியைநன்றாய் அறைத்துப்
புருஷர் பெண்சாதிமேல் பூசுவேன் யானையைப்
போட்டிடையில் கட்டிக்கொள்வேன்
பொலிவாக குதிரை குட்டிகளை வாயிற்போட்டு
பூரித்து மென்றுவிடுவேன்
பூவுலகிலிவ்வளவு மகிமை வளரென்னைப்
புகழ்ந்திதற் குரைசெய்வீரே.

வெண்ணைவெட்டி.

---

## இதற்கு அர்த்தம்-விருத்தம்.

பிரமாசிவன்விண்டு பாரவதியிலக்குமிப் பேசுமறிமகமதுவும்-பின்சூர்யசந்திரர் புலியானைகுதிரைக்குட்டி பேணிமுறையேகநந்தி-திரமாமரிச்சேறு கமலைகுற்றத்தோடு சேருமருணம்பிரசமீ-செங்கதிரவாத்தரும் வெண்கதிர்ச் சந்தளவில் சீர்தூசுமாவிளமையுஞ்-சிரமாஞ்சலம்பூசனித்தண்டு லங்குழைத் தெண்டிரை முனிந்தநற்றல்-சீராருமெலுமிச்சை தேனிறுங்குச்சாந்து சேர்படாவாழை காய்பிஞ்-சுரமாம்பதத்துக்கு பிரதிபதமும்மதற் குரியபொருளுங் கூறிணும்-ஒதரிய வெண்ணைவெட்டிக்கவித் திவ்வுரைகளோர்காற்பொருந்திவிடுமே.

செய்யுள் நேசன்.

---

## கோழிக்கறி—துண்டு.

நாழிப்பருப்பிட்டு நான்கு மரக்கறி நன்குடனே
தாளித்திறக்கச் சமைத்தாலுமே அதில் சாரமுண்டோ
காளிக்கும் பூஜையிடலாகும் நல்ல கறிவகையில்
கோழிக்கறிக்குச் சரியோ மரக்கறி கூட்டங்களே.

---

# விகட வெற்றிவேற்கை.



வேற்றிவேர்க்கை வீராராமன்
கொற்கையாளி குண்டிசட்டிராமன்
தெற்கேயிருந்த தென்னூராமன்
சொற்படிகேளா துன்னபோத்துராமன்
தற்புத்தியில்லா சாப்பாட்டுராமன்
பிற்புத்திபடித்த பெருந்தடிராமன்
இப்படிப்பட்ட யெல்லாராமரும்
நற்றமிழ்தெரிந்தோர் நாங்களேயென்று
அற்பமாய்படித்த அரும்புலவோர்முன்
கற்றயெம்கல்வியைக் கழற்றுறோம்கேண்மின்
எழுத்தறிவித்ததால் எல்லாம்கெடுத்ததே.
கல்விக்கழகு கவிராயர்சண்டையே
செல்வர்க்கழகு (ஒரு) தேவடியாள் வைத்தலே
வேதியர்க்கழகு மீசைமொண்ணையே
மன்னவர்க்கழகு வரிப்பணத்தைத்தின்னலே
வைசியர்க்கழகு வாய்சூத்தெல்லாம்பொய்
உழவர்க்கழகு மழையைபார்த்தழுவதே
மந்திரிகட்கழகுதம் மனைவியும்மக்களும்
தந்திரிக்கழகு சார்ந்தகுடிகெடுத்தல்
உண்டிக்கழகொளித்து துட்டுசேர்த்தல்
பெண்டிர்க்கழகு பிள்ளைபெறுமையே
குலமகட்கழகொரு வருஷத்திற்கோர்பிள்ளை
விலைமகட்கழகுதன் வெள்ளைநோய்விற்றலே
அறிவோர்க்கழகு கரைக்கல்விழுழுமொட்டை
வறியோர்க்கழகுதான் வாழ்ந்தபெறுமைசொல்
நாற்பாற்குலத்தில் தாய்ப்பால்குடித்தும்
குஸ்திபிஸ்தி குத்துவரிசைகள்
கற்றிலாதவனை கீழ்போட்டுமிதிப்பர்.
எக்குடி குடிக்கினும் அக்குடியில்யெல்லாம்
பெண்டாட்டியையும் பழக்கிடவேணுமே

அறிவுடையொருவன் மருமகனானால்
மாமியார்பேச்சு மத்தளமடிக்கும்
அச்சமுள்ளடக்கி மச்சினிச்சியிருந்தால்
மச்சானோடு மகிழ்ந்துரையாடி
அக்காள்வாழ்வை யறுத்திடலரிதே
தேம்படுபணங்கள் திருடியேகுடித்து
வானுறவெறித்து வயிற்றிலேபுளித்து
ஒருபேதியாகிட உடம்புசவுக்கியமே.
தெள்ளியஆலின் சிறுபழத்தொருவிதை
காக்காய்தின்று கழிந்ததுசுவர்மேல்
அதுவேர்விட்டு மரமாய்முளைத்து
வீட்டையிடித்து நாசமாயாக்கி
அண்ணல்நிற்க நிழலாச்சம்மே.
பெரியோரெல்லாம் பெரிசாயில்லை
சிறியோரெல்லாம் சிறுசாயில்லை
பெற்றோர்ஆத்தாள் அப்பனல்ல
உற்றாரென்றால் ஒட்டிக்கொண்டில்லை
கொண்டோர்வீடெல்லாம் பெண்டுகள்நிறைந்தில்லை
கண்டோரெல்லாம் பெண்டாட்டியாயில்லை.
குன்றத்தனை நிதிபடைத்தபிரபுவும்
என்றுதாசியின் உடம்பிடிப்பு கால்பிடிப்பவன்
ஏழுநிலைமாடம் விளக்கெண்ணெய்சேதமென்
றெங்கும்கிரோஷின் எண்ணெயைக்கொளுத்தி
கண்ணும்யெரிச்சல் மூக்கும்யெரிச்சல்
எல்லாம்யெரிச்சலும் இழவுமாய்ப்போச்சே.
மணவணியணிந்த மங்கையைப்பார்த்து
அண்டைவீட்டு அறியாச்சிறுக்கிகள்
நமக்கும்யென்றைக்கு நகுமுகுகல்யாணம்.
மாப்பிள்ளைகையை மாட்டிக்கொள்வோமென
பெரிதாயெண்ணி பெருமூச்சுவிடுகிறார்.
பெற்றமுகம்கழுதையும் வண்ணான்வீட்டிலே
மற்றும்கழுதைமேல் வண்ணாத்திக்காசை
வண்ணாத்திமேலே வண்ணானுக்காசை

கான்னசெய்கிறதென் றியம்பினார்புலவர்.
இல்லாரிரப்பது இயல்பேயாயினும்
இரண்டுவிரற்கடை கொழுப்புப்பிடித்தவர்
இரந்தோர்க்கீவது உடையோர்கடனென்
றெவனோஎவனோ எழுதிவைத்திட்டதால்
பிச்சைக்காரர்கள் பெருத்துப்போயெங்கும்
ஊரார் துட்டை உரிந்துபோடுகிறார்.
நல்லஞாலமும் வானமும்ரெண்டும்
கோர்ட்டுபோலீசின் கொடுமையைப்பார்த்து
அங்கேமாத்திரம் அகன்றோடிநிற்குதே.
அடினும்ஆவின்பால் இடையன் தண்ணியே
சுடினும்பணியாரம் மாமியாருதேசுவை
அரைக்கினும்கேவரு துலுக்கச்சிபாடுவாள்
புகைக்கினும்சிகாரெட் மறைத்திடார்பயல்கள்
கலக்கினும்தயிர்கூழ் பட்டணத்தாள்குடிக்காள்
ஊட்டினும்மருமகன் உதைப்பான்மகளை
ஒருநாள்பழகினும் குடிக்காரர்சினேகம்
இருவரும்பிளக்க உதைபடவாகும்.
நூறாண்டுபோன கிழவியின்கிட்டே
மகனும்போகான் மகளும்போகாள்
பேரனும்போகான் பேத்தியும்போகாள்
தானேபேண்டு நாண்டுசாகணுமே
பெருமையும்சிறுமையும் வெள்ளைத்துணியில்தான்
சிறியோர்செய்யும் சிறுபிழையான
சிறுக்கியும்பையனும் சேர்ந்தோடிவிட்டால்
பெரியோரெல்லாம் பொறுத்துக்கொண்டு
கூட்டிவைத்திடபணம் கடன்வாங்கணுமே.
சிறியோர்பெரும்பெரும் பெண்டாட்டிவைத்திடில்
பெரியோர்அவர்களை பிரிப்பதுமரிதே
கற்கைநன்றே கைகால்இரண்டே
பிச்சைப்புகினும் இதுதான்வேணுமே.
கல்லாலொருவன் குலமும்கோத்திரமும்
நல்லதோகெட்டதோ நாலுதுட்டிருந்தால்
வெல்லமாய்அவனை நக்கிடுவாரே.

ஆரையாம்பள்ளம் புதைபடுபிணமும்
ஊரார்பணமெனில் வாய்திறக்கும்மே.
கொடுங்கோல்மன்னர் வாழுநாட்டில்
குழந்தையுமழாது குசுவிடபயப்படும்
குருவிகூவாது குடியர்கள்தொனப்பார்
ஈயும்எறும்பும் எழுந்துவெளிவரா
மனுஷனும்மனுஷியும் மலஜலோபாதையை
வெளியில்கழிக்க விடவிடென்றுதறுமே.
யானைக்கில்லை பெண்கள்மதம்போல்
பூனைக்கில்லைதர்மகர்த்தாள் திருட்டுப்போல்
ஞானிக்கில்லை தாய்தந்தைபேதம்
முதலைக்கில்லை கங்கையில்பாபம்
சிதலைக்கில்லை சுவடிகளின்அருமை.
அச்சமும்நாணமும் ஆம்பிடையானிடமில்லை
நாளுங்கிழமையும் நடுராவிலில்லை
கேளுங்கிளையும் ஆள்பிழைக்கவிடவில்லை
பொய்யுடையொருவன் சொல்வன்மையினால்
போலீஸ்கேஸையும் ஜெயித்திடுவானே.
மெய்யுடையொருவன் சொல்லமாட்டாமையால்
டாணாகார்க்கு துட்களழுதும்
வக்கீல்லாயர்க்கு வாய்க்கரிசியிட்டும்
வழக்கும்தோற்றுப் பணமும்தோற்று
பொய்போலும்மே பொய்போலும்மே
பொந்துக்குள்மெம்மே பொந்துக்குள்மெம்மே.
சான்றோரில்லாத் தொல்பதியென்பது
குடுவைகள்கொஞ்சம் கொஞ்சமாய்க்குடித்து
பாட்டும்ஆட்டும் பதங்களும்பாடி
ஞானங்கள்பேசி நாளைகழிக்கும்
காவாலிகள்சேராக் கள்ளுக்கடைகளே.
காலையுமாலையும் நான்மறையோதா
பாப்பாரெல்லாம் பந்துவிளையாட்டும்
கிளப்புகள்சேர்க்கையும் டிராமாகூத்தும்
நாடககம்பெனி நட்டுவவித்தையும்
தாசிகள்வீட்டு தரகுறிபோமும்

இத்தனைதொழிலில் இன்பமாய்வாழ்வரே.
தன்மனையாளைத் தாசிபோலுடுத்தி
பின்வால்பிடிக்கா பேதையும்பதரே.
தன்னாயுதத்தை ஈடுகாட்டிட்டு
அட்வான்ஸ்வாங்கிக்கொண் டப்பால்வேலைக்கு
தலையையேகாட்டாத் தகல்பாஜிதனமிலா
தச்சர்கட்டார் யாவரும்பதரே.
முதலுளபண்டம் மூச்சுண்டைபயறு
தோசைகள்விற்றுத் துட்டுகள்சேர்த்து
சாய்ந்திரமானால் சாராயக்கடையில்
தண்ணிப்போடாத யாவரும்பதரே.
வித்தும்யேறும் மாடும்விற்று
வாய்தாகாய்தா வரிப்பணங்கட்டி
வயிறுவாயொட்டி வனவாசம்போகா
பயிர்செய்யுங்குடிகள் யாவரும்பதரே.
இருவர்தஞ்சொல்லையும் எழுதரங்கேட்டே
ஒவ்வொருபேச்சை ஒன்பதாய்முடிந்து
இந்தண்டைவார்த்தையை அந்தண்டைசொல்லி
அந்தண்டைபேச்சை இந்தண்டைசொல்லி
இங்கொருதிரானும் அங்கொருதிரானும்
இசைவாய்குடித்து வசமாயிருந்து
வீண்சண்டைமூட்டி வேடிக்கைபார்த்து
நடுவிலேதுட்டை நன்றாய்ப்பறித்து
கடைசியாயந்தக் கலகமூட்டினதைத்
தெரிந்துகொண்டவர்கள் ஜித்தனைப்பிடித்து
அந்தண்டைசெருப்படி இந்தண்டைசெருப்படி
தலைமயிர்பிய்ய தாட்டியாய்க்கொடுக்க
உதைபட்டுக்கொண்டு ஓடியொளித்து
கொசுபிடித்திட்ட குரங்குபோல்குந்தி
அழையாயழுது மழையாய்ச்சொரிவது
வழிவழிசர்வதோர் வாளாகும்மே.
வாய்பறையடிக்கும் கேப்புமாறிகள்
வானத்தைவில்லாய் வளைக்கிறேமென்றும்

மணலைக்கயிறாய்த் திரிக்கிறோமென்றும்
ஊரார்குறைகளை ஒன்றும்விடாமல்
கொத்துக்கொத்தாகப் பிடுங்கிறோமென்றும்
சாற்றுவதொன்றைப் போற்றிக்கேட்டு
துட்டெல்லாம்அவர்க்குத் தொலைத்திடுவீரே.
வழியேயேகுக வழியேமீளுக
எந்தண்டையும் ஏறெடுத்துநோக்கற்க
எவரெதிர்வரினும் இடித்துக்கொள்ளுக
இவைகாணுலகிற் கியலாமாறே.

---

உ

கணபதிதுணை.

# பாவத்துக்கு அஞ்சாத

# பஞ்சமாபாதகி.

"பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னுந்
திண்மையுண் டாகப்பெறின்." (திருக்குறள்.)

பெண்ணானவள், தனக்குவாய்த்த கணவன், அழகிருந்தவூரிற் குடியிருந் தறியாதவனே யாயினும், நோயாளனேயாயினும், தக்க பொருள் வரவில்லாதவனேயாயினும், கொடியகோபியேயாயினும், வயோதிகனேயாயினும், அவனை அழகில் மன்மதனேயாகவும், செல்வத்திற் குபேரனேயாகவும், புயபலத்தில் வீமனேயாகவும், சாந்த குணத்தில்தருமனே யாகவும் பாவித்துக்கண்கண்ட தெய்வம்தனக்கு அவனைத்தவிரவேறில்லையென நினைந்து, பிறர்பழிக்கினும் சிறிதும் மனஞ்சலிக்காது, ஒருயிரு மீருடலும்போல, எவ்வழியானும் அவனைக்காத்தொழுகும் குணமெல்லாம் பொருந்தியிருத்தல்வேண்டும். அவளே உத்தமியெனப்படுவாள். அவளே யாவராலும் புகழப்படுவாள். அவளேதான்பிறந்த குடும்பத்திற்கும், தான்புகுந்த குடும்பத்திற்கும் தீபமாவாள். அவளைப்பெற்றவளே பாக்கியவதி

யெனப்படுவாள். அவளைப் பெற்றவனே சிறப்புடையனாவான். அவளை மனைவியாகக் கொண்டவனே இவ்வாழ்க்கையிற் சிறந்தவனாவான். அவள் வயிற்றிற் பிறக்கும் புத்திரரேநாணமின்றி எச்சபையிலும் ஏறத்தக்கவராவர். தன்கணவனல்லாத பிறரிடத்தே உளவாகிய அழகும், செல்வமும், கீர்த்தியுமாகிய இவைகள் அவளுக்கு அருவருப்பாதல்வேண்டும். அங்ஙனமாகாது, அவ்வழகுசெல்வம் முதலியன அவள்மனத்தைக் கவர்வனவாகுமாயின், கற்பென்று சொல்லப்படும் முதன்மையாகிய அழகும், அவள் வசப்படாமற் போய்விடும். பெண்களைப் பிறர்க்கிணக்கி வயிறுவளர்க்கும் ஆடவர்களையும்பெண்களையும், உத்தமஸ்திரீ, கண்ணாற்காணுதற்கும் அருவருப்பாள். குடும்பங்களிலே போய்க்கொண்டாடும்படி விட புருஷருக்கு இடங்கொடுத்தல் அளந்தறிந்த பெருங்கேடாம். இவர்களோடு பயிலுதலால், "எறும்பூரக் கல்லுந்தேயும்" என்றபடி, பெண்கள் தம்மனவுறுதி கலங்கப்பெறுவர். அதனால், உலகமுள்ளளவும் தாம்பிறந்த குடும்பத்துக்கும் புகுந்தகுடும்பத்துக்கும் நீங்காதபெரும் இழிவையே உண்டாக்குவர். இதற்குத் திருஷ்டாந்தமாக அளகவல்லி கதையை இங்கெடுத்துக்காட்டுவாம்.

ஆறுகளாலும், ஏரிகளாலும், நிலவளத்தாலும், சிங்காரவனங்களாலும், அலக்கார மாளிகைகளாலும், செவ்வல்லி, செந்தாமரை, வெண்டாமரை முதலியன நிறைந்த தண்ணிய தடாகங்களாலுஞ் சிறப்புற்று விளங்கும் விஜயபுரியிலே ஒருகோமுட்டி இருந்தான். அவன், செல்வத்திலே குபேரனையொத்தவன் கல்வி அறிவிற் பரமார்த்தகுருவை யொத்தவன். அழகிலே ரதியையொத்த ஒருபெண்ணை விவாகம் புரியவேண்டுமென்று எண்ணித்தன்செல்வச் செருக்கால் ஊர்கள்தோறுஞ் சென்று, தானேபெண்களைத் தேடத்தலைப்பட்டான். அவன்மனசுக்கேற்ற பெண்கிட்டாமையால், தன்யௌவனப் பருவத்தையெல்லாம் காட்டிலெறித்த நிலாப்போற்கழித்தான். யௌவனங்கழிந்தபின்னரும், தன்வாலிபத்திற்கொண்ட விரதமும் ஆசையும்அவன்மனத்தைவிட்டு அகன்றனவல்ல. அறுபதாம்வயசும்வந்தடுத்தது. நரையுந் திரையுந் தந்தொழிலிற் கைவிட்டன. இவ்வளவிலாயினும், அவன் மனோரதம் நீங்கிற்றில்லை. இப்படியிருக்கையில், ஒருநாள் அயற்கிராமத்திலே நடக்குந் திருவிழாக் காணும் பொருட்டு அங்கே சென்றான். அவ்வூரிலேயுள்ள ஒரு ஏழைக்கோமுட்டி தற்

செயலாக இவனைக்கண்டு அவன் வரலாற்றை யுணர்ந்தான். தனவானாகிய சுந்தரஞ்செட்டி தனக்கு அத்தினப் போசனத்துக்கு இடம் அமைத்துத்தரும்படி ஏழைக் கோமுட்டியிடங் கேட்டான். அவன் உமக்கு உணவு அமைத்துத் தருவதற்கு இவ்விடத்தில் வேறொருவரில்லை ஆதலால், நானேஉமக்கு இன்றைக்கு விருந்திடுவேன் என்று கூறித் தன் வீட்டுக்குச் சுந்தரஞ்செட்டியை அழைத்துப்போய் அவனுக்கு வேண்டுவன வெல்லாம் அமைத்துத் தன்னு லியன்றமட்டும் அதிசம்பிரமமாகப் பகல்விருந்திட்டான். சுந்தரஞ்செட்டிக்கு அவனிட்டவிருந்து பசிக்குப் பனம்பழம்போலாயிற்று. போசனம் முடிந்தபின்னர், தாம்பூலமும் சந்தனக்கலவையுங் கொடுத்து குறுநித்திரைக்காகப் பஞ்சணையு மிட்டான்.

பஞ்சணைமேற்கொண்ட சுந்தரஞ்செட்டி மனத்திலே தனக்குப் பெருஞ்செல்வமிருந்தும் தன்னெண்ணத்துக்கு இசைந்த ஒரு கன்னிகை வாய்ந்திலலேயென்னு மேக்கம் உதயமாயிற்று. உதயமாதலும், நித்திரைவரப் பெறுதவனாய்ச் சிந்தாகுலம் கொண்டிருந்தான். அச்சமையத்திலே. ஏழைக்கோமுட்டியி னுடைய ஏகபுத்திரி, ஆற்றின் நீராடித் தண்ணீர்க்குடம் மருங்கிலே விளங்கவும். பூமிபரியந்தம் விழுந்துவிட்ட இருள்மேகம்போலக் கறுத்து, நெறித்து அடர்ந்து படர்ந்து நிலந்தீண்டும் அளகபாரத்தோடு அவன்கண்ணி லெதிர்ப்பட்டாள். அக்கன்னிகையினது அத்தியற்புதமான கூந்தல்வளம் பற்றியே அவளுக்கு அளகவல்லியென்னுங் காரணபெயரிடப்பட்டதாயிற்று. அவ்வளகவல்லியைக் கண்ட சுந்தரஞ்செட்டி யான் செய்த தவம் இத்தினந்தான் பயன்படுத்தின மாயிற்றென்று உள்ளம் பூரித்தான். ரதிதான் இவ்வடிவோடு இங்கெழுந்தருளினளோ! அன்றி, இவள் அரம்பையருள் ஒருத்தியோ! அவருள்ளும், இவள் திலோர்த்தமையெனப் படுவளோ! அன்றென்றால் நான் காண்பது கனவுதானோவென்றுகூறித் துண்ணெனப்படுக்கையைவிட் டெழுந்து உட்கார்ந்து அவள்மீது செலுத்திய கண்ணோக்கத்தைத்தடுத்தார் கியலாதவனாகி, அவள் வீட்டினுட்சென்று மறையுங்காறும் இமைக்காதிருந்தான். அளகவல்லியோ இந்நரைக்கிழவன் யாவன்! இக்குரங்கேன் என்னை உறுத்திப் பார்க்கின்றதெண அவமதித்து நோக்கி வீட்டினுட்புகுந்து மறைந்தாளாயினும், சுந்தரஞ்செட்டி கண்ணுக்கும் மனத்திற்கும் மறைந்தாளில்லை. உடனே, அவன் அக்கன்னிகையினுடைய

தந்தையை அழைத்து நான் இன்றைக்கு உம்மைத் தற்செயலாகக் காணப்பெற்றதும், உசாவியதும், நீர் என்னை விருந்திற்கழைத்த தும் எனக்குபசாரம் புரிந்ததும் ஆராய்ந்து பார்க்கும்பொழுது தெய்வ சங்கற்பமேயாம் என்னுடைய தவம் இன்று உமது இல்லத்திலே கைகூடுவதாயிற்று. என் மனத்தில் நெடுநாளாகக் கிடக்கும் எண்ணத்தை முடித்தற்கு நீரே துணையானீர். என் தவப்பயன் கண்ணுக் கெட்டியதேயன்றி இன்னுமென் கைக்கெட்டியதில்லை. அது உம்மாலாக வேண்டுவது, அதற்குத்தடை செய்வீரேல் இவ் வீட்டின் கண்ணேதானே பிராணத்தியாகஞ் செய்து கொள்வேனென்றான். ஏழைக்கோமுட்டி திகைத்து, * "ஏபிராசனிசுரயோம்" என்று கூறி அதிசயித்து உமக்குவேண்டியது யாதென்றான். சுந்தரஞ்செட்டி தன்வரலாற்றைக் கூறி, உமது புத்திரியை எனக்கு மணமுடித்துத் தருதல்வேண்டு, அதற்காக யான்தரவேண்டிய தொகையைக்கேட்கக் கடவீரென்றான். ஏழைக்கோமுட்டி, "பணமென்றால் பிணமும் வாய்திறக்கு" மென்றபடி பதினுயிரம் ரூபாய்த்தர வல்லீரோ வென்றான். அதற்குச் சுந்தரஞ்செட்டி இதைத்தானு பெரிதாக மதித்துக்கேட்டீர் நாளை முகூர்த்தத்தில் எனக்கு மணம் முடித்துக்கொடுப்பீராயின், பதினையாயிரம் ரூபா உமக்குக் கொடுப்பேனென்றான். இவற்றையெல்லாம் உள்ளிருந்துகேட்ட அளகவல்லி தந்தையைக் குறிப்பால் உள்ளேயழைத்து, இக்கிழவன்கையிலொப்பித்தற்கா என்னை அருமையோடு பெற்றுவளர்த்தீர், நான் இவனுக்கு மனைவியாக ஒரு சிறிதும் ஒருப்படமாட்டேனென்று கூறினுள், ஏழைக்கோமுட்டி அவள்சொல்லைப் பொருட்படுத்தாது, பொருளவாவின் வாய்ப்பட்டவனுகிச் சுந்தரஞ்செட்டியினுடைய எண்ணப்படி அவன்குறித்த முகூர்த்தத்திலே, அவன் மணச்செலவுக்கென்று வேறுகக்கொடுத்த பொருளைக்கொண்டு பேராடம்பரத்துடன் அக்கன்னிகையைத் தத்தஞ்செய்துகொடுத்தான். சுந்தரஞ்செட்டி அக்கன்னிகையைக் கொண்டுசென்று இல்லறந்தொடங்கினுன். நாலைந்துமாசகாலவரையும், அளகவல்லி உலகவின்பம் உள்ளவாறறியாதவளாயும், அச்சுவைதேறாதவளாயுமொருவாறு அவனேடொத்து ஒழுகிவந்தாள். சுந்தரஞ்செட்டி சூரியஉதயத்திலெழுந்துகாலைக்கடன்முடித்துச் சம்பிரமமாகப் போசனம்பண்ணிக்கொண்டு தினங்

* என்னடா சனியன்பிடித்த வியாபாரம்.

தோறும் ரத்தினவியாபாரத்தின் பொருட்டு தன்கடைக்குச்சென்று மாலைக்காலத்தில் வீட்டுக்குத் திரும்புவன்.

இப்படி யிருக்கையில், தஞ்சாவூரிலே பிறந்துவளர்ந்து கல்வி கற்று அதனால்பொருள் வருவாய் செய்துகொள்ளவியலாது, பலவாறு சூழ்ச்சிசெய்து, ஒன்றும் புலப்படாமலீற்றில் வயோதிகரை மணம்புரிந்திருக்கும் இளங்கன்னிகையரும், இளமைப்பருவத்தேவிதவையரான செல்வப்பெண்களு மிருக்குமிடந்தேடி, அவருக்குச் சோரநாயகனாகி அவர்பாற் பொருள்கவர்வதே யேற்றதொழிலாமெனத்தேர்ந்து அவ்வாறே ஊர்கள்தோறுஞ்சென்று சிலநாள்தங்கி, இப்பெண்களை மயக்கிப்பெரும்பொருள் கவர்ந்துகொண்டு செல்பவனாகிய அழகியவிடப் பிராமணனொருவன் விஜயபுரியை அடைந்தான். அங்கே தன்னெண்ணத்துக் கிசைந்தபெண்கள் யாவராயினுமுளரோவென்று தக்க உபாயத்தோடு ஆராயத்தொடங்கினான். அப்பொழுது சுந்தரஞ்செட்டியுடைய நிலைமையும், அவன் மணம்புரிந்ததும், அவனுக்கிருக்கும் செல்வமும் அவன்வீடும் அவன்விருத்தியுமென இவையெல்லாம்ஆராய்ச்சியாலுணர்ந்தான். மற்றைநாள்உதயத்திலெழுந்துஸ்நானம்பண்ணிப் போசனமுடித்து ஆடையாபரணாலங்கிருதனாகிக் காதவழிக்குக் கமழும் பரிமளங்கள் பூசிக்கொண்டு, உத்தண்டகெம்பீரமாய்ச் சுந்தரஞ்செட்டியிருக்கும் அவ்வீதிவழியே சென்று, அவன் கடைக்குச்சென்ற சமையம்பார்த்து அவனுடைய வீட்டுவாயலிற்சென்று கதவிலே தட்டினான். அளகவல்லி உள்ளிருந்தபடியே *“தலுப்பு எவரு தட்டுதாரு” என்றுவினவி, செட்டியார் கடைக்கு போய்விட்டாரென்றாள். தஞ்சாவூரையர் தனமுடையார் வீட்டுக்கு யாசகத்துக்குவந்தால் கதவடைத்துக்கொண்டு உள்ளிருந்தபடியே செட்டியா ரில்லையென்று கூறுவது உத்தமிகளுக்கு அழகல்லவேயென்று இதமாகிய குரலாற் கூறினார். அளகவல்லி இவ்வளவு வாதாடுபவர் யாரென்று அதிசயித்துக் கதவைத்திறந்தாள். திறந்தவளவிலே, அவ்வீடுமுழுதும் மன்மதன்வசிக்கின்ற பூஞ்சோலைபோலப் பரிமளங்க மழுவதாயிற்று யாசகத்துக்கு வருபவன் பரிமளத்தோடே வருவானென்று அதிசயித்து, அவனை எட்டிப்பார்த்தாள். ஐயர் கிறிமுறுவல்செய்து யாசகமிடுங்களென்றார். அளகவல்லி அக்கிறுமுறுவலாலும், ஐயருடைய கட்டழகினாலும் முகவசீகரத்தினாலும் பொ

* கதவிலே தட்டுகிறது யார்?

விந்த தோற்றத்தினாலும் மயங்கித் திகைத்துநின்றாள். ஐயர் பின்னரும் புன்னகைசெய்து யாசகங்கேட்டார் பேசாதிருப்ப தழகோவென்றார். அதுகேட்ட அளகவல்லி அவரை வீட்டினுள்ளே அழைத்து ஆசனங்கொடுத்து இப்பொன்மேனிவாட யாசகத்துக் கெழுந்தது யாதுக்காக வென்றாள். ஐயர், எனக்கு விவாகத்துக்கு முகூர்த்தம் வைக்கப்பட்டிருக்கின்றது. இன்னும் ஆறுமாசகாலமுளது அவ்வெல்லைக்குள் நான் மூவாயிரரூபாய் சம்பாதித்துப் பெண்வீட்டுக்காரருக்குக் கொடுத்தல்வேண்டும்; இல்லையாயின் விவாகந் தவறிவிடும் அதுபற்றியே யாசகத்துக்குப் புறப்பட்டேனென்றார். அப்பொழுது அளகவல்லி ஐயர்மேற் காதலுடையவளாகி அவருக்குத் தன் குறிப்பை யுணர்த்தினாள். ஐயர் அதற் குடன்படாதவர்போ லபிநயித்து அவளுக்குக் காதல் பெருகும்படியா ரஞ்சிதக்குரலால் சிலவார்த்தைகள் சொல்லி, இங்கே இவ்வளவு தாமதமானால் யான்வந்த யாசககருமம் முடிவதெப்படி என்றார். அளகவல்லி உடனே உள்ளேசென்று ஒரு தங்கச்சரப்பணியை எடுத்துவந்து அவர்கையில் கொடுத்து இவ்வளவில் உமது யாசகவிருத்தியை விட்டொழியும் இது ஐயாயிரரூபா மதிப்புள்ளது. இதனை விற்று உமது கருமத்தை முடித்துக்கொள்ளக் கடவீரென்று கூற ஐயர் அவளைப்பார்த்து, “ குருடனுக்கு வேண்டியது கண்” என்றபடி எனக்கு வேண்டியது பணமது வந்துவிட்டது. இனி உன் மனப்படி நடத்தற்குத் தடையில்லை யென்று கூறி அவள் கருத்தைக்கு இசைந்தார். அளகவல்லி அதன்பின்னர் அவரைநோக்கி என்னுடைய ரத்தினமே, இனிமேல் நீர் தினந்தோறும் பத்துநாழிகைவரையி லிங்கிருந்துவந்து போகவேண்டும். செட்டியார் பத்து நாழிகைக்குமுன் கடைக்கு போய்விடுவார். அதுமுதல் உம்மை எப்போதும் வழிபார்த்திருப்பே னென்று கூறி கட்டித்தழுவி, முத்தமிட்டு விடைதந்து அவரை அனுப்பிவிட்டாள். ஐயா, தமக்குச் சுக்கிரதிசை வந்ததென்று மகிழ்ந்து சரப்பணியைக் கையிலெடுத்துக்கொண்டு அதை விற்கும்பொருட்டுக் காசுக்கடையைநோக்கிச் சென்றனர். தற்செயலாகமுதலிற் சுந்தரஞ்செட்டி கடைக்கே சென்றார்.

சுந்தரஞ்செட்டி ஐயரைப்பார்த்து சுவாமிகளே நமஸ்காரம், தங்கள்முகம் நமக்குமுன் பரிசயமான முகம்போலத் தோன்றுகின்றது வாருங்கள் உட்காருங்களென்று கூறித் தன் சாதிக்குரிய வாயுபசா

ரமெல்லாங் காட்டினன். ஐயர் அக்கருமத்தைக்குறித்துப் பின்னர் பேசிக்கொள்வோம் இப்போது இந்நகையை யெடுத்துக்கொண்டு பணத்தைக் கொடுமென்றார். செட்டி அந்நகையைவாங்கிக் கண்களிலொற்றி உரைக்கல்லையெடுத்து உரைத்துரைத்து சுவாமிகள் தங்களுக்கு எந்த வூரென்றான். ஐயர் அவ்விசாரணையெல்லாம் பின்னர் பேசிக்கொள்ளலாம் உரைத்தது போதும் பார்த்துப் பணத்தைத் தாருமென்றார். செட்டி உரைத்தபடியே * "ஏமையா சுவாமிகாரு" அவசரப்படாதிருங்களென்று கூறிக்கடையில் வேலைக்காரப் பையலைக்கூவி, ஒரு தம்படிக்கு வெற்றிலைபாக்கி வாங்கிவந்து சுவாமிகளுக்குக் கொட்டாவென்று கூறிவிட்டு கல்லுரைத்தபடியே ஐயரைப் பார்த்துச் சுவாமிகளுக்கெந்தவூரென்றான். ஐயர், தஞ்சாவூர்காணும் செட்டியாரே, இன்னம் உரைத்தது போதாதா, அளவில்விட்டு விலையைத் தீர்த்துப் பணத்தையெடுங்காணுமென்றார். செட்டி, அடே 0 "லவண்டிக்கொடுக்கா சீக்கிரம் ஒஸ்தாடு" சுவாமிகளுக்குத் தாம்பூலம் கொட்டாவென்றுகூறி, ஐயரைப்பார்த்துத் தாம்பூலந் தரித்துக்கொள்ளுங்கள் சுவாமியென்று சொல்லிக்கொண்டு பின்னரும் ஊன்றியூன்றி உரைத்தான்.

ஐயரும் அதுகண்டு, செட்டியைப்பார்த்து, நான் என்னசொன்னாலும் உமது ஆசைவெட்க மறியாது, உமது இஷ்டப்படி உரைத்துக்கொள்ளும். எனக்கென்ன! கொண்டமுதலில் நட்டமா, இன்றைக்கெல்லா முரைத்தாலும் ஐந்துருபாவுக்கு உரைப்பீர், அந்த நஷ்டமெல்லாம் கோமுட்டிக் கிழப்பயலைச்சேரும். கிழப்பயல் பெண்டாட்டி சீமாட்டியிருக்கிறாள் நாளைக்கு இன்னுமொன்று தருவாளென்று கூறினார். அதுகேட்டவுடன் செட்டி துணுக்குற்று, ஐயரைப்பார்த்து, உரைப்பதை நிறுத்தி, இந்நகை சுவாமிகளுக்கு எவ்வகையாற் கிடைத்ததென்று கேட்டான். ராஜவீதியிலுள்ள மூன்றடுக்குவீட்டிலே ஒருகோமுட்டிக் கிழப்பயல் பதினையாயிர ரூபா செலவிட்டு ஒரு சிறுமியை விவாகம்பண்ணி அவளைப்பூட்டி வைத்துவிட்டுத் தன்வேலைபார்த்துத் திரிகின்றான். அவளென்னைத் தனக்கு ஆசைநாயகனாக வைத்துக்கொண்டாள். கிழப்பயல் அவளுக்குச சம்பாதித்துப்போடும் காவற்காரனானான். ஐயர் இதுதான் காணும் விருத்தாந்தம். சீக்கிரம் நிறுத்துக்கொண்டு பணத்தைத்

* ஏன் சுவாமிகளே. 0 பரத்தைமகனே, சீக்கிரம்வா.

தாருமென்றார். சுந்தரஞ்செட்டி, ஐயோ! அந்தபாவிச் சிறுக்கி செட்டியார் வாயில் மண்ணிட்டாளாவென்று தன் வாயிலறைந்து கொண்டான். அதுகண்ட ஐயர், எவனோ ஒரு கிழப்பயல் வாயில் மண்விழுந்தால் உமக் கென்னகெட்டது நமக் கென்னகெட்டது நீரேன் வாயிலடித்துக்கொள்ளுகிறீர் என்றார். இக்கருமம் தன்வீட்டில் நடந்ததென்பதை நன்றாகவுணர்ந்துகொண்ட சுந்தரஞ்செட்டி, ஐயரைநோக்கி, அந்தச்சீமானைக் கிழப்பயலென்று சொல்லாதிருங்கள் சுவாமிகளே, அவனும் நம்மைப் பார்த்தாப்போலத்தா னிருப்பான். அவன் எவ்வளவு பிரயாசைப்பட்டுப் பசிபட்டினி கிடந்து இப்பொருளைச் சம்பாதித்திருப்பான். அவனுக்கு வயிறெரிவதுபோலத்தான் இதைக்கண்ட மாத்திரத்தில் எனக்கும்வயிற்றை யெரிகின்றது. "ஐயவாரு" சுவாமிகளே இச்சமாச்சாரத்தை நமக்குவெளியிட்டதுபோலப் பிறரொருவருக்குஞ் சொல்லவேண்டாம். இப்படி அகப்படுகிற நகைகளையெல்லாம்—ஆனால் இனிமேல் தரமாட்டாளென்று நினைக்கிறேன்—தந்தால்—நம்மிடத்திலேயேகொண்டுவந்து தரவேண்டும்—சுவாமிகளே, இந்நகைக்கு விலையைச் சொல்லுங்களென்றான், ஐயர், அந்தச்சிறுக்கி இதையாயிரமென்றாள். இதற்கு நீர் மூவாயிரந்தந்தாற் போதுமென்றார்.

அம்மொழி தேவாமிர்போலக்காதிற் படுதலும், சுந்தரஞ்செட்டி *"மஞ்சிப்பாப்பனவாடு" என்று கூறி "முண்டக்கு ஐயாயிரமுநஷ்டம், மனக்கு இரண்டாயிரமுலாபம்" என்றுமனத்துளெண்ணி மகிழ்ச்சியோடு மூவாயிரமெடுத்து ஐயர் கையிற்கொடுத்து அவர் இருகரங்களையும்பற்றி இன்னும் "0 ஒக்க சமாச்சாரம்" இன்றைக்குத் தாங்களும் அந்தச்சிறுக்கியும் உள்வீட்டி லெவ்விடத்திலே கேளிவிலாசமா யிருந்தீர்கள். தாங்கள் கூச்சமில்லாம லென்னிடத்திற்சொல்லலாம். நாமென்ன அவளிடத்திற் சொல்லவா போகின்றேன். கூச்சமில்லாமற் சொல்லுங்கள். வேடிக்கை யர்த்தமாக கேட்கிறேனென்றான். ஐயர் நமக்கென்ன கூச்சம். ஆனாற் கேளும் சொல்லுகிறேன். உமக்கந்த வீட்டிற்பழக்கமுண்டாவென்றார். சோமுட்டி அவ்வீட்டுக்காரன் பழக்கமேயல்லாமல் உள்வீட்டில் நான்சென்று பார்த்ததில்லை. அப்படியிருந்தாலும் உம்முடைய

* நல்லபிராமணர். 0 இன்னுமொரு செய்தி.

சாமர்த்தியத்தை அறிவதற்காகவே வினவினேன் என்றான். ஐயர் அதற்கு அவ்வீட்டிலே இரண்டாமடுக்கிலே கிழக்குப்பக்கத்திலே ஒருசிறு அறையுள்ளது. அவ்வறையிலேயே நாமிருவருங் கலந்திருந்தோமென்று கூறி அவனிடம்விடைபெற்றுக் கொண்டு தாம்தங்கியிருக்கும் சத்திரம்நோக்கிச் சென்றார். சுந்தரஞ்செட்டி வழக்கம்போல மாலைக்காலத்தோடு வீடுபோய்ச்சேர்ந்து, தான் ஐயற்பாற் கேட்டவைகளை எல்லாம் மனத்திடையிருத்திக்கொண்டு வொன்றுமறியாதான் போன்று என்றும்போல இனியமுகங்காட்டித் தாம் வரும்வழியில் அவளுக்கென்று வாங்கிவந்தமிட்டாய், அல்வா, பூரி, லட்டு, பூந்தி, மாதுளம்பழம், மாம்பழம், புஷ்பம் முதலியவைகளையெல்லாம் அவள்கையில் கொடுத்து இதம்பேசி அவளுபசரித்திட்ட போசனத்தை அருந்தி உரியகாலத்திலே அவளோடு பள்ளியறை சேர்ந்தான்.

மற்றைநாள் வழக்கம்போலப் போசனம் பண்ணிக்கொண்டு கடைக்குப்போகப் புறப்பட்டு அளகவல்லியை அழைத்துத் தெருக்கதவைக் காப்பிடச்சொல்லிக், காப்பிட்டபின் வெளியே சென்றான். சிறிதுநேரத்தில் முதனாட் செய்துகொண்ட பொருத்தப்படி தஞ்சாவூரையர், அவள் வீட்டுவாயிலையடைந்து கதவிலே தட்டினார். வழிமேல் மனமும் விழியும்வைத்து மேன்மாடியிற் சென்று நின்று பார்ப்பதும். அவரைக்காணுமற் கீழேயோடிவந்து கதவின் துவாரவழியே பார்ப்பதும், ஐயருக்கென்று மடித்த வெற்றிலைச்சுருளும் தொடுத்த மல்லிகைமாலையும் வாடினவோ வென்றுள்ளே ஓடிப் பள்ளியறையிலே பார்ப்பதும், மீண்டு மேன்மாடத்துக்கோடி அவர் வருந்திசையை நோக்குவதும், அடியளந்து நாழிகைக்கணக்குப் பார்ப்பதும், மீண்டு கீழே ஓடிவருவதுமாய் ஆவலோடிருந்த அளகவல்லி செவிக்கு அக்கதவைத்தட்டிய வொலியானது அமிர்தமாக உடனே ஓடிச்சென்று கதவைத்திறந்து ஐயர் உள்ளேவருதலும், எதிர் தழுவிக் கதவைக் காப்பிட்டு அவரை அழைத்துக்கொண்டு பள்ளியறைசேர்ந்தாள்.

அங்கவர்களுல்லாசமாயிருக்குஞ் சமயத்தில் கடைக்குச்சென்ற சுந்தரஞ்செட்டி முதல்நாளிலே தஞ்சாவூரையன் சொன்னது உண்மைதானோவென்று நேரிலேகண்டு ஐயந் தீர்த்துக்கொள்ள வெண்ணிச் சமயம்பார்த்து அங்குநின்று மீண்டு வீட்டுவாயிலை யடை

ந்து தெருவாயில் அடிச்சுவடுபார்த்துங் காணாது கதவைத்தட்டி தன் நாயகியை அழைத்துத் தான்வர வுணர்த்தினான். அளகவல்லி ஐயரைநோக்கி கிழப்பயல் வந்துவிட்டான் யாதுசெய்வோமென்று கையைப் பிசைந்தாள். ஐயர் ஏண்டியம்மா என்னை மோசம் பண்ணினையே ! இவ்வாபத்துக்கு என்னசெய்வேன் பிச்சைக்குவந்த ஏழைப்பார்ப்பானைக் கிழப்பயல்கையி லொப்பிவிக்கப் போகின்றாயா !! ஐயையோ என்செய்வேன் என்செய்வேனென்று நடுங்கி யொடுங்கினார். அளகவல்லி என்சாமி அஞ்சாதேயடா வென்று தேற்றிப் பஞ்சணையோடே அவனைச்சுருட்டி ஒருமூலையிலேதள்ளிக் கதவெல்லாவற்றையுந் திறந்துவிட்டு, முதனாளிரவிலே கோமுட்டி வாங்கிவந்த பக்ஷணங்களிற் சிலவற்றை ஒருதட்டில் எடுத்துவந்து தெருவாயிலுக்கடுத்த கூடத்தில் வைத்துவிட்டு ஓடிப்போய்த் தெருக்கதவை திறந்துவிட்டாள் கோமுட்டி உள்ளேசெல்லுதலும், அவனைப்பார்த்து * "இதி ஏமி, எந்துகாரணமு" ஒருநாளுமில்லாத புதுவழக்கம் இன்றைக்குண்டாவதென்னவென்று சரத்தோடு வினவினாள். கோமுட்டி அவளைப்பார்த்து கதவுதிறக்கக் காலதாமதஞ் செய்ததென்ன என்கண்மணியேயென்றான். அதற்கவள், என்காதலரே, நீர் நேற்றிரவு கொணர்ந்த பக்ஷணங்களை யெடுத்துவைத்து உம்மை நினைத்துக்கொண்டே அருந்தக் கைவைத்தேன் இதோபாரும இங்கே வைத்திருக்கின்றேன். அதற்குள் நீரும் வந்துவிட்டீர் இதுவென்ன அதிசயமென்றோடிப்போய்த் தண்ணீர்தேடிக் கையை சுத்திசெய்துவிட்டு ஓட்டமாக ஓடிவந்து கதவைத்திறந்தேன். ஓடிவந்த களைப்பினா லின்னம் மூச்செறிகின்றது. அதற்குள் தாமதம் பண்ணினேனென்று குறைசொல்லுகின்றீரே இது தெய்வத்திற்கு அடுக்குமாவென்றுகூறி நாடகமாத்திரையாக அழுதாள். அதுகண்ட கோமுட்டி இதம்பேசி அவளைச் சமாதானம் பண்ணினான். அவள் பக்ஷணத்தைக்காட்டி உடனிருந்துண்ணும்படி கேட்டு அவனுக்குக்கொடுத்துத் தானும் உண்டாள். உண்டபின்னர் கணக்கேடொன்று தேடுவான்போல மேன்மாடத்திற்சென்று முதல்நாள் ஐயர்சொன்ன அறையைப் பார்க்கவெண்ணி அவ்வறையிற்போய் ஐயர் மறைந்திருக்கிறாரோ வென்று எங்கும் பார்த்தான். பார்த்தபின்னர்ப் பிராமணன் கூறியது பொய்யெனநினைத்து மகிழ்ந்து கீழேஇறங்கிக் கணக்கேடொன்று எடுப்பத

---

* இஃதென்ன! என்னகாரணம்.

ற்காக வந்தேனென்று தன் மனைவிக்குச்சொல்லி அவளைக் கதவைக் காப்பிடும்படி கட்டளையிட்டுக் கடைக்குச்சென்றான்.

சுந்தரஞ்செட்டி போனபின்பு அளகவல்லி கதவைக் காப்பிட்டுக்கொண்டு மேன்மாடஞ்சென்று தன்னிஷ்டப்படி ஐயரோடு உல்லாசமாயிருந்தாள். இருபத்தைந்துநாழிகை சென்றவுடனே ஐயர் நேரமாய்விட்டதென்று கூறினார். அளகவல்லி உள்ளே ஓர் அறையிற்சென்று நகைப்பெட்டியை திரந்து ஒரு வயிரமாலையை எடுத்துக்கொண்டுவந்து ஐயர்கையிற்கொடுத்து இதைக்கொண்டுபோய் விற்று இஷ்டம்படி செலவு செய்யுமென்றுகூறி அவருக்கு விடைதந்தாள். ஐயர் அதனைக்கொண்டு சென்று முதனாள் விற்றயிடத்தையே யடைந்தார். சுந்தரஞ்செட்டி ஐயரைக் கண்டமாத்திரத்தில் எக்கமுற்றும் அதனைக் காட்டாது உபசரித்து சுவாமிகாள் தண்டம், இன்றைக்கு அகப்பட்ட தென்னவென்றான். ஐயர் இதோ பாருமென்று வயிரமாலையை அவன்கையிற் கொடுத்தார். சுந்தரஞ்செட்டி அதனைவாங்கி அருமையிற் சம்பாதித்த பொருளெல்லாம் மண்ணாகின்றவே. ஐயோ வயிறெரிகின்றதே என்று கூறினன் ஐயர் கிழப்பயலுக்கு நஷ்டம்வந்தால் உமக்கென்ன காணுமென்றார். செட்டி ஐயரைப்பார்த்துக் கிழப்பயலென்று அச்சீமானைச் சொல்லலாமா; இனிமேல் அப்படிச் சொல்லாதிருங்கள் அவன் சம்பாதித்த வருத்தத்தைநினைக்க வயிறெருகாலெரிவதும் அவனைக் கிழப்பயலென்றுகூற எனக்கு வயிறு இருகாலெரிவதுமா யிருக்கின்றதேயென்று சொல்லி இன்றைக்கு அங்கு நிகழ்ந்த சமாச்சாரத்தைச் சொல்லுங்களென்றான். ஐயர் நடந்ததென்ன ! நானங்கே போயிருந்தேன். கிழப்பயல்வந்தான் (செட்டி கிழப்பயலென்று சொல்லாதிருங்கள் சுவாமி.) என்னை அவள் பஞ்சணையோடு சுருட்டி ஒரு மூலையிலிட்டு வைத்தாள். செட்டி மாடத்திலேயுள்ள அறைகளெல்லாஞ் சென்றேதோ தேடிப்பார்த்தான். அதன்பின்னர் மீண்டு வெளியே போய்விட்டான். நாங்கள் வழக்கம்போல உல்லாசமா யிருந்தோம். இதுதான்சமாச்சரரம். மாலையை எடுத்துக்கொண்டு பணத்தைக் கொடுமென்றார். கோமுட்டி அதற்கு ஈராயிரங்கொடுக்க ஐயர் வாங்கிக்கொண்டு சத்திரம் சென்றார்.

சுந்தரஞ்செட்டி: * "ரேப்பு பாப்பனவாடுனி எட்லயன பட்டுக்கவல" என்று சொல்லி கடையைப் பூட்டிக்கொண்டு வழியிலே வழ

* நாளைக்குப் பாப்பாரயலே எப்படியும் பிடிக்கவேண்டும்.

க்கம்போலப் புஷ்பங்களும் பழவர்க்கங்களும் லட்டு மிட்டாய்களும் ளும் வாங்கிக் கையிலேந்திச் சென்று அஸ்தமயனத்தோடு வீடுசேர்ந் தான். மனைவியிடம் புஷ்பம் முதலியவற்றைக் கொடுத்துவிட்டு மாலை க்கடன்கள் முடித்து தீபமுகத்திலேயிருந்து அற்றைநாள் ஆதாயஞ் செலவுகளைக் கிரமமாக யெழுதினன். தானெழுதியவைகளை ஒத்துப் பார்ப்பான்போலத் தன்மனைவிக்குக் கேட்கும்படி தஞ்சாவூர் டா ப்பானுக்குவாயில்மண் போட்ட-ரூபா இரண்டாயிரமென்று ஓர் அ மிசத்தை உரத்துவாசித்தான். அதுகேட்ட அளகவல்லி "0 ஏமிண்டி பாவா" கணக்கிலே யிப்படியும எழுதலாமா? இந்த வகையான அம ங்கல வார்த்தைகளைக் கணக்கிலெழுதினல் லெட்சுமிதங்குவாளா,நம குடியை வாழவைத்துவிடுவீர் போலத்தான் தோன்றுகின்றீர். இ ரண்டாயிரம் ரூபா எதற்காகக் கொடுத்தீர். நஷ்டவியாபாரத்திற்கு என்பணத்தை இறைத்தீர் அப்படிச் செய்யச்சொல்லி எவர்உம்மை அடித்தார். ஏதையா! பரமசங்கடம்! நான் உம்மைப் புத்திசாலி யென்றெண்ணிக் கழுத்தைக்கொடுத்து விட்டேன். இப்படிப்பட்ட வர்களோ டிருந்து என்னல் வாழமுடியாது இவ்வகை நஷ்ட வியா பாரத்துக்கு முடிவில் எனது நகைகளும் பிடுங்கிக் கொடுக்கத்தான் வரும். நான்நாளைக்கு என் வீடுபோய்ச் சேர்ந்துவிடுவேன், உம் முடையவேலையை நீ பார்த்துக்கொள்ளும். என்னைவாழவைத்தது போதுமென்றுள்ளவாறு வருந்துவாள்போலச் சினங்காட்டினள். சுந்தரஞ்செட்டி * "இதியேமி" பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே என்றுசொல்லிக் கணக்கை வைத்துவிட்டு அவளுக்குப் பக்கத்திலேபோயிருந்து என்கண்மணி என்பிராணநாயகியென்று பலவாறிதம்பேசி இனிமேலே இப்படியாதுஞ் செய்யமாட்டேன் கோபஞ்செய்யாதே என்று அவளைச் சமாதானம்பண்ணி, அவள் கையாற்போஜனம் வாங்கியுண்டு அவளோடு பள்ளியறைபோய்ச் சேர்ந்தான்.

அடுத்தநாளுதயத்தில், சுந்தரஞ்செட்டி எழுந்து காலைக்கடன் முடித்து எண்ணெய்யிட்டு ஸ்நானம் பண்ணிப்போசனம் முடித்து மனைவியிடம் விடைபெற்றுக்கொடு வழக்கம் போலத் தெருக்கதவை க் காப்பிடச் சொல்லிப் பத்திரம்பத்திரம்பத்திரமென்று முக்காற்கூ றிக் கடையைநோக்கிச் சென்றான் தஞ்சாவூரையருஞ் சிறுதுநேரத்

0 என் அத்தான். * இதென்ன.

தில் சந்தேகப்படிவந்து கதவிலேதட்டினர். வழிபார்த்திருந்த அளகவல்லியும் நெடுநேரம்காக்கவைத்து விட்டேனேயென்று முகமன் கூறி லளிதம்பேசிக் கதவைத்திறந்து அவர்கையைப் பிடித்துக்கொண்டு மேன்மாடம் போய்ச்சேர்ந்தாள். சுந்தரஞ்செட்டி ஐந்துநாழி கழித்துக் கடையைப் பூட்டிக்கொண்டு மீண்டுவீட்டை யடைந்து கதவிலேதட்டி அளகவல்லியை அழைத்தான். அப்பொழுது ஐயரோடுல்லாசமாகச் சம்பாஷித்து மேன்மாடத்திருந்த அளகவல்லி துணுக்குற்றுக்கிழவன் வந்தானென்று கையை நெரித்தாள். ஐயர் அச்சத்தினால் நடுங்கி யொடுங்கி யாசகத்துக்குவந்த பார்ப்பான் மோசத்திலகப் பட்டுக்கொண்டான். இன்றைக்கு யான் யமன் கையிலகப்படுவது நிச்சய மென்றுகூறிச்செய்வதியாதென்றுணராது திகைத்துநின்றான். அளகவல்லி ஐயரைத்தேற்றி யழைத்துப்போய் நெல்லிடுங் குதிரினுள் இறங்கச்சொல்லி அதன்வாயை மூடிவிட்டுக் கதவுகளையும் சாளரங்களையுந் திறந்துவிட்டுக் கையிலே ஒரு விளக்குமாற்றை யெடுத்துக்கொண்டு ஓடிப்போய்க் கதவைத்திறந்தாள்.

சுந்தரஞ்செட்டி தராசுப்பையை இராத்திரி பஞ்சணையில் வைத்தனாபகம் அதுமாத்திரமன்றி இரவெல்லாம் மூட்டுப்பூச்சியினால் எனக்கு நித்திரையும் வந்ததில்லை அதனையுந்தட்டி வெயிலில் போட வந்தேன். என் கண்மனியே யாது செய்துக்கொண்டிருந்தனை யென்றான் நீருல்லாசமாக உண்டுடுத்திக் கடைக்குபோய்விடுகின்றீர் நீர் போனவுடன் கையிற்கொண்ட விளக்குமாறு இன்னுங்கீழே போடவில்லை. உமக்கு ஆட்பட்ட அடிமையைப்போல வீட்டு வேலையெல்லாம் நானே பார்க்கின்றேன். நீர் பண்ணுகின்ற வாணிகத்தில் ஆளுக்குச் சம்பளங்கொடுத்து நடத்தமுடியுமா உம்முடைய சாமார்த்தியமெல்லாம் நேற்றுப்படைத்த லாபத்திற்கண்டு கொண்டேனே யென்று கூறிக் கீழ்க்கட்டை அலகிடத் தொடங்கினாள். செட்டி தன் கருமத்திலே கண்ணுங்கருத்து முடையவனாகிக் கையிலொரு மூங்கிற்கோலை யெடுத்துக்கொண்டு மேன்மாடஞ் சென்று அங்குள்ள அறைகள்தோறும் நுழைந்து பஞ்சணைச்சுருளினுள்ளே ஐயர் இருப்பாரென்றெண்ணித் தான் கொண்டுபோன கோலால் கைசலிக்கும்வரையில் மெத்தை சுருளின்மேல் மூட்டுப்பூச்சியே சாவு சாவு யென்று சொல்லிக்கொண்டு அறைந்தான். கைசலித்தபின் சுருளைவிரித்து வெயிலிலிட்டுவிட்டுக் கீழே யிறங்கிவந்து தராசுப்பையை ஆரா

ய்வான்போல அறைகள்தோறும் புகுந்து எங்குந் தேடினுன். ஐயர் இன்றைக்கு வாராதொழிந்தார் போலுமென்று மனத்துளெண்ணி மனைவியை அழைத்துக் கடைக்குப்போய் வருகின்றேன், ; தெருக் கதவைக் காப்பிடு என்று கற்பித்துக் கடையை நோக்கிமீண்டான்

அதன்பின்னர் அளகவல்லி கதவைக் காப்பிட்டுக்கொண்டு மேன்மாடஞ்சென்று ஐயரைக் குதிர்வாயைத்திறந்து வெளியில் வரும்படிசெய்து அவரைநோக்கி என்சாமர்த்திய மெப்படியென்று வினவிச் சரசவார்த்தைபேசி அவரோடு மகிழ்ந்திருந்தாள். சூரியனும் அந்திவாயை யடுத்துச்சாய்ந்தான். ஐயரதுகண்டு அளகவல்லியை நோக்கி இப்படித்தினந்தோறும் இவ்வேனிற் காலத்திலே கொடியவெயிலிலே காலிலே பாதரட்சையும் தலையிலேபாகையு மின்றிச்சத்திரத்திலேயிருந்து இந்நெடுந்தூரம்நடந்துவர என்னுலாகாது. குறித்தநேரத்தில் வாராதொழியில் உன்மனமும் வருந்துகின்றது. குதிரைவண்டி யொன்று இருக்குமாயின் எந்நேரத்திலும் வந்து போக வாய்ப்பாகும், அதற்கும் முஷ்டியேற்கும் பார்ப்பானுக்கும் நெடுந்தூரம், ஆசைப்பட்டென செயலாமென்று கூறினர். அது கேட்ட அளகவல்லி யாதும்பேசாது உள்ளேயோடிப்போய் ஒரு முத்துமாலையை யெடுத்துவந்து ஐயர்கையிற் கொடுத்து இதனைக் கொண்டுபோய்விற்று அப்பணத்தைக்கொண்டு ஒரு குதிரையும் பல்லக்கு வண்டியும் வாங்கிவைத்துக் கொள்ளக்கடவீர். மீதிப்பணத்தைக்கொண்டு ஒருவீட்டை வாடகத்துக்கு வாங்கி ஒருவேலைக்காரனை ஏற்படுத்தி அவனைக்கொண்டு போசனபாகம் பண்ணுவித்துக் கொள்ளக்கடவீரென்றுள் ஐயர் அப்படியே அதைவாங்கிக்கொண்டு அவளுக்குப் பிரியாவிடைகூறிப் புறப்பட்டுக் கடையை நோக்கிச் சென்றார். அங்கே வழக்கம்போலச் சுந்தரஞ்செட்டியைக் கண்டு ஆசீர்வாதம் பண்ணினர். சுந்தரஞ்செட்டி அஞ்சலிசெய்து, சுவாமீ 0 "கூர்ச்சுண்டிகூர்ச்சுண்டி" என்றான், ஐயா நமக்குச் சந்தியாவந்தனத்திற்கு நேரமாய்விட்டது. நேற்றுச் சாயங்காலமும் உம்மாலே சந்தியாவந்தனங் கெட்டது. இன்றைக்குப் பத்துநாழிகை வரையிற்றான் நித்திரை விட்டெழுந்தேன். காலையிலும் சந்தியா வந்தனம் மறந்தேன். அப்பால் ஸ்நானம்பண்ணவும் நேரமில்லாமல்

---

0 இருங்கள், இருங்கள்.

வெறுமையே விபூதியைக் குழைத்திட்டுப் போசனம் பண்ணிக்கொண்டு கிழப்பயல்வீட்டுக்கு வந்துவிட்டேன். இம்முத்து மாலையை எடுத்துக்கொண்டு பணத்தை ஜல்தியாய்த் தாருமென்றார்.

சுந்தரஞ்செட்டி சுவாமி அந்தச்சீமானைக் கிழப்பயலென்றுசொல்லாதிருங்களென்று பலமுறையும் தங்களைக்கேட்டுக்கொண்டேனே இம்முத்து மாலையுங்கொடுத்து அச்சீமான் தன்பெண்டாட்டியையுங் கொடுத்துக் கிழப்பயல் என்றுங்கேட்பது கிரகசாரந்தான். ஐயோ என்வயிறெரிகின்றதே அச்சீமான்கண்டால் உம்முயிரைவாங்கி விடுவானேயென்றான். ஐயர் அவன் எங்கேகாணும் நம்மைக்கண்டு பிடிக்கப்போகின்றான் அவனுடைய சாமர்த்தியம் ஆருக்குவருங்காணும் இன்றைக்கு ஒருபெரியமூங்கிற்கோலோடு செட்டிவந்து சேர்ந்தான் எங்குந்தேடிப் பார்த்தான் நானெங்கே அகப்படுகிறது! என்னை நெல்லுக் குதிரினுள்ளேயன்றோ மறைத்துவைத்தாளென்றார். அதுகேட்ட சுந்தரஞ்செட்டி தன்மனதிலெழுந்த அகங்காரத்தையும் கோபத்தையும்காட்டாது இப்படியாசமாச்சாரம்! எப்படியாவதுஒருநாளைக்கவன்கையிலகப்படுவீர், ஜாக்கிரதையாக நடந்துகொள்ளும்உமக்காகத்தான் சொல்லுகிறேனென்றுகூறி அம்மாலைக்காகமூவாயிரம்கொடுத்து ஐயரைஅனுப்பிவிட்டான், சுந்தரஞ்செட்டியும் வழக்கம்போல் மாலைக்காலத்தில் வீடுபோய்ச்சேர்ந்தான். அன்றிரவு தான்கேள்விபுற்றதை மனத்திலடக்கி யிருந்தான். இவ்விதமாக ஒருமாசம் வரையும் நடந்துவந்தது. செட்டியினுடைய செல்வமும் ஆபரணங்கள் மூலமாக அரைப்பங்குக்கு மேற்சென்று தொலைந்தது. செட்டியும் ஐயரைப்பிடிப்பதற்குப் பலமுறைசென்றும் ஒருநாளும் அவனுக்கு வாய்க்கவில்லை, ஈற்றிலே இதற்கு யாதுசெய்வேனென்று தனியிருந்து சூழ்ச்சிசெய்தான். அப்பொழுது வழக்கம்போல ஐயர் ஒருவச்சிரப்பதக்கத்தோடு கடைக்குவந்து சேர்ந்தார், அதை வாங்கிக்கொண்டு அதற்கும் பணத்தைக்கொடுத்து விட்டுச் சுவாமி நமக்கோருபகாரம்பண்ண வேண்டும். நாளைநானும் என்மனைவியும மாமனார் வீட்டுக்குப்போக வேண்டியிருப்பதால் தாங்கள் என்னுடன் வரல் வேண்டும் குதிரை வண்டியை இவ்விடத்தில் வைத்துக்கொண்டு தங்களைக் காத்திருப்பேன். நல்லபொழுது போக்குக்காகவே தங்களை வரும்படி கேட்கின்றேன். அதற்காகத் தங்களுக்கு ஒரு பீதாம்பரம் இனுமாகக் கொடுப்பேனென்றான். ஐயரும் அதற்

குடன்பட்டு மீண்டுபோய்வழியிலே அளகவல்லியைக் கண்டுமற்றை நாள்தமக்கொரு வேலையிருப்பதாகக்கூறி அவளை அதற்குச் சம்மதிக்கும்படிசெய்து அவள்பால் விடைபெற்றுக்கொண்டு சத்திரம்போய்ச்சேர்ந்தார்.

சிறிது நேரங்கழித்துச் சுந்தரஞ்செட்டியும் மாமன்வீட்டுக்குக் கொண்டுபோவதற்சார, வழக்கத்தினும் அதிகமாகப் பழவர்க்கங்களும் மிட்டாய்களும் மைத்துனி மாருக்காகச் சிற்றாடைகளும், மாமனுக்கு ஒரு பீதாம்பரமும்; மாமிக்குக்கூறைநாட்டுச் சேலையொன்றும் வாங்கி ஒரு சிற்றாள்தலையிலே சுமத்தி அவனோடு வீடுவந்துசேர்ந்தான். "எந்நாளிலும் சிரியாதவர் திருநாளிற் சிரித்தாற்" போல இன்றைக்கு விசேஷ பதார்த்தங்களுக்கும் வஸ்திரங்களுக்கும் கருத்துவைத்த தென்னேவென்று நாயகனைப் பார்த்து வினவினள், சுந்தரஞ்செட்டி "ரேப்புநாயினு இல்லுக்குபோவலனு" என்று கூறினன். அளகவல்லி தாம்மாத்திரமோ என்றாள், செட்டி நீயுங்கூடத்தான் என்றான். அவ்வளவில் அளகவல்லிக்குப் பேரானந்தமுண்டாயிற்று. அவள்மனதில் தஞ்சா ஷூரையருக்குச் சொல்லாமற்போகப் போகின்றேனே யென்றுண்டாகிய கவலைமிகவருத்திற்று, அதனைக் காட்டாமல் சுந்தரஞ்செட்டிக்கு வழக்கம்போலச் செய்யவேண்டிய வுபசாரங்களெல்லாஞ் செய்துவிட்டுத் தாய்வீட்டுக்குக் கொண்டு போவதற்காகச் சில அரும்பண்டங்களை யெடுத்துப் பொதிசெய்தாள். செட்டி போசனம் முடித்து வண்டிச்சாரதியை அழைத்து நீ நாளையுதயத்தில் அம்மாவை யழைத்துக்கொண்டு மாமாவீட்டுக்குப்போகவேண்டும், நான் குதிரைவண்டியில் மத்தியான போசனத்துக்கு அங்கேவந்து சேருவேன் என்றுகூறி நித்திரைசெய்யப்போனான். மற்றைநாட் சூரியோதயத்தில் அளகவல்லியெழுந்து வீட்டு வேலைகளை யெல்லாமுடித்துக் கோமுட்டிக்கு அதிகாலைப்போசனத்துக்கு வழிபண்ணிவிட்டுப் புறப்பட்டு வண்டியிலேறித் தாய்வீடு நோக்கிச்சென்றாள். அதன்பின்னர்க் கோமுட்டி காலைப்போசனத்தை முடித்து வீட்டைக் காப்பிட்டுக்கொண்டு குதிரைவண்டியிலேறிக் கடையை நோக்கிச்சென்று, அங்கே ஐயர் வரும்வரைக்கும் காத்துநின்றான். அப்போது ஐயரும் போசனம் முடித்துக்கொண்டு டம்பமாகச் சோமன்கட்டி உத்தரீயமிட்டுக் களபகஸ்தூரியணிந்து நெற்றியிற் கறுப்புப்பொட்டிட்டு வெற்றிலைச்சுருளை விரலிலே

யிடுக்கிக்கொண்டு விரைந்து நடந்தவ்விடத்தை யடைந்தார் சுந்தரஞ் செட்டி அவருக்கு அஞ்சலிசெய்தான். ஐயர் ஆசீர்வாதம்செய்து வண்டிமேற் கொண்டார். நாலுநாழிகையிற் சுந்தரஞ்செட்டியினு டைய கிராமத்திலேயுள்ள பார்ப்பார வீதியையடைதார்கள். அங் கே சுந்தரஞ்செட்டி வண்டியைநிறுத்தி அவரை இறக்கி ஒருரூபா அவர்கையிற் கொடுத்து ஒரு பார்ப்பார வீட்டைக்காட்டி, இவ்வீட் டிலே திருப்தியாகப் போசனம்பண்ணிக்கொண்டு அதோ தெரிகி ன்ற நம் மாமனுர் வீட்டுக்கு இருபதுநாழிகையளவில் வந்துசேருங் கள். அங்கே சதுரங்கமாடி விநோதமாகத் பொழுதுபோக்கலா மென்று கூறிவிட்டுவண்டியைச்செலுத்திக்கொண்டு மாமன்வீட்டை யடைந்தான், மாமன் தன்மருமகன் வரவை முன்னர்ப்போய்ச் சேர் ந்த மகளாலுணர்ந்து எதிர்நோக்கி யிருந்து ஏற்ற உபசாரம் புரிந் தான். சுந்தரஞ்செட்டி அவ்வீட்டிலுள்ள பந்துக்களோடும் மாம னோடும் உடனிருந்து போசனம்பண்ணி அவ்வவர் யோகக்ஷேமங் களை விசாரித்து அன்போடு கொண்டாடினன்.

அதன்பின்னர்த் தான் கொண்டுவந்த சிற்றுடைகளை மைத்துனி மாருக்கும் சேலையை மாமிக்கும் பீதாம்பரத்தை மாமனுக்கும் எடுத் துக் கொடுத்தான். மாமன் மருமகனுடைய வாணிகவிஷயங்களைக் குறித்து விசாரிக்கும்பொருட்டு அவனை யழைத்துக்கொண்டு முதற் கட்டில் வந்திருந்தான். சுந்தரஞ்செட்டித் தன் முறையீட்டை மாம னிடத்திற் சொல்வதற்கு இதுவே யேற்றவிடமும் சமையமுமென் றெண்ணி அளகவல்லியினுடைய முறை கேட்டும் தஞ்சாவூரையர் தனக்குச் சொல்லியவைகளையும் ஆதிபோடந்தமாகச் சொல்லி அழு தான். அதுகேட்ட மாமனும் மனக்கலக்கமுற்றுன். இச்சமயத்திலே தஞ்சாவூரையர் போசனம் முடித்துக்கொண்டு வந்துசேர்ந்தார். சுந் தரஞ்செட்டி உபசரித்து அவருக்கு ஆசனங்கொடுத்தான். மாமனும் ஐயருக் கஞ்சலிசெய்தான். சுந்தரஞ்செட்டி மாமனுக்கு ஐயரைக் காட்டி இவர்தாம் நான் முன்சொன்ன ஐயரென்றுன். அப்பால் ஐய ரைப்பார்த்து சுவாமிகாள் ! தாங்கள் இஷ்டம்பண்ணியிருக்கும் அக் கோமுட்டிவீட்டுச் சமாச்சாரத்தைச் சொல்லுங்கள் பார்ப்போ மெ ன்று கூறி மாமனைப்பார்த்து இவ்வையர் உத்தமகுணசீலர் "கபடமு லவலேசமுலேது மஞ்சி பாப்பனவாடு,, என்று கபடமாகப் புகழ்ந் தான். ஐயர் அவ்வீடு குலுங்கும்படியாக நைத்து என் சாமர்த்திய

த்தைக் கேட்கவா விரும்புகின்றீர்களென்று கூறித் தாம் விஜயபுரிக்குப் போனதும் கோமுட்டிவீட்டுக்கு யாசகத்துக்குச் சென்றதும், கதவிலேதட்டியதும், அளகவல்லிவந்து எட்டிப்பார்த்ததும் பின்பு ஆதியோடந்தமாய் பதினைந்துநாட் சமாச்சாரம்வரையில் சொல்லிவந்தார் அப்போது உள்ளேயிருந்தபடி இவைகளைக் கேட்டிருந்த அளகவல்லி ஓடிவந்து கதவிடுக்கிலேநின்று ஐயர்முன் எதிர்ப்பட்டாள். ஐயர் அவளைக்கண்டவுடனே ஓகோ மோசம்வந்ததேயென் றெண்ணிப் பதினைந்நாட் சமாச்சாரத்தைச் சொல்லிக்கொண்டுபோய் முடித்து இவ்வளவில் விழித்துவிட்டேன் என்றுகூறித் தாம் கூறினவற்றையெல்லாம் கனவிற்கண்ட கதையாகமுடித்தார். அளகவல்லிமனம் பூரித்து மறைந்தோடிப்போய் தாயிடம் தன் நாயகன் தன்னை விபசாரியாக்க எத்தனம் பட்டானென்று கூறி அழுதாள். மாமனாகிய கோமுட்டிமுகம் குன்றித் திகைத்து விசனம் மேலிட்டிருந்தவன் ஐயர், விழித்துவிட்டேனென்று சொன்னவளவில் ருத்திராகாரமாகச் சினந்தெழுந்து கதிகெட்டபயலேயென்று தன் மருமகனை விழித்தெழுந்தோடிப்போய் வாயில் வந்தவாறெல்லாம் வைது திருவடிதீக்ஷையும் செய்தான். அதுகண்ட மாமியும் மைத்துனிமாரும் தலைக்கொவ்வொரு விளக்குமாறு கொண்டுவந்து பேய்க்குறங்கே! அளகவல்லியைக்கொடுக்க அறியாமல் உன்கையிற் கொடுத்தோமே யென்று வைது கோபந்தீருமட்டும் புடைத்தார்கள். ஐயர் இச்சமையத்தில் நாமிங்கிருக்க லாகாதென்றெண்ணி அவ்விடத்தைவிட்டு நீங்கினார் சுந்தரஞ்செட்டி எழுந்துபோய் ஒருமூலையிலொதுங்கிருந்து செல்வமுமிழந்தேன் மானமுமிழந்தேன் ஈற்றில் மதியுமிழந்தேனென்று கூறிப் புலம்பியழுதான் அளகவல்லி தான் அங்கிருந்தால் தன்னிஷ்டப்படி நடப்பது கூடாதென்றெண்ணி ஒருவாறு தந்தையும் தாயையும் சமாதானம் பண்ணிக்கொண்டு சுந்தரஞ்செட்டியினிடம்போய் இனியாவது புத்தி வருமாவென்று கேட்டாள். செட்டி அவளைப் பார்த்து என்மீதிலிவ்வளவு இரக்கம் வைத்தாயே, அதுபோதும் எல்லாமிழந்து ஈற்றில் உன்னையுமிழந்தேனென்றிருந்தவெனக்கு இப்போது நீ என்னைவந்து தேற்றாதிருந்தால் ஓராறுதலுமுண்டாகமாட்டாது. ஆதலால் இனி நீ சொன்னபடியெல்லாம் கேட்கின்றேனென்றான். அவ்வளவில் இரண்டுபேரும் சமாதானமாக அன்றிரவை அங்கே கழித்தார்கள்.

மற்றைநாளுதயத்திலே சுந்தரஞ்செட்டி மாமன் மாமிமாரிடத்திலே விடைபெற்று அளகவல்லியை அழைத்துக்கொண்டு ஐயர் போனவிடத்தை ஆராயாமல் வீடுபோய்ச் சேர்ந்தான். தஞ்சாவூரையர் இவர்களங்குநின்று மீண்டசெய்தியைக் கேள்வியுற்றுப் பாதசாரியாகச் சாயங்காலத்தில் விஜயபுரியை யடைந்தார். அடுத்தநாட் கோமுட்டி கடைக்குப்போன சமையம்பார்த்து ஐயர் அங்கேசென்றார். ஐயருடைய போதனையால் அளகவல்லி தன் கையிலகப்பட்ட ஆடை ஆபரணங்களையெல்லாம்வாரிக்கொண்டு அவரோடு புறப்பட்டு மாறுவேஷந்தரித்து அந்நகரத்தைக்கடந்து தஞ்சாவூரைநோக்கிநடந்தாள்.

சிலதூரஞ் சென்றவுடனே சூரியன் அஸ்தமித்தான். இருட்காலமும்வந்து மூடியது எதிரேஒரு மயானமும் வந்தடுத்தது இருவரும் செல்கின்றவழியும் தனிவழியாயிற்று. அப்பொழுது அளகவல்லியினிடத்திலுள்ள பொருளையெல்லாம் கவர்தற்கு இதுவே ஏற்ற சமையமென்றெண்ணி, ஐயர் அவளைப்பார்த்து நான் செல்லுகின்றவழி திருடர்பயமுள்ளது ஆதலால்உன்னிடத்திலுள்ள ஆபரணங்களையெல்லாம் கழற்றி என்னிடத்திற் கொடுவென்று கூறி அவற்றையெல்லாம் அவள் கொடுக்க ஐயர்வாங்கி ஒருபொதி செய்துக்கொண்டார். சிறிதுதூரம் இருவரும் நடந்தார்கள். ஒருகாலத்திலும் நெடுந்தூரம் நடந்தறியாதவளாகிய அளகவல்லி இனி என்னால்நடக்க முடியாது இம்மரநிழலில் இராத்தங்கி போவோமென்றாள். ஐயர் அதற்கிசைந்து அவளை அங்கே நிருத்திவிட்டு சௌசம்பண்ணி வருகின்றேனென்று கூறிச் சிறுதிடம்போய் மறைந்து ஆபரணப்பொதியோடு ஓட்டமெடுத்தான்.

அக்காரிருளிலே நரிஊளையே காதில் விழுவதன்றி அவள்கண்ணுக்கு ஒன்றும் புலப்படவில்லை. காற்றிலே அசைகின்ற சருகொலி கேட்குந்தோறும், என்சாமி வந்தீரோவென்பாள் என் கண்ணாளா இதுவரையில் யாது செய்தனையென்பாள் அதனைச்சருகின் அரவமென்றறிந்து என்சாமீ என்று கூவி யழைப்பாள். உத்தரமில்லாமையால் தண்ணீர்தேடி தூரம்போயினையோ வென்பாள். சிறிது நேரம் பேசாதிருப்பாள் மீண்டு பெருங்குரலா லழைப்பாள். இப்படி நாலைந்து நாழிகைவரையும் நான்மருங்கும்பார்த்தும் காரிருளைக்கண்டு திகைப்பதும் பாம்புகள்சீறித் தூரத்திலோடுவதைக்கேட் அஞ்சுவதுமாய் நெஞ்சம் புடைபட ஏங்கியிருந்தாள் அதுகாறும் ஐயர்

வருவாரென்று எண்ணியிருந்த அளகவல்லி இச்சுடுகாட்டில் என்னை தனியேவிடுத்து எவ்விடத்தை யடைந்தாய் வழிதெரியாமல் தடுமாறுகின்றாயோவென்றுசொல்லிப் பெரும் வோலமிட்டழைப்பாள். அதற்கும் ஐயர் வராததுகண்டு பார்ப்பான் என்னை வஞ்சித்தான். உண்மையாகச் சௌசம்பண்ணப் போகின்றவனாயின், நகைப்பொதியையும் உடன்கொண்டு செல்வானா இதிலேதோ வஞ்சகமிருக்கின்றது. என்னைவஞ்சிக்கவே துணிந்துவிட்டான் என்னைமறந்து நகைப்பொதியோடு தன் ஊர்நோக்கி ஓடிவிட்டான். தெய்வமே! யான் யாதுசெய்வேனென் றழுவாள். தன் குலதெய்வமாகிய கன்னிகாபரமேசுவரியைநோக்கித் தொழுவாள் என்நாயகனுக்கு நான்செய்தது துரோகமன்றோ எனக்குக் கைமேற்பலனாக இது நேர்ந்ததென்று விழுவாள். வீழ்ந்து புலம்புவாள் சோரநாயகனை ஒருகாலத்திலும் நம்பலாகாதென்பது பழங்கதைகளாலு மறிவேனே, அறிந்துமென் நாயகனுக்கு தீங்குசெய்தேனே, என் நாயகன்வாயில் மண்ணிட்டேனே அம்மண் என்வாயில் உடனே வீழ்ந்ததே பேய்கள் சத்துகின்றனவே! ஐயோ! இவ்வாபத்துக்கு என்செய்வேனென்று கூறிப் பலவாறு பரிதவித்துப்புலம்பி மார்பிலறைந்துகொண்டு சோகமாகி வீழ்ந்தாள். அப்பொழுது நல்லிரவாகக் கோழியுங்கூவிற்று அச்சமயத்திலே அடுத்தவூரிற் கன்னமிட்டுக் களவாண்டுகொண்டு அப்பொருட்சுமையோடு அவ்வழியே வந்ததிருடர்கள் பதின்மர் இவர்களுடைய அரவத்தைகேட்டு தீக்கடைகோலை யெடுத்துக்கடைந்து நெருப்பையுண்டாக்கி ஒருதிரியிலே தீபத்தையேற்றிப் பார்த்தார்கள். அவளுடையவரலாற்றை ஆராய்ந்தார்கள். தன் வரலாற்றை அளகவல்லி ஆதியோடந்தம் அவர்களுக்குச் சொன்னாள். அதுகேட்ட திருடர் தலைவன் இவள் எனக்குரியவளென்றான் அதற்கு மற்றெல்லோரும் இணங்கி அங்ஙனமே ஆகுக என்றார்கள் அதுகேட்ட அளகவல்லி அங்ஙனஞ்செய்வது முறையல்ல என்னைக் காத்துக்கொண்டுபோய்த் தந்தைவீட்டில் விடுவது உங்கள் கடனென்றாள். அதுகேட்ட சோரர்தலைவன் இப்படி வேசிக்கு முறையுமொன்றோ! பதிவிரதையாயிருந்தால் அவளை நாங்கள் தீண்டுவது தகுதியன்று பதிவிரதைகளை மாத்திரம் தீண்டலாகாதென்று எங்கள் சோரகுருவாகிய பட்டிக்கறுப்பண்ணார் எங்களுக்குச் சொன்னவாக்கைக்கடந்தாற் குருத்துரோகமாகுமே உத்தமகுணசீலனும் நம்மைக் காணும்போதெல்லாம் நமக்குமிக்க உபசாரம்பண்ணிக் கையுறையாகப் பத்து பதினைந்து

ரூபாவும் சோமன்சோடும் கொடுப்பவனாகிய சுந்தரஞ் செட்டியை மோசஞ்செய்த இந்த சிரிக்குக்கு இவ்வளவு அகங்காரமா அடா வல்லத்துமூர்க்கா அவளுக்கிரண்டு கொழுக்கட்டை கொடடா பார்ப்போமென்றான். அது கேட்ட வல்லத்துமூர்க்கன் ஓடிப்போய் கைமுட்டியினாலே முதுகி இரண்டறை கொடுத்தான் மற்றவர்களும் தங்கள்பங்கு வீண்போவதாவென்று சொல்லி முதுகுபக்கம் பூரிக்கும்படி கைகொண்டமட்டும் கொடுத்தார்கள்

இவ்வறையெல்லாம் பெற்ற அளகவல்லி பொறுக்கமாட்டாமற் புழுப்போற்றுடித்துச் சொன்னவாறெல்லாம் கேட்கின்றேன். இனி யாதுஞ் செய்யாதிருக்கவென்று சோரர்தலைவனாகிய குஷ்டக்கறுப்பன் காலில் விழுந்தாள். பட்டிநாயே பட்டதுபோதுமா புத்திவந்ததாவென்றுகூறித் தான்கொண்டுவந்த சுமையை அவள் தலையிலேற்றி இதனைக்கொண்டு முன்னே நடவென்றான். சந்திரனும் இவளுடையநிலையைப் பார்த்து நகைப்பவன்போன்று கீழ்த்திசையி லுதயமானான் அளகவல்லியும் என்வீடுதேடி வலியவந்த செல்வத்தையும் சிங்காரமாளிகையையும் விடுத்து முஷ்டியேற்கும் பார்ப்பானை நம்பிப்புறப்பட்டுச் சுடுகாட்டிற்காற்றிருளிற்பேய்கள்நடுவில் அவனென்னைத் தனியே விடுத்தேக இப்போது இவ்விழிகுலப் பயலுக்குப் பெண்டாகினேனேயென்று மனத்துளெண்ணி கண்களி நீர் தாரை தாரையாக வீழ்ந்து வழிநனைக்க நடந்தாள். பொழுதுவிடியுமுன் அவனோடுடன் சென்று அவன் இருக்கும் சிறுகிராமத்தை அடைந்தாள். அங்கே திருடர் தலைவன் ஒரு சிறுகுடிசையைக் காட்டி அவளோடதிற் பிரவேசித்தான். உணவின்மையாலும் மெய்வருந்த வழிநடந்த சோர்வினாலும் தாங்குதற்கரிய துக்கத்தினாலும் அயர்ந்து கரடும் முரடுமான தரையையே பஞ்சணையாகவும் கையையே தலையணையாகவுங்கொண்டு நித்திரை போயினாள். அளகவல்லியினுடைய நிலையைக்காணும்பொருட்டு விரைந்தெழுவான்போன்று சூரியனுமுதயஞ்செய்தான். அவ்வளவில் நித்திரைதெளிந்து அறிவுதித்தலும், தன் கதியை நினைந்து கண்ணீரோடு எழுந்தாள். எழுந்தவள் எதிரிலே கடலொலிபோலக் காதவழிக்குக் கேட்கும் பெருங்குறட்டையோடு நித்திரை செய்கின்ற திருடர் தலைவனைக் கண்டாள். அவனுடம்பெங்கும் குஷ்டரோகத்தினாலே புண்மயமா யிருப்பதும் அப்புண்கள் கால்களிலும் புசங்களிலும் முதிர்ந்த வெள்ளரிப்பழம்

உ

சிவமயம்.

## கருவாட்டுக்கறி—துண்டு.

பத்துவகைக்கறியும் பாங்காய்சமைத்தாலும்
செத்தகருவாட்டுமண்டை சீர்வருமோ—நித்தநித்தம்
தேன்சாற்றிலும்அதிகம் தித்திக்கும்தேளிவரால்
மீன்சாற்றைக்கண்டால் கொள்வீர்.

---

## மொட்டாந்தலைக்கும் முழுக்குடுமிக்கும் சமவாதம்.

### முழுக்குடுமி.

தலைநிறைந்த மயிரிருந்தால் ஜடைவளரும் சகலருமே சாமியா ரென்—றிலகுபுகழ் படித்திடுவார் வெய்யலிலே உச்சியெரிந்திடாமற் காக்கும்—பலமுண்டு மயிர்வினைஞன் கூலியில்லை யிவைகளெல்லாம் பார்க்கமொட்டாந்—தலையர்களே நல்லவர்க்கு நாலுமயிர் வேணு மென்பதானும் பேச்சே.

### மொட்டை.

கட்டுப்படாது அழுக்கடையாது கனத்த சண்டைக்
கெட்டுப்படாது நல்லெண்ணெய் கேட்காது நம்பின்பமின்னூர்
குட்டுப்பட்டாலும் கணீரென்று கேட்கும் குடுமியற்ற
மொட்டந்தலைக்குச் சரியோ மயிர்த்தலை மூடர்களே!

### முழுக்குடுமி.

மொட்டந் தலைக்கொரு முக்காடுவேணும் முகத்தழகும்
கொட்டோடும், எத்தனை மாதம் அருஞ்சிறைக் கேகிவெளிப்
பட்டாய் என்றியாரும் வினவுவர் ஆகலின் பார்க்கமுழு
முட்டாள்களே இந்த மொட்டத்தலைக்கு முடிவென்னவோ?

### மொட்டை.

மெத்தவும் பேனும் ஈறும் நிறைந்தங்கு மென்றுதின்னக்
சுத்தமாய் சாப்பிடும்போதும் தலையைச் சொரிந்துகொண்டு
பித்தர்போல் கையொன்று செய்யவும் வாயொன்றுபேசிடவும்
இத்தனைபாடும் மயிரினாலல்லோ என்னிஷ்டர்களே!

முழுக்குடுமி.

வெண்ணீரில் வீழ்ந்து தவித்திடும்போதும் தலைமயிர்தான்
முன்னே யுதவிடும் அல்லாமலும்தலை மூளைதனக்
கெந்நாளும் சேதம் அணுகாமல்காக்கும் இதைவிடுத்து
கூன்றுரு சாமிகள்போலே மழிப்பதோ மட்டிகளே !

மொட்டை.

நீரிற்குளிக்க பயங்கொடுக்காது நெடுமயிர்சிக்
கேறிட்டதோடு போராடலில்லை மற்றீரமில்லை
வீறிட்ட வேர்வைக் கசிந்திடுநாற்றம் வெளிக்குவரா
காரிட்ட கூந்தல் வளர்ப்பதென்னோ தடிக்கட்டைகளே !

முழுக்குடுமி.

சிங்கந் தனக்குப் பிடரியொன்றால் மிருகேந்திரனும்
அங்கஞ் செறிந்த மயிரே கரடிக்கு மாயினென்ன
தங்கும் பலத்த மதயானை மொண்ணைத் தலையுளதால்
எங்கும் புகழ்ச்சியிலையே அதால் மயிரே சிறப்பாம்.

மொட்டை.

அம்பட்டன் கையில் மயிரைக்கொடுக்க அவன்பிடித்தால்
எம்மட்டும் ஆட்டுகிறானோ அதற்கும் இசைந்து பின்னர்
விம்மிக் குனிந்தவன் பாதாரவிந்தத்தை வேண்டுவதுபோல்
தம்முப்பிடிக்க விதியென்னவோ வெறுந் தாசிரிகாள் !

---

# விகட உலகநீதி.

காப்பு.

உலகநீதி யுரைத்திட வீண்மதக்
கலகமூட்டும் கடவுளே காப்பதாம்.

நூல்.

ஓதாமல் சாம்பல் மந்திரம் அடிக்கவேண்டாம்
ஒருவரையு மனுஷரென்று நம்பவேண்டாம்

மாதாவை மனைவியுடன் வைக்கவேண்டாம்
மயிர்பேச்சை மலையாக முடிக்கவேண்டாம்
போதாத சோறு விருந்திடவே வேண்டாம்
புண்களிலே கோலைவிட்டுக் குடையவேண்டாம்
வாதாடும் மதங்களுட சாமிமாரை
வழிபிடித்துப் பெருமாடாய் வாழ்க நெஞ்சே. (1)

நெஞ்சாற எவர்களையும் புகழவேண்டாம்
நிலையில்லா உடம்பை நன்றாய் வளர்க்கவேண்டாம்
நஞ்சுதின்று கடனுக்காய் சாகவேண்டாம்
நல்லிணக்கம் குரங்குனுடன் வைக்கவேண்டாம்
அஞ்சாத மனைவியுடன் புழங்கவேண்டாம்
அடுத்த வீட்டுக்காரனிடம் சண்டை வேண்டாம்
வஞ்சாதி மதம்பிடித்த சாமிமாரை
வணங்கியே பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (2)

சேராத சதிபதியைச் சேர்க்கவேண்டாம்
சிறுபசங்களிடத்தினில்வாய் கொடுக்கவேண்டாம்.
ஊராரைசாவுவாழ்வில் சேர்க்கவேண்டாம்
உற்றார்க்குவீட்டிலிடங் கொடுக்கவேண்டாம்.
பேரானகிழவர்சொல்லைக் கேட்கவேண்டாம்
பிணைபட்டுமீட்பதற்குந் துணியவேண்டாம்.
வாரானசாமிகளெவ் வளவென்றாலும்
வணங்கிகொண்டு பெருமாடாய்வாழ்கநெஞ்சே. (3)

வார்த்தைபந்தல்போடுவதை மறக்கவேண்டாம்
மதியாதோர்களை ஊரில் வைக்கவேண்டாம்
மூத்தாளைக்கிழவியென்று மறுக்கவேண்டாம்
முன்கோபம்கெட்டதென்று நினைக்கவேண்டாம்
வாத்தியார்சூத்தில்சுண்ணம் தடவவேண்டாம்
வழிபார்க்கும்கூத்திகளை வெறுக்கவேண்டாம்
வார்த்தைவெல்லம் மனம்வேம்பாம் பகட்டுக்காரை
வணங்கிகொண்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (4)

கருதாமல் வார்த்தையில் மிஞ்சிடவே வேண்டாம்
கைபலத்தைநம்பி சண்டைப் போடவேண்டாம்

உருவில்லாபெண்ணைமணஞ் செய்யவேண்டாம்
ஊர்தாலியறுத்துலையில் போடவேண்டாம்
இருதாரத்திற்கும் சண்டை மூட்டவேண்டாம்
இருப்புவைக்காமல்தின்று சாகவேண்டாம்
வருவார்க்கு வழிபார்க்கும் பரத்தைமாரை
வணங்கிகொண்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (5)

மனம்போனபடிஸ்திரீயைத் தடுக்கவேண்டாம்
மாற்றானை உயிருடனே வைக்கவேண்டாம்
தனந்தேடிபிள்ளைகட்கு வைக்கவேண்டாம்
தருமகர்த்தன் பட்டமது வாங்கவேண்டாம்
சினந்தேடியுள்ளுக்குள் அடக்கவேண்டாம்
சினத்திருந்த பெண்கள்கையைப் பிடிக்கவேண்டாம்
மனங்கோணி மதம்பிடித்த குருக்கள்மாரை
வணங்கிகொண்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (6)

குற்றமொன்றுமனைவியுடன் செய்யவேண்டாம்
குடிவார்க்கா வெறும்விருந்தை யுண்ணவேண்டாம்
கற்றுவிட்டால் பூமியில்கால் பதியவேண்டாம்
கணக்குவைத்து சமுசாரம் பண்ணவேண்டாம்
கொற்றவன்வாழ் ஊரில்குடி யிருக்கவேண்டாம்
குடும்பமுள்ள விடத்தில்பெண்ணைக் கொள்ளவேண்டாம்
மற்செரிந்து வாதாடுங் குருக்கள்மாரை
வணங்கிகொண்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (7)

வாழாப்பெண்தலையில் மயிர்வைக்கவேண்டாம்
வர்த்தகத்தில் கொண்டவிலை விற்கவேண்டாம்
கூழோடுபுளியங்காய் கடிக்கவேண்டாம்
குழந்தையிடம் தூதுசொல்லி யனுப்பவேண்டாம்
பாழான தமிழ்படிப்பை படிக்கவேண்டாம்
பாட்டிகளையிளப்பமென்று நினைக்கவேண்டாம்
வாழாதவாழ்வைதரும் வெள்ளிப்பொன்னை
வணங்கிகொண்டுபெருமாடாய் வாழ்கநெஞ்சே. (8)

மண்ணின்மேல் மலஜலங்கள் செய்யவேண்டாம்
மனம்சலித்தபெண்ணண்டை சிரிக்கவேண்டாம்

கண்முன்னே விபசாரம் செய்யவேண்டாம்
காணாதைச் சொல்லாம லிருக்கவேண்டாம்
புண்வாங்கி அலையாம லிருக்கவேண்டாம்
புறஞ்சொல்லித் திரியாமலிருக்கவேண்டாம்
பண்ணிபோல் சதைபெருத்த குருக்கள்மாரை
பணிந்துகொண்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (9)

மரமேரி கள்குடிக்கா திருக்கவேண்டாம்
வாதாடிபொருள்பறிக்கா திருக்கவேண்டாம்
திரம்பேசிச் சண்டையிடா திருக்கவேண்டாம்
தெய்வத்தைகாணுமட்டும் துதிக்கவேண்டாம்
இறந்தாலும் பொய்தன்னை மறக்கவேண்டாம்
ஏசுவார்வாசலைவிட்டு டகலவேண்டாம்
வருந்தமனம்வாதாடும் குருக்கள்மாரை
வழிபட்டு பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (10)

அஞ்சுபேர்கூலிதனைக் கொடுக்கவேண்டாம்
அப்பனே துணிவெளுத்த வண்ணான்கூலி
மிஞ்சுபேன் குடிகெடுத்த நாவிதன்கூலி
மிரட்டிதுட்டுப்பறிக்கும் முபாத்தியாயர்கூலி
நெஞ்சலற நஞ்சறுத்த மருத்துவச்சிகூலி
நிமிஷநோவை கிளறிவைத்த வைத்தியன்கூலி
வஞ்சகமாய் இவாள்கூலி வாயில்போட்டு
மதம்பிடித்த சாமிகளை வணங்குநெஞ்சே.

கூறுனகுடுமிவைத்துத் திரியவேண்டாம்
கொண்டைமேல் பூமுடிக்கா திருக்கவேண்டாம்
ஜோருனஜோக்குநடை விடவேவேண்டாம்
சொல்லரிய பெரியோரோ டிடிக்கவேண்டாம்
போராக்கும் தெய்வத்தைப் புகழவேண்டாம்
புத்திகெட்டசிறுவர்களை மறக்கவேண்டாம்
மாறுமல் மதச்சண்டை குருக்கள்மாரை
வாழ்த்தியே பெருமாடாய் வாழ்கநெஞ்சே. (12)

ஆதரித்தோர் வைத்திருக்கும் பொருளைத்தேடி
அப்பிகொண்டு ரயிலேறி ஓடும்பேரும்

காதலுடன் ஓதிவைத்த உகலநாதன்
கருத்தையுமே கண்டுபுகழாதபேரும்
சூதுவித்தை கற்றோருங் கேட்டபேரும்
சுகமுடனே இந்நாளில் வாழுமாபோல்
வாதமுடன் உயிர்உடலிலிருக்குமட்டும்
வையகத்தில் வாழ்ந்திருந்து இறப்பார்தானே. (13)

விகட உலகநீதி முற்றும் உற்றது.

---

# ஜெகஜால சித்தர் பாடல்.

மெய்பேசா பொய்யர்களும் பிழைக்கவேண்டி
மேதினியில் மூடாமுழுங்கி முனிவர்சொன்ன
பொய்யானகாவியம் லட்சம்கிரந்தம்
புகன்றதையும் ரெணப்புடுங்கி ரிஷிசுருக்கி
ஒய்யாரமாய்ப் பதினாயிரம்பாட
உணர்ச்சிபெற யானுமதை முப்பதாக்கி
பையவே உரைத்திட்டேன் ஜெகஜாலசித்தர்பாடல்
படிப்பவர்க்கும் பிடிப்பவர்க்கும் விடுத்தேன்காப்பே.

சாப்பாகும் என்சீடா தெருபொறுக்கி
கருத்துடனே இதைத்தழுவிப் பிடித்தபேர்க்கு
ஏய்ப்பான தந்திரங்கள் ஜெகஜாலங்கள்
எல்லாமே சுளுவினிலே தெரியும்பாரு
சாப்பாட்டு ராமன்கட்கு இந்நூல்முக்கியம்
சதாவேளை கையினிலே யிருக்கவேண்டும்
தாப்பான இந்நூல்போல் யாரும்சொல்லார்
தாரணியோர்க் காகவுமே சொன்னேன்பாரே.

பார்டா இந்நூலைப் பாருபாரு
பகல்வெளிச்சம் போடுதற்கு இதுவேசிறு
கோரடாஎந்நூலைக் கோருகோரு
கூறுரே இதைப்போல ரிஷிகள்சித்தர்

தலங்டாஇந்நூல்போல் அறைந்தாருண்டோ
தூறிவுகெட்டமானிடர்க்கா யல்லோசொன்னேன்
சீரடாஇந்நூல்போல் அறைந்தாருண்டோ
செல்வம்வரும் கல்விவரும் சிறப்புமுண்டே.

உண்டென்று சொல்லிவிட்டேன் சும்மாசும்மா
உண்மையென்று நம்பிடவும் வேண்டாம் வேண்டாம்
கண்டதோர் காரியமு மிதுவுமல்ல
காதாரக்கேட்டதொரு புளுகுமல்ல
பண்டுளோர் சொன்னதொரு கதையுமல்ல
பாடினேன் வரயில்வந்த படியேயானும்
தெண்டுகொண்ட எமனைவெல்ல வேண்டுமென்று
தெரிவிப்பேன் உனக்குஒரு சூட்சந்தானே.

சூட்சமுடன் அதிகாலை யெழுந்திருந்து
சுகமாககஞ்சாவை சிமிளில்போட்டு
மாட்சிமைதங்கிய அக்கினி பகவான்றன்னை
மகிமையுடன் மூட்டியே யுந்திமட்டும்
தாட்சியின்றி பாயவுமே மண்டலந்தான்
தயவாகவுட்கொண்டு அன்னம்நீக்கில்
காட்சியென்ற கைலாசம் உனக்குள்ளாச்சு
காலனுமே உன்னைவெட்டி பார்க்கான்பாரே.

பாரப்பாகஞ்காவை பழக்குமார்க்கம்
பகருவேன் சேட்டுபீடி கோல்டன் சிகரெட்
சீரப்பா சிலதுநாள் பிடித்துப்பாரு
ஜெயமானல் பந்தர்சுருட் டதனைவாங்கி
நேரப்பா கொஞ்சநாள் பிடித்துச்சென்றால்
நேர்த்தியான புகையிலையைத் தொட்டுக்கொள்வாய்
தேரப்பா அதில்பலனு ளூழன்றுவந்தால்
திருநடன கஞ்சர்வும் சிக்குந்தானே.

சிக்குமடா முடிச்சிமாறும் பத்தரோடும்
செப்புங்கூத்திக் கள்ளருடன் குடியரோடும்
முக்கியமாய் சிநேகிதமும் செய்துவந்தால்
முனிவர்சித்தர் காணாத படியுங்காண்பாய்

[illegible]குவமாய் போலீசார் தங்கக்காப்பும்
பசிக்குவிடும் களிமொத்தை இருக்கும்ஷாப்பும்
தக்குமடா வசைமொழிகள் உலகமெங்கும்
தாரணியில் கழுதைபட்டந் தங்குந்தானே.

தானென்றதறுதலை சிஷியனேகேள்
தக்கபடிஅடயோகம் செய்யவென்றால்
மானென்ற வேசியெனுங் குதிரையேறி
மகிழ்ச்சியுடன் சவாரியுமே செய்துவந்தால்
நானென்ற அகம்படைப்பா யப்போதப்பா
நயமான ஈயமதை வாங்கிக்காச்சி
ஊமென்ற தேகத்துள் ஊத்திக்கொண்டால்
ஒன்பது வாசற்படியும் அடையுங்கேளே.

கேளடா அடைந்தபின்பு குழியும்வெட்டி
கெணிதமுடனே யதில் நீ யிறங்கிக்கொண்டு
பாளடா மேல்மண்ணை மூடிக்கொண்டு
பக்குவமா வசி, வசி எமதேவா நமவென்று
நாளடா தள்ளாமல் உருவும் ஏத்தி
நலமாக வந்தாலுன் ஜீவாத்மாதான்
கேளடா பண்ணும லுனைவிட்டேகும்
குமாரனே சதாசிவமா யிருப்பாய்நீயே.

இருப்பாயே அஞ்ஞானம் காணவென்றால்
என்மகனே மதபேதம் ஜாதிபேதம்
குறிப்பான தெய்வபேதம் மூன்றும்பேசி
கூரான குணமதனைக் கெடுத்துக்கொண்டு
சிரிப்பான கொக்கோகம் முப்பத்திரண்டு
சிறந்த அறுபத்திநாலு படமுங்கண்டு
தெருப்பான வேசியிட பழக்கங்கொண்டு
திரவியத்தை செலவிட்டால் விளங்குந்தானே.

விளங்குமடா தேகத்தில் ரோகாரோகம்
விளைந்தபின்பு வைத்தியனும் செய்வான் பாகம்
கலங்குமடா உன்னுடைய நல்லபோகம்
கழுதைவாகனி யுன்மேல் நீங்காமோகம்

துலங்கவும் உன்முகத்திலே நிற்பாளப்பா
தூயகுண தனலக்ஷ்மி தைரியலக்ஷ்மி
பலங்களெனும் சக்திலக்ஷ்மி பக்திலக்ஷ்மி
பறந்துபோய் குரங்குலக்ஷ்மி குடிகொள்வாளே.

கொள்ளப்பா குருநிந்தையா குரங்கேயென்று
குருநிந்தனால் அஞ்ஞானம் எல்லாந்தோணும்
தள்ளப்பா மற்றவர்கள் சாஸ்திரத்தை
தழுவப்பா என்னுடைய சூஸ்திரத்தை
எள்ளப்பா இதைப்போல யார்தான் சொன்னார்
ஏதுங்கெட்ட மூளிகட்கா யல்லோசொன்னேன்
கள்ளப்பா குடியாத மூடர்க்கிந்நூல்
கருத்தினிலே ஒருபோதும் படாதுதானே.

படாதுதான் போனாலும் போகட்டப்பா
பகருவேன் வாதமுறை கைபாகந்தான்
கெடாதபடி ஒருமணங்கு தங்கம்வாங்கி
சீர்த்திபெற கால்மணங்கு செம்புகூட்டி
விடாதபடி நான்மணங்கு ரசத்தைச்சேர்த்து
விபரமுடன் கறுப்பு பூவரசன் சாற்றால்
தொடாதபடி கலவத்தில் போட்டுநால்நாள்
தொடரவே தானரைத்து உருண்டைசேரே.

சேர்த்ததோர் உருண்டைமேல் சீலைமண்ணு
சீராகச் செய்துமே மலையைப்போலே
நேர்த்தியுடன் புடம்போட்டு அதின்மேலேதான்
நினைவாக வாதிகளைத் தூக்கிப்போட்டு
பார்த்தவர்கள் பயப்படுவார் காட்டுத்தீபோல்
பகல்ராவு பத்துநாள் எரிந்தணைந்தால்
நீர்த்தபின்பு புடமதனை எடுத்துப்பார்த்தால்
நீதியற்ற அபரஞ்சி யாகுந்தானே.

ஆகுமடா இன்னமொரு முறைதான்சொல்வேன்
அப்பனே நாக்குபூச்சில் தங்கக்கம்பி
வர்குடனே ஏற்றியே கருக்கவைத்து
வையகத்தோ ரறியாம லிருக்கும்போது

வெருகின்ற கும்பியிலே போட்டுவிட்டு
வெட்டையான செம்பை யதிலிட்டுவூதில்
போகுமடா வெட்டைசெம்பு அனலாகத்தான்
போட்டுவைத்த பூச்சிதங்கம் விளங்குந்தானே.

விளங்கவுமே பின்னுமொரு முறையுங்கேளு
வெகுசுருக்கில் பெருங்கரியைத் துளைத்துத்துக்கொண்டு
துலங்குகின்ற தங்கத்தை யதிலேஏற்றி
துவாரத்தைக் கரியாலே யடைத்துப்போட்டு
நலங்களற முன்செய்து வைத்திருக்கும்
நயமான செம்பதனை யுருக்கும்போது
களங்கமற முன்கரியை பக்குவமாக
கரியோடு சேர்த்துமே யூதுவாயே.

ஊதுவாய் ஓரஞ்சி நிமிஷமப்பா
ஓடாமல் செம்புமே கரிந்துபோகும்
நீதியுற்ற கரிதங்கம் முன்னேதோணும்
நினைவாக அதையெடுத்து வையத்தோர்க்கு
வாதியே காட்டினால் போதுமப்பா
வஞ்சமற்ற சுத்தரென்றும் முனிவரென்றும்
ஓதியே உன்னடியில் வீழ்ந்துவீழ்ந்து
உளங்களிக்கத் துதிப்பார்க ளுன்னைத்தானே.

உன்னையே அகஸ்தியரென்றும் போகரென்றும்
உரைத்திடும் கொரக்கரென்றும் புலஸ்தியரென்றும்
மன்னுங் கொங்கணரென்றும் தேரையரென்றும்
மகான்சட்டை முனியென்றும் புஜண்டரென்றும்
இன்னும் ராமதேவரென்றும் புலிப்பாணியென்றும்
ஏற்றியேயுன்பாதம் போற்றுவார்கள்
என்னநீ கேட்டாலும் தடையுமின்றி
இன்பமுடனே யளிப்பா ருலகத்தோரே.

உலகத்தார் தந்திரத்தால் மயங்குவார்கள்
உரைக்குமிப்பொன் வித்தைகண்டால் பின்னும்பின்னும்
கலகலத்துப்போவார்கள் கருத்தும் வீட்டு
கண்டபடி நாய்போலே அலைச்சல்கொள்வார்

பலகலைகள் கற்றோரும் பொன்னேயென்றால்
படிப்பைஎல்லாம் விட்டுமே இதன்மேல்நிற்பார்
நலமாக தேசமிவ்வா றிருப்பதாலே
நம்முடைய சாஸ்திரமும் நிலைக்குந்தானே.

தானப்பா என்சிஷியா தடியாநீகேள்
தனுக்காக இவ்வேலை காட்டிவிட்டால்
நாணப்பா என்னசொல்வேன் அகிலமீதில்
நாடுவார் பலகோடி மாந்தருன்னை
வீணப்பா காலமது தள்ளிடாமல்
வேண்டுவோ ரிடத்தினிலே பொருள்பரித்து
மானப்பா போலவுமே பறக்கவேண்டும்
மாட்டிகொண்டால் அந்தமான் தீவுதானே.

அந்தமான் தீவோடும் சும்மாபோகா
அடிகுத்து உதைகளுமே படவேவேண்டும்
சிந்திப்போம் நமமுடைய பவுஷெல்லாந்தான்
சீக்கிரத்தில் வேலைகளும் பார்க்கவேண்டும்
பிந்தினதோர் காரியமும் பார்க்கொணாது
பெண்வசிய மொன்றுமே விளம்புவேன்கேள்
விந்தையாய் டிரசுகளு மணிந்துகொண்டு
விருப்பமுடன் சோப்பில் ரூபாயைப்போடே.

போடடா அதைகுலுக்கி பிலுக்கிக்கொண்டு
பொன்போன்ற பெண்கள்வாழ் வீட்டினண்டை
நாடடா நாலெட்டு தடவைரோட்டில்
நடையடா கொள்ளுமடா துட்டைக்காட்டி
ஜாடடா கண்ணடியும்சைகை பெண்மேல்
சாற்றடா ஜாவளியும் கோவைப்பாட்டும்
ஜோடடா கிடைத்தாலும் கிடைக்கும்அன்றி
சுகங்களுமே எப்போது முண்டுதானே.

உண்டான இன்னமொரு வகையுஞ்சொல்வேன்
ஊதாரி மாணுக்கா உறுதியாய்க்கேள்
பெண்டான அழகியுமே யிருக்கும்வீட்டில்
பிராண சிநேகிதமாக இருந்துகொண்டு

# யோக போக ஞானம்

ஆதியிலே யோக போக ஞானம் காப்பு
அதனோடு ஒரு கொம்பைப் பிடித்தோன்காப்பு
மேதினியில் ஞானத்தைப் புகன்றேன் காப்பு
மேன்மைபெற்ற தொப்பை வயிற்றிற்கும் காப்பு
ஜாதிமத பேதமற்ற சான்றேன் காப்பு
சமரசத்திலேயமர்ந்து நின்றேன் காப்பு
ஓதியதோர் என்னூலும் நன்னூலென்றே
உரைத்திட்டேன் பதினெண்சித்தர் நூலுங்காப்பே. (1)

நூலான என்னூலைப்போலே யாரும்
நுணுக்கமுடன் சொன்னவர்கள் இல்லைஇல்லை
வேலோனும் அனந்தம்நூல் செய்துவிட்டார்
வேதாந்தி அகஸ்தியரும் வெகுநூல்செய்தார்
மேலான கொங்கணவர் இராமதேவர்
மேவும் கோரக்கருடன் கருவூராரும்
காலாங்கி மாமுனியும் புஜண்டர்போகர்
கணக்கற்ற பாடல்களும் செய்திட்டாரே. (2)

செய்திட்டார் ரோமர்பிர்ம முனியும்மெத்த
சீரான காவியங்க ளனந்தம்சொன்னார்
உய்யவே அகப்பைசித்தர் குதம்பைசித்தர்
உற்ற இடக்காட்டுசித்தர் அனந்தம்சித்தர்
வையகத்தில் வெகுநூல்கள் காஷாயங்கள்
வழுத்தினர் பதினெட்டு சித்தருந்தான்
மெய்யெனவே அந்நூலை நம்பிடாதே
மேதினியோர் தான்மிரள சொன்னார்பாரே. (3)

மிரண்டிடவே சொன்னார்கள் பதினெண்சித்தர்
மெத்தவே கஞ்சாபுகை பிடித்துக்கொண்டும்
அரண்டிடவே கள்ளையும் குடித்துவிட்டு
அதனோடு அராக்கையுமே நெட்டிவிட்டு

மருண்டிடவே அறிவற்று மனமுமற்று
மயக்கமுற்று குரங்கைப்போல் உறங்கிக்கொண்டு
புரண்டு புரண்டிருக்கையிலே பலவாறு நூலை
பேசிட்டார் பேமானி சித்தர்பாரே. (4)

பாரப்பா அன்னவர்கள் சொன்ன நூலை
பாரிதனில் அச்சாபீஸ் பெருத்தாலே
நேரப்பா சென்னையிலே வெகுபேர்சித்தர்
நீட்டினார் அனந்தம்நூல் தாறுமாறாய்
போரப்பா போலவுமே குவித்துப்போட்டார்
பொய்யான சித்தர்களின் நூலையெல்லாம்
சீரப்பா செய்யவுமே யானுந்தோன்றி
செப்பினேன் யோகபோக ஞானந்தானே. (5)

ஞானமென்றால் வெவ்வேறா யருத்தங்கொண்டு
ஞமலியைப் போலலையாதே சீடாநீகேள்
மானிலத்தில் பேராசை பிடித்தபேர்க்கு
மகத்தான அப்பட்ட வாதம்சொன்னேன்
ஆனதொரு பெண்ணாசை பிடித்தப்பேர்க்கு
அப்பனே மெய்யற்ற வசியஞ்சொன்னேன்
ஈனமுற்ற மோசகருத் துள்ளபேர்க்கு
இயல்பான ஜெகஜாலம் சொன்னேன்தானே. (6)

சொன்னேன்காண் சுத்தமன தற்றவர்க்கும்
சேர்ப்பளாங்கி மார்களுக்கும் சோம்பேறிக்கும்
இந்நிலத்தில் ஓரேமட்டாய் சமாதிசொன்னேன்
இன்புற்ற பெண்யோகம் அகடஞான்ம்
பின்னும்வகை யறியாத பண்டிதர்க்கும்
பேசினேன் சொர்க்கமாத்திரை வைதியபாகம்
தன்னிலையின் வகையறியா ஜோதிடர்க்கு
தளுக்காம் பொய்ஜோஷியமும் கூறினேனே. (7)

கூறினேன் வேதாந்த சித்தாந்தங்கள்
குணமில்லை யெனதள்ளி விகடாந்தத்தை
வாரியேயிறைத்திட்டேன் வையத்தோர்க்கு
வழிதவறிவழிநடக்க செய்துபோட்டேன்

மாரியேபோலவுமே பொழிந்துவிட்டேன்
மார்க்கமற்ற நூல்களையும் மானிடர்க்கு
ஆறுதான்இவ்வாறு பாடுபட்டா
அப்பனேநானொருவன் பட்டிட்டேனே. (

பட்டேனே பலகோடி உலகோருக்கு
பலமான யோகபோக ஞானந்தன்னை
இட்டேனே இதைப்போல நூலுமுண்டோ
என்மக்காள் பஞ்சாலை நூலிதற்கு
முட்டாகநிற்குமோ கலிகாலத்தில்
முடக்கிடுங்காண் என்னூலை மூறிநிற்கும்
எட்டாத பேர்களுக்கு இந்நூலப்பா
எட்டாது இதின்சார மறியார்தானே. (9

அறியாதமாந்தருக்கும் அறிந்தபேர்க்கும்
அறைகிறேன் யோகத்தின் மார்க்கந்தன்னை
நெரியாக இதனையுமே கேளாய்சேடா
நீனிலத்தில் முனிவர்சித்தர் யோகந்தன்னை
பிரிவாக எட்டென்று சொல்லிட்டார்கள்
பிரிந்திதிலே யெத்தனையோ கிளைகளுண்டு
தெரியாமல் சித்தர்களும் புகைசாப்பிட்டு
திருட்டுதனமாகவுமே யுரைத்திட்டாரே. (10

உரைத்திட்டயோகத்தை பழித்துவிட்டு
உத்தமராம் வாச்சாயுப முனிவர்தானும்
கரைத்திட்டார் கொக்கோக நூலிலேதான்
கணக்கற்ற சையோக மார்க்கந்தன்னை
நிறைத்திட்டார் முப்பத்திரண் டத்தியாயத்தில்
நிலையற்ற வாலிபர்கள் கெடவும்வேண்டி
இறைத்திட்டார் அதனையும்யான் சுருக்கிமெத்த
எளிதினிலே உலகோர்க்கு இயம்புவேனே. (11

இயம்புவேன் இந்நூலை வெளியிட்டோர்க்கு
எட்டுரெண்டு துண்டாகத் தலையும்போகும்
பயங்கொண்டு இந்நூலை பூசித்தோர்க்கு
பரத்தையரின் சையோகந் தோணும் தோணு

நயம்பெறவே தாய்தகப்பன் தேடிவைத்த
நலமான சொத்தையுமே எடுத்துக்கொண்டு
ஜெயம்பெறவே தனிபங்ளா தனிரூம்கொண்டு
சிந்தைதனை பலவிடத்தில் லடக்கிகில்லே. (12)

நில்லடா பணங்காட்டி நின்றுயானல்
நேசனே பாடகோல் சாமிவந்து
சொல்லடா எனைநினைத்த குறிப்பேதென்று
சுருக்கிலே கேட்குமது அதற்குநீயும்
விள்ளடா போகஞானந் தெரியவென்று
வெகுநாளா யாசைவைத்தேன் சாமியென்று
கள்ளடா ஒருகுடமும் பத்துபுட்டி
கணக்கற்ற சாருயம் கொண்டுவைத்தே. (13)

வைத்தபின்பு பணப்பபடையில் பெரிதாய்போட்டு
வாகான ஆட்டுக்கறிகோழிவாத்து
பத்தியுடன் தான்வறுத்து இலையில்வைத்து
பட்டஞ்சி கரைசோம னெடுத்துவைத்து
தத்துவாய் காமியிட தாளில்வீழ்ந்து
தயவாக தான்கேட்க அதுவும்யேற்று
உத்ததொருகாரியத்தை சொல்லிப்போகும்
உடனேநீ தாய்கிழவி பூசைபண்ணே. (14)

பண்ணடா தாய்கிழவி மாயாதேவி
பரத்தையர்க்கு ஆய்போன்ற அம்மாவாவா
புண்ணுடைய பெண்டுகளுக் கரசிவாவா
புகழாகவேசியரை ஆதரித்து
கண்ணுடைய கணவர்களை மயக்கச்செய்யும்
கங்காளி முண்டையே தந்திரியேவாவா
மண்ணுடைய மாந்தனும் யானுனையழைத்தேன்
மகராசி இதுசமயம் வருகுவாயே. (15)

வருகுவாய் உந்தனுக்கு புடவைதாரேன்
வடம்போலே பொன்னாலே முன்னாலுந்தான்
தருகிறேன் தாலியில்லா கழுத்தில்மாட்ட
தட்டுபோல் கம்மலொன்று செய்துதாரேன்

குறுகிடும்உன் வயதளவும் கறியும்சோறும்
குடுவைகள்ளு சாராயம் கொடுக்கிறேன்யான்
உருகிடும்என் உடல்வளர மனம்கோஷ்டிக்க
உற்றசை யோகபோகம் உரைசெய்வாயே. (16)

உரைசெய்வாயென்றுநீ பணிந்துநின்றால்
உடனேயுன் உள்ளமது சந்தோஷிக்க
நரைதிரைமூப் போடுதலை யாட்டிக்கொண்டு
நலமான அருமை மருமகனே என்று
குறைவான வாய்குளறல் வார்த்தையோடும்
குளுந்தநோக்கத்தோடும் மிருதுவோடும்
அறைவாளே ஆஸ்திபாஸ்தி தேகங்கூட
அழிந்திடவும் உன்கருத்தை தெளிவிப்பாளே. (17)

தெளிவிப்பாள் சையோகம் இன்னதென்றும்
திறம்பெறும் போகஞானம் இன்னதென்றும்
ஒளியாமல் உந்தனுக்கு எல்லாம் சொல்லி
உண்மையற்ற பரத்தைமகா தேவிபூசை
வெளியாகச் சொல்லிவிட்டு மறைவாளப்பா
வீணென்று எண்ணுமல் உறுதிகொண்டு
சுளியாத குணத்தோடும் சொத்தினோடும்
ஜோக்கோடும் சொகுசோடும் பூசைபண்ணே. (18)

பூசையின்றன் மூலமந்திரஞ் சொல்லக்கேளு
புகழாகவேசியே வசிவசி என்றும்
ஆசையுற்ற வாலிபரை நசித்துப்போடும்
அம்மணியே தேவியே வசிவசி யென்றும்
காசையே கடவுளென மதிக்கும்மோகக்
கன்னியரே பொன்மணியே வாவாவென்றும்
தேசமதில் கருமிசொத்து கறைந்துபோகத்
திருவுருவு கொண்டவளே வாவாவென்றே. (19)

என்றுமே ஒரேநிலையில் நின்றுவிட்டால்
என்மகனே என்னசொல்வேன் வீணையோசை
நின்றுமேகேட்பதுடன் நடனத்தோடும்
நேரிழைக்குத் தொண்டுசெய்யும் தோழியோடும்

மன்றுளே மாணிக்கச் சோதிபோலும்
மதிரவிபோலும் வேளின் கணையைப்போலும்
நன்றுடனே உனக்கு தரிசனமுங்காட்டி
நலமான பால்பழமும் தருகுவாளே. (20)

தருகுவாள் லட்டுபூந்தி மிட்டாயோடும்
தகமையுள்ள பால்கோவா ஜிலேப்பியோடும்
பெறுகுவாள் மருந்துற்ற காப்பியையும்
பிரியமுடனேயளித்து கிண்ணமாற்று
வுருகியதோர் மனத்தோடும் செய்துகாட்டி
உபசரணை மிகக்காட்டி அன்புங்காட்டி
சிறுநகையோடும் பல்லைத் திறந்துகாட்டி
செயல்காட்டி மயல்காட்டி நிற்பாள்தானே. (21)

நிற்பாளே சேலைகொஞ்சம் சரியக்காட்டி
நிமிஷத்துள் பலவேலை செய்துகாட்டி
விற்போன்ற பார்வைகளை சுழட்டிக்காட்டி
விம்மியதோர் கொங்கைகளை சிறிதுகாட்டி
கற்போன்ற மனங்கரைய இடையின்சேலை
கழன்றுவிழு மாறுபோல் கணக்குங்காட்டி
சற்போதம் உணைமறவே னென்றுசொல்லி
சால்காட்டி மால்காட்டி மயக்குவாளே. (22)

வாளென்ற கண்காட்டி வார்த்தை நீட்டி
வஞ்சியுமுன் பஞ்சபுலன் றன்மேல்பாய
வேளென்ற செயல்காட்டி விருதுகாட்டி
வெகுசீக்கிரத்திலுன்னை வலையில் மாட்டி
ஆளென்ற தாய்தகப்பன் பெண்டீர்சுற்றம்
அத்தனையும் தான்மறக்க வசியம்மூட்டி
பாழென்ற நரகத்தில் உன்னைப்பூட்டி
பாலனேஉன் சந்தேகம் அறச்செய்வாளே. (23)

அறச்செய்வாள் யோகபோக ஞானந்தன்னை
அம்சதூளியில் சயனம் செய்யும்போதும்
உறச்செய்யும் யோகமிது வென்றுசொல்வாள்
உற்றபோக மிதுவென்றும் திறந்துசொல்வாள்

புறைசொல்லால் என்னால்நீ மயங்கும்போ
புலருமடா வுந்தனுக்கு ஞானந்தோன்றும்
மறைசொல்லும் இதற்கு ஈடல்லவென்று
மைந்தனே சொல்லியுனை அனுப்புவாளே. (24)

அனுப்புகையில் உன்னுடைய ஆஸ்திபாஸ்தி
அத்தனையும் தனைபறித்து ஆண்டியாக்கி
வினைப்பயனால் தேகமெங்கும் ரோகமாக்கி
வேலைசூழ் புவியோர்கள் சிரிக்கஆக்கி
மனப்பதைப்பும் தான்ஒடுங்கி மறைந்துபோக
மறலியுமே நெருங்கிடவும் வேளையாக்கி
கனப்படுத்தம் யோகபோக ஞானங்காட்டி
கன்னிகைபெண் மூதேவி மறைவாள்தானே. (25)

தானப்பா யோகபோக ஞானந்தன்னை
தகமையுடன் அறியவுமே வழியும்சொன்னேன்
ஏனப்பா இப்புவியி லுள்ளமாந்தர்
இப்போகம் இஞ்ஞானம் பெறவும்வேண்டி
மானப்பா போலவுமே பறக்கின்றார்கள்
மைந்தனே அதையறிந்து இதையுஞ்சொன்னேன்
பேணப்பா எண்ணெயிலே மயங்குமாபோல்
பெரியோரும் பெண்ணென்றால் மயங்கின்றாரே. (26)

பெண்ணாலே மயங்காத பேர்களில்லை
பெண்ணாலே தியங்காத பேர்களில்லை
பெண்ணாலே யுயிர்விடா மாந்தரில்லை
பெண்ணாலே பொருளழிக்கா தோருமில்லை
பெண்ணாலே ஆக்கினையும் அடையாரில்லை
பெண்ணாலே அழியாத பேர்களில்லை
பெண்ணாலே எல்லாமே இருப்பதாலே
பேசினேன் இஞ்ஞானம் பேசினேனே. (27)

பேசினேன் பெண்களிலும் வேசியென்றால்
பேசரியா பிள்ளைமுதல் வயதுசென்று
தேசமதில் தடியூன்றும் கிழவனுக்கும்
தித்திப்பு நாவில்தட்டு மாதலாலும்

வாசமிகு சுந்தரிகள் வார்த்தைதானும்
வையகத்தில் மேன்மையா யிருப்பதாலும்
ஆசையுட னிந்நூலைச் சொல்லிவிட்டேன்
அறிவற்று நெறியற்றுப் பிடித்துக்கொள்ளே. (28)

கொள்ளவே தற்கால வேதாந்திமார்கள்
கூடாத ஜாதிமத பேதந்தன்னை
தெள்ளெனவே தான்விளக்கி தேசத்தோரை
தீராத பகைக்குள்ளா யாக்கிவிட்டு
உள்ளுக்குள் தான்மேலா எண்ணிக்கொள்ளும்
ஊதாரி நூல்களையும் விலக்கிவிட்டு
கள்ளாரம் முனிவர்சித்தர் ரிஷிகள்நூலைக்
கடத்தியே என்நூலை அறைந்திட்டேனே. (29)

அறைந்திட்டேன் முப்பதிலே சுருக்கத்தோடும்
அந்தரங்க விஷயங்கள் மிகவும்பூட்டி
மறைந்திட்ட யீனமுற்ற ஞானம்பூட்டி
மகிமைபெற்ற யோகபோகத் திறவுகோலை
நிறைந்திட்ட உன்போன்ற ஞானிகட்கு
நீட்டினேன் பிசகின்றி பிசகில்மாட்ட
வரைந்திட்டேன் இந்நூலைப் பிடித்தபேர்க்கு
வழியான வழியெல்லாம் வழியுமுற்றே. (30)

## விகட விவேக சிந்தாமணி.

கர்ப்பந்தான் மங்கையர்க்கு வயிறுவீங்கும்
கணபதிபோல் புறஞ்சூத்து தள்ளிவாங்கும்
ஒப்புடனே அடுப்புகரி சாம்பல்தின்பார்
ஓயாமல் புற்றுமண்ணை தெள்ளித்தின்பார்
எப்பொழுதாகிலும் புருஷன் கிட்டேநாடி
எகிறிமுத்தங் கொடுக்கவந்தால் வயிறிடிக்கும்
இப்படியாய் ரண்டொருபிள்ளையைப் பெற்றிட்டால்
இனியென்ன அவள்பேச்சு கருடகம்பம்.

கருதியநூல் கற்றவர்க்குப் பிழப்பைக்காணோம்
கணக்கறிந்த செட்டிகள் வர்த்தகமேபோச்சு
ஒரு தொழிலுமில்லார் நாடகக்காரானார்
ஒன்றுக்கு முதவாதார் பெருத்துப்போனார்
பெரியோர்க ளென்றவர்கள் தடியரானார்
பேச்சுகற்ற நாய்வேட்டைப் பிடிக்கலாச்சு
பரிவு சொல்லும்பசப்பி தலைமாட்டுக்கொள்ளி
பாவிகளால் பட்டணமே பாழாய்ப்போச்சே.

ஆவின கன்றுகுட்டி வாயைக்கட்டி
ஆனமட்டும் பாலைவிற்று துட்டுசேர்க்க
பீயான சாணிதனைப் பொறுக்கிச்சேர்த்து
பிரியமுடன் வரட்டிதட்டி விற்றுக்கொள்ள
சாவான கெதியிலந்த பசுமாட்டுக்கு
தண்ணிபுல்லு காட்டாமல் சாகவைக்க
கோவான துரைத்தனத்தார் பசுக்களுக்குக்
குறித்தவரிதனைச் செலுத்த குணமிதாமே.

கன்மனப் பார்ப்பான் மண்மன வணிகன்
காரிய மனமுளத் தமிழன்
வன்மன வடுகன் நன்மனத்தோட்டி
வார்ப்பு பித்தளை மனக்குறவன்
துன்மன அமட்டன் இரும்பு செம்புமனச்
சூத்திரன் துலுக்கனு மலுக்கன்
பொன்மனவேசி மார்களில் ஒன்றாய்ப்
பொருந்திவாழ் வதுவும் அற்புதமே.

மண்ணையொரு பிடிபிடித்து மந்திரம்பண்ணி
மகாதேவா எனவாயிற் போட்டுக்கொண்டு
கண்ணைகொடிக் கள்ளிச்சார் படியாலாட்டி
கறிமிளகா யெள்நெய்யிற் காய்ச்சித்தேய்த்து
திண்ணைக்கீழ் தூங்குகின்ற பண்ணையாளின்
திருவடியி லய்யாவே யென்றுவீழ்ந்தால்
எண்ணெயிட ஆகாவாரம் ஆனாலும்
எண்ணெயிட்டுக் கொள்வதிலே தோஷமின்றே.

# நாட்டான் புலம்பல்.

## விருத்தம்.

பொல்லாத லஞ்சத்தை வாங்கியே ருசிகண்ட
போலீஸ் புலிக்கழுவனே
புந்தியும் நைந்திட விந்தையாம் பரிவாங்கும்
புகல்முனிசிபல்க் கழுவனே
எல்லாத வேளையில் எமன்போல் முன்சீப்பு
எதிரிடுவதற் கழுவனே
என்றும் கணக்கன் தாசில்தார் கலெக்டருக்கு
எண்ணி எண்ணித் தொலைவனே
அல்லாமலும் இன்கம்டாசுக்கு அழுவனே
அடாவடித் தன்மையுந்தான்
அனைதையிடமே முடிக் கத்தனையும் காட்டிடும்
அதிகாரிக்கிட் டழுவனே
சொல்லொணு துன்பத்தை ஏழைகள் வருத்துமே
சோர்புற்று நிற்றல் நலமோ
சூரனே அகட ஒய்யாரனே எங்களிட
சோகத்தை நீக்கியருளே.

## பெரியபாளையம் துக்கடா.

ஆடுகோழி பன்றிகளைப் பலிகளிட்டு
அம்மனிட பேர்சொல்லி அவித்துத்தின்று
வீடுதிரும்பையில் வழியில் கண்ட கண்ட
வெறி தருகும் சாராயம் கள்ளையுண்டும்
நாடும் தட்டுவாணிகளைத் துணைப்பிடித்தும்
நலமாக சத்திரத்திலிறங்கி மீனை
கூடிய சீக்கிரத்தில் வாங்கி சமைத்துண்ணுர்க்கு
குவலயத்தில் இந்துபட்டம் தங்காதாமே.

## முண்டைச்சிகள் புலம்பல்.

எங்களுக்கு மறுமணந்தா னில்லாதாலே
இழவெடுத்த மன்மதன்செய் கோரத்தாலே

அங்கமெலாம் நொந்துமே அவஸ்தையுற்று
அச்சமயம் இன்னவரென் றறிந்திடாமல்
சங்கையின்றி சேரமனம் செல்லுதையோ
சண்டாள வைதீக கிழங்களுக்கு
துங்கவனே யிவ்வச்சுக் கூடத்தாரே நீர்
தூய்மையுடன் சொல்லியெங்கள் துயரைத் தீரே.

---

## துன்மார்க்க போதினி.

துர்க்குணத்தை விட்டவர்க்குத் துன்பமுண்டு
துரோகமதை செய்பவர்க்கு இன்பமுண்டு
நற்குணத்தைத் தொட்டவர்ச்கு நளிறுவுண்டு
ஞாயத்தைப் பேசுபவர் விரோதமாவார்
சொற்பலஞ்சம் வாங்குவோர்க் ச்ச் சுகமுமில்லை
சூதாடா மாந்தருக்குப் பணமுமில்லை
கற்றபடி இருப்பவர்க்குப் பெயருமில்லை
கண்டபடி திரிவதும் நீதிதானே.

சீட்டாடிச் சூதாடிப் பணத்தைத் தோற்று
சினங்கொண்டு அடிபிடியாம் சண்டையிட்டு
கோர்ட்டேறி வீட்டிலுள்ள பணத்தைக்கொட்டி
கொண்டமட்டும் வக்கீல்கள் லாயர்கட்கும்
நீட்டுசொக்காய் போடும்பா ரிஸ்டர்கட்கும்
நிதிகளையும் மலைபோலே குவித்துவிட்டு
கேட்டை விளைவிக்கும் தண்டனையடைந்து
கேப்பைகளி தின்பதுவும் நீதிதானே.

ஒருவனிட பொருள்பறிக்க ஆசைப்பட்டு
உளவுடனே யவனிடத்தில் நேசம்செய்தல்
பெருமையுடன் அவன்முன்பு நல்லோனாக
பிரியசினே கிதனைப்போல் லிருந்துகொண்டு
தருணமது தான்பார்த்துக் காலைத்தட்டி
தலைகூடவி ழளை தனை யுறிந்துகொண்டு

கருணையுடன் மெத்தைவீடு கட்டிக்கொண்டு
கணவானாய் வாழ்வதுவும் நீதிதானே. (3)

பெற்றதாயார் தனக்கு இரண்டுகுத்து
பிரியமுள்ள பிதாவுக்கு நான்குகுத்து
உற்றோர்க்கும் உறவார்க்கும் பத்துகுத்து
உடன்பிறந்தார்க்கு உயிர்போகக்குத்து
புத்திசொல்ல வருவோர்க்கு இடுப்பில்குத்து
புகழுடனே தான்கொடுத்து மூலைவீட்டில்
பத்திரமாகக் கிடத்தி நம்மிஷ்டம்போல
பாதுகாத்து வருவதுவும் நீதிதானே. (4)

அன்றுவூர் நாடறியத் தாலிதொட்டு
அழகியபெண் கழுத்தினிலே கயறுகட்டி
என்றுமுனை நான்மறவேன் எனவேசத்தியம்
இந்திராதி தேவர்முன்னால் செய்துவிட்டு
நின்றுதொண் ணூறுநாள் சுகமுங்கொண்டு
நிஷ்டூரப் பழிசாட்டித் துறத்திவிட்டு
நன்றியற்ற பரத்தையர்க்கு வால்பிடித்து
நலமுடனே வாழ்வதுவும் நீதிதானே. (5)

ஆதீன குடித்தனங்க ளழிந்திட்டாலும்
ஆஸ்தியணி பணியெல்லாந் தொலைந்திட்டாலும்
மேதினியில் ஆடுமாடு கழிந்திட்டாலும்
மிச்சமுள்ள நிலங்களெல்லாம் ஒழிந்திட்டாலும்
சோதிபோல் விளங்கும்பிடி தலையின்மீது
சொட்டெனவே விழுந்து லடாபுடா பண்ணாலும்
ஓதியபொல் லாதவஞ்சந் தனைபிடித்து
உலகதனில் வாழ்வதுவும் நீதிதானே. (6)

வஞ்சனையை மறப்பவர்க்கு சித்தியில்லை
வஞ்சனையை மரப்பவர்க்குத் தொல்லையில்லை
வஞ்சனையை வழிவழியாய் நடத்திக்கொண்டு
வழிவழியாய் வருபவர்க்குப் பாபமில்லை
வஞ்சனையை நினையார்க்கு கீர்த்தியில்லை
வஞ்சனையின் சுகானுபவம் அறிந்திடாமல்

வஞ்சனையைத் தூஷித்தோர்க் கருளுமில்லை
வாய்ந்தஇதைக் கடைபிடித்தல் நீதிதானே. (7)

பெரியோர்கள் சாஸ்திரத்தை நம்பொணாது
பேசரிய சாஸ்திரத்தைப் பார்த்துவாதி
தெரியாமல் பொன்னதனை தொலைத்துக் கெட்டான்
தெளியாமல் மாந்திரிகள் உலர்ந்துகெட்டான்
அறியாமல் வைதியனும் முழுதுங்கெட்டான்
ஆதலால் அறிஞர்நூலைக் கடத்திவிட்டு
நெரியான இந்நூலை முழுதும்நம்பி
நீணிலத்தில் வாழ்வதுவும் நீதிதானே. (8)

கற்றவர்கள் அனந்தம்பேர் கையில்ஓடு
காசினியில் ஏந்தினர் பிழைப்பில்லாமல்
சுத்தமுள்ள கைத்தொழிலைக் கற்றபேரும்
சொகுசான திண்ணைகளைப் பார்க்கலானர்
இத்தரையை குத்தி பயிரிடு மாந்தருக்கும்
எதிரிட்டாள் வரிதேவி கழுத்தறுக்க
எத்தொழிலும் வஞ்சகத்துக் கிணையாகாது
இச்செயலைக்கொண்டு வாழ்தல் நீதிதானே. (9)

மனமெரிய வயிரெரிய ஏழைசொத்தை
மாம்பழம்போ லறுத்தறுத்து வுண்ணுகின்ற
தனம்படைத்த கனவான்கள் நேசம்நன்று
தகல்பாஜி நேசர்களின் வார்த்தைநன்று
சினங்கொண்டு சிடுசிடுத்த வார்த்தைபேசும்
சீமானே ஏமானே வஞ்சகாநீ
கனமுடனே இந்நூலைக் கைபிடித்து
கருவரவே வாழ்வதுவும் நீதிதானே. (10)

---

## கலிக நீதி.

மதிகெட்ட மடையருக்கும் தடியருக்கும்
மார்க்கமற்ற நடையருக்கும் குடியருக்கும்
நிதிபடைத்தும் ஈயாத கருமிகட்கும்
நிஷ்டூர சண்டாளப் பாவிகட்கும்

சதியுடைய கலகநீதி சாரந்தன்னை
சாற்றுகிறேன் பலவாறய் சாகரத்தில்
அதிபதியாம் சென்னைமகா கலகநீதி
அடிமுடியும் தடியெமக்குக் காப்புதானே.

## நூல்.

அறையாப்பு கொருக்கு வெள்ளை வாங்கவேண்டும்
அழகியதேஜஸைக் கெடுத்துக் கொள்ளவேண்டும்
குறைவாக அளந்துமோசம் செய்யவேண்டும்
கொண்டமனை யாளையே விடவேவேண்டும
கிறைவான கர்ப்பத்தைக் கலைக்கவேண்டும்
நிலையில்லா காரியத்தை நிறுத்தவேண்டும்
தரைமீதில் அப்பவல்லோ மனிதனென்று
சாற்றுவார் போற்றுவார் தூற்றுவாரே. (1)

ஆடினல் சூதாட்டம் ஆடவேண்டும்
அராக்கபினி கெஞ்சாக்கள் குடிககவேண்டும்
பாடுபட்டுப் பணத்தையெல்லாம் புதைக்கவேண்டும்
பரத்தையர்க்கு வேணபொருள் கொடுக்கவேண்டும
ஈடுமருந் தீய்ந்துகுணங் கெடுக்கவேண்டும்
ஈயாத லோபியா யிருக்கவேண்டும்
நாடுகளில் அப்பவல்லோ மனிதனென்று
நகைப்பார்கள் சிரிப்பார்கள் இளிப்பார்தானே. (2)

இல்லாத விஷயத்தைச் சொல்லவேண்டும்
எடுக்கமாளா பளுவை தூக்கவேண்டும்
பொல்லாத வழியெல்லாம் போகவேண்டும்
புண்ணியத்தைப் பாவமாய் பார்க்கவேண்டும்
கல்லாமல் கல்லைப்போல் லிருக்கவேண்டும்
கற்றவரை யெப்பொழுதும் பழிக்கவேண்டும்
தொல்லுலகில் அப்பவல்லோ மனிதனென்று
சொல்வார்கள் நல்லார்கள் இல்லார்தானே. (3)

ஈன்ருக்கு;யிடங்கொடுத்துக் கெடவேவேண்டும்
இல்லிடத்தை பாழாக்கி விடவேவேண்டும்

ஆனதொரு காரியத்தை யழிக்கவேண்டும்
அடுத்தாரை கெடுக்கவழி பார்க்கவேண்டும்
தானதருமங்களையே மறக்கவேண்டும்
தன்பெண்டீர் வார்த்தைதனை கொள்ளல்வேண்டும்
மானிலத்தில் அப்பவல்லோ மனிதனென்று
மதிப்பார்கள் குதிப்பார்கள் உதைப்பார்தானே. (4)

உண்டவீட்டில் ரெண்டகமும் செய்யவேண்டும்
ஊருடமைக் காசைபட்டுத் திரியவேண்டும்
பெண்டிரண்டு மூன்றுநான்கு கொள்ளவேண்டும்
பேசுவதெல்லாம் பொய்யா யிருக்கவேண்டும்
சண்டையிட்டு சர்க்காரில் போகவேண்டும்
சார்ந்துமே மண்ஜெயிலுக் கேகவேண்டும்
மண்டலத்தில் அப்பவல்லோ மனிதரென்று
மதிப்பார்கள் மிதிப்பார்கள் துதிப்பார்தானே. (5)

ஊருக்குள் பொல்லானாய் இருக்கவேண்டும்
உதைகுத்து அடிபட்டு தேரவேண்டும்
பேருக்காய் வீண்வேட்டை யாடவேண்டும்
பெற்றதாய் தகப்பனையும் சாடவேண்டும்
தூருக்காய் ஆளாகி நிற்கவேண்டும்
துடுக்காக ஜீவவதை செய்யவேண்டும்
பாருக்குள் அப்பவல்லோ மனிதனென்று
பார்ப்பார்கள் சேர்ப்பார்கள் வேர்ப்பார்தானே. (6)

---

## ஒரு துக்கடா.

மலைபோலபெண்டாட்டி அருகிருக்க
மற்றொருதாரத்தையும் நாம் கொள்ளவேண்டி
நிலையற்ற காரியத்துள் பிரவேசிக்க
நீதிகளும் வெகுவாக மனையாள்செப்ப
கலைவுற்ற மனத்தால்நாம் சென்றதாலே
காதறுந்தும் ஆஸ்பத்திரிக் கேகலாச்சு
தலமீதில் என்போன்ற குணம்உள்ளார்க்கு
தலைமீது செருப்படியும் வீழுந்தானே.

## எழுசீர் விருத்தம்.

பரத்தையரைப் பணியாத ஜென்மம்பாவம்
பாராத கண்களுமே புண்களாகும்
இருத்திபல பொருளீயா கைகளுந்தான்
ஏதுமற்ற வொதியனுக்கு இணையேயாகும்
பொருத்தி அந்தவேஶைகளின் வீட்டுவாசல்
போகாத கால்களுமே தூணேயாகும்
திருத்தமுடன் தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (1)

சிறுவர்களைக் கிழவர்களை வாஞ்சையோடு
சீரோடு தானழைத்துக் கலவிசெய்தும்
பெரு வியாதிக்காரனுட னழகுள்ளானைப்
பேதமது பாராமற் றனணைந்தே
கருமமுற்ற ஜாதிமதம் பார்த்திடாமற்
கருதியே சராசரியாய் பலரைச் சேர்ந்தே
திருவுருவேர் தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (2)

சொ துசுடைய வேசைகளும் மிகவிருக்க
சொந்தமனையாள் கொள்வோன் சோதாவல்லோ
தகதகென நகைமுகங்கள் மினுக்கிக்கொண்டு
தர்ளவடம் கண்டசரம் அணிந்துக்கொண்டு
மிருவுடனே பட்டுரவிக்கையுமே போட்டு
பேசரிய தாவணியை மேலேபோட்டு
திகழுடன்வாழ் வேசையின்ற னடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (3)

பாரதனில் ஒருபோது வேசைவீட்டிற்
பட்சணமே செய்யாத தேகம்பாழு
சீருடனே அவர்கள்கையாற் றிலர்தம்கூட்டி
சிறப்போடு கொள்ளாத நெற்றிபாழு
நேருடைய அவர்களது வார்த்தைஏற்று
நீதியெனக் கொள்ளாத அறிவுபாழு

திரமுடன் தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (4)

வேசையவள் தருகின்ற லட்டுபூந்தி
விருப்பமுடன் கொண்டாக்கால் வினையேதீரும்
நேசமுடன் அவ்வீட்டு வேலைக்காரி
நெருங்கிக் கேட்டதையீவோன் பிரபுவாவான்
ஆசிகள்கூர் தாய்கிழவி அம்மாளுக்கு
ஆசைதீர வளிப்பவனே வள்ளலாவான்
தேசமதில் வேசையின்ற னடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (5)

போனவுடன் மரியாதைப் பேச்சுக்காட்டி
பொற்கலசக் கொங்கைகளைத் திறந்துகாட்டி
கானமுறும் வீணைகளின் சப்தங்காட்டி
காதினிற்கு இனிமைதரு கீதங்கூட்டி
ஆனமட்டும் பொருளதனைப் பறித்துக்கொண்டு
ஆண்டியைப்போல் வேடமது கொடுக்கும்நல்ல
தேனலருங் கூந்தல்வேசை யடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (6)

முண்டைகளைக் கொண்டவர்க்கு மோட்சமில்லை
மூதேவி மனைவியரைக் கண்டுகொண்டால்
மண்டலத்தில் வெகுபாடு படவேவேண்டுங்
மரியாதை வார்த்தைகளு மங்கேயில்லை
தொண்டுகளுஞ் செய்யாளே திட்டுமீந்தால்
தொழுகுவாள் இன்றிலோ அழுகுவாள்காண்
திண்டுடன்வாழ் தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (7)

பரமாதர் சுகந்தவிர வேறேயில்லை
படித்தசில ரிதைவிட்டே யறிவுகெட்டு
தரமான வேதாந்தம் மெய்யேயென்ற
தாரணியிற் றிரிந்தலைந்தா ரனந்தங்கோடி
மரமான கல்லான செம்பைக்கண்டு
மகத்தான தெய்வமென்றே தொழுதுகெட்டார்

த்றமான தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (8)

மோகமெனும் வலையதனிற் சிக்குதற்கும்
முத்தியெனும் வேசிகளைப் பிடிப்பதற்கும்
யோகமேன் ஞானமேன் வாசியேன்காண்
உற்றபல பொருளதனைக் கைப்பிடித்தே
பாகமுடன் தாய்கிழவி தனைப்பிடித்தால்
பரசித்தி யுண்டாக்கு மானமற்ற
தேகமுருந் தேவடியா ளடிவணங்கித்
திருவுற்று வாழுவதே நீதிதானே. (9)

---

## இரவிக்கைப்பொடியின் மருத்துவம்.

கேளடா ரவிக்கைபொடி விபரந்தன்னைக்
கிளர்த்துமிந்த பொடிதனக்கு வெகுபேருண்டு
தூளடாவெனு மண்டைமசாலை யென்றும்
துலங்கும்பொடியென்றும் சளிவுரிஞ்சா னென்றும்
கோளடா கொண்டபல பேர்புனைந்த
குணமுடைய பொடியின்றன் மருத்துவத்தை
பாளடா இணைந்ததாவணி சித்தன்றால்
பணிந்துமே பாடல்பத்து முரைக்கின்றேனே. (1)

உரைக்கிறேன் பொடியினுட பயித்தியம்மெத்த
வுண்டிதனை யறிந்தவர்கள் கோடாகோடி
கருத்துடனே அரையணு மூன்றுபைசா
கணக்காக யீய்ந்துநல்ல பொடியைவாங்கித்
திருத்தமுடன் தினகாலம் போட்டேவந்தால்
திரேகத்தில் மினுமினுப்பைக் கொடுப்பதோடு
விருத்திபெற்ற மூளைதனைக் குறைத்துக்கொண்டு
விவேகத்தை வெகுவாக விளக்குந்தானே. (2)

தானடாயுத்திகளும் மிகவேசாட்டும்
தந்திரங்கள் சுறுசுறுப்புங் கருதிக்காட்டும்

பேனடா விப்படியே மயங்கக்காட்டும்
பேசாதபேர்களையும் பேசச்செய்யும்
நானடா வென்று அகங் கொண்டோர்கண்ணில்
நண்ணியொரு சிட்டிக்கைப் பொடியேபோட்டால்
ஏனடா சாமியென்று உன்முன்வந்தே
இன்பமுடன் எதிர்கொண்டு வழைப்பார்தேடி. (3)

தேசுகொண்டு விளங்குகின்ற சிரசில்நீரு
தீர்க்கமுடன் கொண்டாக்கால் துரிதமாக
நாசிதனை யடைத்துமே பூட்டிவிட்டு
நலமாக வாய்வழியாய் மூச்சுசெல்லும்
பேசுகின்ற வார்த்தையெல்லாம் கொணகொணென்னும்
பீடித்த சிரசுக்கே நோயேயில்லை
நேசமுடன் பொடியதனை அக்கால்போட்டால்
நீங்கிடுமே ஜளிப்புதலை நோய்கள்தானே. (4)

நோயான பல்நோய்க்கு அவிழ்தமாக
நுணுக்கமுடன் புவிதனிலே விளங்குதப்பா
தாயாரு மிதைப்போலப் பணிக்கைசெய்யாள்
தகப்பனுமே யிவ்வாறே யுதவிசெய்யான்
ஓயாமலோதுகுரு மிதற்கீடல்ல
யுரைக்கின்ற வயித்தியனு மிதற்கீடல்ல
காயான காயகற்பம் போலவுந்தான்
காட்டினர் என்போன்ற சித்தர்தானே. (5)

சித்தான சிறுவருடன் பெரியோர்தாமே
சிந்தனையை யதன்மேலே வைத்தேநிற்பார்
செத்தாலுஞ் சிட்டிக்கைப் பொடியேயென்று
ஜீவனையே விடுவார்கள் சிலதுபேர்கள்
எத்தாலு மானயீன மெல்லாம்போக்கி
யெவர்களையும் பொடியென்றே பிச்சைகேட்பார்
பித்தானபித்தமது யிதுவேயாகும்
பேசுவேன் ரவிக்கைபொடி மகிமைதானே. (6)

மகிமையென்ன மாதர்களும் மார்மேற்பூணும்
மதிபோன்ற ரவிக்கைக்குள் மறைத்துவைக்கும்

தகுதியுள்ள பொடியதனை ஒருசிட்டிக்கைத்
தானென்ற வாலிபர்கள் போட்டுக்கொண்டால்
நகைமுகமும் வேசிகளே யபயமென்று
நாய்போலே யலைவார்கள் நாட்டிலுள்ளோர்
சுகமுடனே மன்மதனும் கூடச்சேர்வான்
சுணங்கனுமே சூரன்போற் காணுவானே. (7)

காணவே மாதர்களும் ஒருசிட்டிக்கைக்
கனமுடனே தந்தாக்கா லதுவேபோதும்
தோணுமே கயிலாயம் திருவைகுந்தந்
துலங்குகின்ற பிரம்மபதி சொற்கலோகம்
வீணல்லோ வென்றுமே யுதரிப்போடில்
விளங்குகின்ற வேசைலோகஞ் சித்தியாகும்
பூணணிந்த மாதர்களும் மண்ணைத்தந்தால்
பொன்னேன்றே கண்ணுக்கே விளங்கும்பாரே. (8)

பாரடா வெள்ளிடப்பி தங்கடப்பி
பான்மைபெரு மானையுட தந்தடப்பி
நேரடா வேசைகளின் கைகளாலே
நிலைக்கயொரு சிட்டிக்கை பொடியைவாங்கி
சீரடா நாசியிலே ஏற்றிக்கொண்டால்
சேய்பெண்டு தாய்தந்தை மறந்தேபோகும்
ஊரடா பதிபாக்ய மிழந்தேபோகும்
உருக்கமுள்ள வேசைதுணை யொன்றதாமே. (9)

ஆமடா கைகுட்டை பொடிக்காகத்தா
னவனிதனி லுண்டாச்சு யறிந்துகொள்ளு
காமமென்ற காய்ச்சலுக்கு யிதுவேசூட்சம்
கண்டறிந்த பேர்கட்கு யிதுவேமோட்சம்
க்ஷேமமென்ற க்ஷேமங்க ளடையலாகும்
சிங்காரத் திருநடனம் நமக்குத்தோணும்
பாமரர்க்கு இந்நூலே முக்கியமென்று
பாடினேன் ரவிக்கைபொடி மகிமைமுற்றே. (10)

---

கடவுள் துணை.

# அபிராமி சுந்தரியின் கதை.

## கணபதி ஸ்தோத்திரம்.

நல்லகணபதியே நான்காலமே தொழுதால்
அல்லல்வினையெல்லாம் அகிலுமே சொல்லரிய
தும்பிக்கையானை தொழுதால் வினைதீர்க்கும்
நம்பிக்கை யுண்டே நமக்கு.

## கதையின் வரலாறு வெண்பா.

அனந்தரா மையரெனு மந்தணன்தன் மனைவியுடன்
தினந் தினமு முஷ்டியிவர்தா னெடுத்து
மனக்களிப்பா யிருவரும் போவித்திருந்து வருநாளில்
சிறுவனிலா மனக்குறையால் சோர்ந்தார்.

## அதாவது.

இப் பரதகண்டத்தின் கண் மஹாமேருகிரிச் சாரலுக்குத்தென் பாரிஸமாயுள்ள தேசங்களில் நீர்வளம் நிலவளம்பொருந்தி மாடமாளிகை கூடகோபுர அலங்காரத்துடன் அமராபதியும் அளகாபுரியும் யிதர்க்கிணையில்லையென்று சொல்லும்படியாக மஹா வுன்னிதமாய் விளங்கிக்கொண் டிருந்த செண்பகாபுரியென்னும் பட்டணத்தில் வுத்தம பிரம்மகுலத்தில் உற்பவித்த அனந்தராமசாஸ்திரி யென்னும் பிராமணன் தன் மனைவியாகிய சொல்தவராத சத்தியவதி, அன்ன பூரணியம்மாளோடு வாழ்ந்துவருங்காலத்தில் யிவர்களுக்கு யாதொரு ஆஷ்காரமில்லாததினலே நாள்தோறும் முஷ்டியெடுத்து ஜீவனஞ் செய்து வருங்காலத்தில் தங்களுக்கு வெகுநாளாக புத்திரசந்தான மில்லாதமனக்குறையினல்வாடி நாள்தோறும் ஸ்ரீயும்புருஷனும் பக வத் விஷயமாய் பக்திபாராட்டி வருங்காலத்தில் ஈஸ்வர ரனுக்கிரகத் தினல் இவர்களுக்கொரு புத்திரனுற்பவித்தது. அக்குழந்தைக்கு

நீலகண்டசாஸ்திரி யென்று நாமம்தரித்து வளர்த்துவரும்போது குழந்தையின் பதினாறு வயதுக்குள் தாயும்தந்தையும் பரமபதமடைந்துவிட்டார்கள். நீலகண்ட சாஸ்திரியானவர் அவர்களுக்குச்செய்யவேண்டிய ருத்திரக்கிரியைகளை குறைவின்றி நடத்திவிட்டு தான் யாதொரு திக்கில்லாதவனாய் தங்கள் தாய்தந்தையர்கள் எவ்விதம் ஜீவித்து வந்தார்களோ அவ்விதமாகவே தானும் ஜீவனஞ்செய்து வருங்காலத்தில் ஓர் நாள் நீலகண்டசாஸ்திரி யென்னும் பிராமணப் பிள்ளையானவன் அநேக வீடுகள்தோறும் பிட்சமெடுத்துக்கொண்டு தன் கிரஹத்தை நாடிவரும்போது அப்பட்டணத்தின் கண்ணுள்ள வேதகிரிசாஸ்திரியென்னும் விருத்தப் பிராமணனைச்சந்தித்து நமஸ்கரித்து நின்றான். அப்படி நின்ற பிராமணப்பிள்ளையை விருத்தப் பிராமணர் பார்த்து மனதில் சந்தோஷங்கொண்டு அப்பா நீயார்? உன் வரலாறு யாதென்றுவிசாரித்தான். அப்போது பிராமணப் பிள்ளையானது தன்னுடைய விர்த்தாந்திரங்களை சவிஸ்தாரமாகச் சொன்னான். அதற்கு விருத்தப்பிராமணர் நீயும் யாதொரு ஆதரவற்றவன் நானும் ஆண்திக்கில்லாதவன், ஆனபடியால்யென்னுடைய வரலாற்றையுஞ் சொல்லுகின்றேன் கேள். நானும் யென்மனைவியுமாய்ச்சேர்ந்து யில்லறம் நடத்திவருங்காலத்தில் நெடுநாளாக யெங்களுக்கு சந்தானமில்லாதபடியினாலே அநேக விரதங்களை அனுஷ்டித்துவந்தோம் பகவத் சங்கற்பத்தினால் யெங்களுக்கு ஒரு பெண் பிறந்தது அதற்கு அபிராமிசுந்தரி யென்று நாமகரணஞ்சூட்டி செல்வமாய் வளர்த்து வருங்காலத்தில் குழந்தையின் மூன்றாவது வயதில் பெற்றதாயானவள் மரணமடைந்துவிட்டாள். அன்றுமுதல் இன்றைய வரைக்கும் வெகுபத்திரமாய் பாதுகார்த்து வந்தேன். இப்போது அக்குழந்தைக்கு பதினோராவது வயது நடக்கின்றது. அக்குழந்தையை, உனக்கு விவாகமுடித்துவைக்க சம்மதிக்கின்றேன், உன் கருத்துயாதென்று விருத்தப்பிராமணர் வினவ, நீலகண்ட சாஸ்திரி அக்கருத்துக்கிசைந்து அன்றுமுதல் இந்த விருத்தப் பிராமணர் கிரஹத்திலேயே யிருந்துவந்தான்.

அதன் பிறகு அந்த விருத்தப்பிராமணரானவர் நல்ல சுபமுகூர்த்தத்தில் தன் சாதியார் முன்னிலையில் அபிராமிசுந்தரியை நீலகண்ட சாஸ்திரிக்குக் கன்னிகாதானஞ்செய்து தன் கிரஹத்திலேயே யிருந்து வாழ்ந்து வரும்படி திட்டஞ்செய்து கொஞ்சகாலத்திற்செல்

லாம் விருத்தப்பிராமணரும் மரணமடைந்து விட்டார். நீலகண்ட சாஸ்திரி அவருக்குச் செய்யவேண்டிய ருத்திரக்கிரியைகளை குறை யின்றி நடத்திவிட்டு தானுந் தன்மனைவியும் யேகமனதா யிருந்து நெடுநாள் இல்லறம் நடத்திவரும்போது புத்திரசந்தான மில்லாத மனக்குறையினாலே ஓர் நாள் நீலகண்டசாஸ்திரி யென்பவர் தன் மனைவியாகிய அபிராமிசுந்தரியின் முகத்தைநோக்கி பெண்ணே நாம் நெடுநாள் இல்லறம் நடத்திவந்தும் நமக்கொரு குழந்தை உற்பத்தி யாகும்படி பகவான் கிருபைசெய்யவில்லையே ஹரி ஹரி நாம் பூர்வத் தில் யென்ன தவக்குறைகள் செய்திருந்தோமோ புத்திரனில்லாதார் க்கு சுவர்க்கமில்லையென்று சாஸ்திரமுறையிடுகின்றதே புத்திரனில் லாதவர் வீட்டில் தெரிந்தோர் சலபானம்முதலியதுஞ் செய்யார்களே அதற்கொரு திருஷ்டாந்திரஞ் சொல்லுகின்றேன் கேள்.

அதாவது, மிருகண்ட மகாரிஷியின் பத்தினியாகிய மருத்து வதியம்மாள் தன்னாசிரமத்தி லிருக்கும்போது தன்னை நாடி வந்த சப்தகன்னிகளுக்கு ரொம்பவும் வுபசாரஞ் செய்து சகலவித பதார்த்தத்தோடு அன்னம் பரிமாறி உண்ணும்படி உபசரித்தனள் அப்போது சப்தகன்னிகைகள் உனக்கு புத்திரருண்டாவென்று வின வினார்கள் அதற்கு ரிஷிபத்தினியானவள் யெனக்கு இதுவரையிலும் யாதொரு புத்திரரும் உற்பத்தியாகவில்லையென் றுரைத்தனள். அப் போது அக்கன்னிமார்கள் கையை உதரிவிட்டு புத்திரரில்லாதார் வீட்டில் அன்னம் பொசிப்பது மெத்தப் பாவமென்று போய்விட் டார்கள். ஆகையால் பெண்ணே புத்திரரில்லாதார் வீடு பெருஞ் சுடு காடென்று கற்றோர் சொல்லுகின்றார்கள். இப்போது நானொன்று சொல்லுகின்றேன் கேள் அதாவது நான் காசியாத்திரைச் சென்று கெங்கையில் ஸ்நானஞ்செய்து விஸ்வநாதரை தரிசித்து உனக்குந் தீர்த்தம் எடுத்துக்கொண்டு சில தினத்திற்குள் வந்து சேருகின்றேன் நான் கொண்டுவரும் தீர்த்தத்தை நீ உட்கொள்வாயாகில் உன்னு டைய கர்மபந்தங்கள் தீர்ந்து புத்திரனுண்டாவதற்கு சந்தேகமில்லை ஆனபடியால் நான்போய் திரும்பிவருமளவும் உன் கற்புக்கு யா தொரு பங்கமில்லாமலும் பதிபக்தியில் விஸ்வாசங் குன்றாமலும் அதிசாக்கிரதையாக இருந்து காலங் கழித்துவாவென்று திட்டஞ் செய்து மனைவியினிடத்தி லுத்திரவு பெற்றுக்கொண்டு தான் காசி யாத்திரைச் சென்றனன்.

இவர் மனைவியாகிய அபிராமிசுந்தரி யென்பவள் புருஷன் தன்னைவிட்டு பிரிந்துபோனதைப்பற்றி கிலேசமுற்று மறுபடியும் எப்போது காணக் கிடைக்குமோ வென்று பலபலவிதமாய் சிந்தித்து நாள்தோறும் காலமே யெழுந்திருந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு ஊருக்கருகாமையி லிருக்கின்ற கெங்கைக்குச்சென்று தீர்த்தமாடி தான் செய்யவேண்டிய அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தன் கிரஹத்தைச் சார்ந்து உண்டானதைப்பொசித்து விஸ்வநாதனை தியானித்து தன் புருஷனவர் சீக்கிரம்வந்து சேரும்படி பிரார்த்தனைசெய்து காலங்கழித்து வருநாளில் ஓர்நாள் அபிராமிசுந்தரி யென்பவள் மற்றப் பிராமணப் பெண்களோடு யெதாப்பிரகாரம் கெங்கைக்குச்சென்று தீர்த்தமாடி செய்யவேண்டிய கிரியைகளை முடித்துக் கொண்டு திரும்பி வரும்போது அப்பட்டணத்திற் கதிபதியாகிய ருதுபர்ண மகாராஜனென்பவன் வேட்டைமார்க்கம்போய் திரும்பி வருங்காலத்தில் அவ்வழியாக மற்ற மாதர்களின் மத்தியில் செல்கின்ற அபிராமி சுந்தரியை அரசன் கண்டு அவளிருக்கப்பட்ட ரூப சௌந்தரியத்திற்காக ஆச்சரியப்பட்டு அவள்பேரில் காதல் கொண்டவனாய் தன் வேவுகாரர்களை யழைத்து அதோ அந்தப் பெண்களின் மத்தியில் போகின்ற சௌந்தரியவதியை பல்லக்கின்பேரி லேற்றி நம்முடைய அரண்மனைக்குக் கொண்டுவாருங்களென்று ஆக்கியாபித்தான். அதைக் கேட்டவுடனே வேவுக்காரர்கள் பல்லக்கு சகிதம் மாதர்களின் மத்தியில் போகின்ற அபிராமி சுந்தரியை வழிமறித்து அரசன் ஆக்கியாபித்ததைத் தெரிவித்தார்கள், இதுகளைக்கண்ட மற்றமாதர்களெல்லாம் பயந்து மூலைக்குமூலை ஓடிவிட்டார்கள். அப்போது அபிராமி சுந்தரியென்பவள் திகைத்துப் பெருந்திகிலடைந்து ஆ! தெய்வமே யிது வென்ன அனியாயம் கிணறுவெட்டப் போய் பூதம் புறப்பட்ட கதையைப்போல் முடிந்ததே சிமையாளப்பட்ட ராஜாக்கள் அன்னீதத்திற்குட் படுவார்களா, அரசர்களுக்குப் பிரஜைகள் சமதையாச்சுதே அதிலும் நான் பிராமணசாதியாச்சுதே இந்த அரசன் என்னைத் தீண்டத்தகுமோ எனக்கு யாதொரு ஆதரிக்கில்லாமற் போயிற்றே உலகத்தில் பயிர்களை மற்ற மிருகஜாதிகள் பட்சிக்குமென்று வேலி போடுவதுண்டு அவ்வேலியே பயிர்களை பட்சிக்குமானால் பயிர்களை காப்பாற்றப்பட்டவர்கள் யார் இருக்கின்றார்கள். இப்படி ஆய்விட்டதே என்கெதி என்னசெய்வேன் தெய்வமே யென்று புலம்பும்போது வேவுகாரர்கள் நிர்தாட்சண்ணியமாய்

அதட்டி பல்லக்கின்பேரி லேறுகின்றாயா அல்லது பலவந்தமாய் தூக்கியேற்றவா வென்ன சொல்லுகின்றாய் யென்று கொரேமாய் உரைக்கவே அபிராமி சுந்தரியென்பவள் நடுநடுங்கி தன் விதியை நொந்து வருகிறதை விலக்கவும் வராததை வருவிக்கவும் யாவராலும் கூடாதென்று பெரியோர் வாக்கியத்தை யெண்ணி வந்ததை யனுபவிப்போமென்று தன் மனதை தேற்றிக்கொண்டு பல்லக்கின்பேரில் யேறி விட்டனள்.

உடனே வேவுகாரர்கள் அரசன் அரண்மனைக்குக் கொண்டுவந்திறக்கிவிட்டார்கள் அதைக்கண்டரசன் ஓடோடியும் வந்து அபிராமி சுந்தரியின் கையைப் பிடித்துக்கொண்டு பெண்ணே நீ யிருக்கப்பட்ட சௌந்தரியத்திற்கு அற்பமாகிய ஒரு பஞ்சைப் பிராமணனை யேன் கட்டிக்கொண்டழுகிறாய் நானே சீமையாள்கிற அரசன் யெனக்கு நீ மனைவியா யிருக்கும் பட்சத்தில் வுனக்குயாதொரு குறைவும் நேரிடாதென்று அவளைக் கட்டிமுத்தமிட்டுத் தன் பள்ளியறைக்கு அழைத்துக் கொண்டுபோய்ச் சேர்ந்தான். அப்போது அபிராமி சுந்தரியென்பவள் "யித்தப்பெரியவன் கையைப் பிடித்தால் எத்தைச்சொல்லி தப்புவதென்ற" பழமொழிப் படி அன்றுமுதல் அரசனுக்கு மனைவியா யிருந்து வாழ்ந்து வருங் காலத்தில் சில தினங்களுக்குப் பின்பு அபிராமிசுந்தரி கற்பவதியாகி பத்துமாதமுஞ்சென்று நல்ல சுபமுகூர்த்தத்தில் ஓர் ஆண்குழந்தையைப் பெற்றனள். அரசன் அக்குழந்தைக்குச் சந்திரப்பிரகாசனென்று நாமகரணஞ் சூட்டி மிகு செல்வமாய் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவந்தான்.

இது யிப்படியிருக்க முன் காசியாத்திரைசென்ற இவளுடைய புருஷனாகிய நீலகண்ட சாஸ்திரியென்பவர் அனேகநாள் வழிநடந்து காசியைச்சேர்ந்து கெங்கையில் ஸ்நானஞ்செய்து விஸ்வநாதரை தரிசித்து சிலநாள் அங்கிருந்து மனவியைப்பார்க்க அபிலாசை கொண்டவனாய் கெங்கைதீர்த்த மெடுத்துக்கொண்டு அநேக வனாந்திரங்களைக்கடந்து தன் பட்டணஞ்சேர்ந்து காசிக்காவடி சகிதம் இராஜ வீதியில் வரும்போது இவருடைய மனைவியாகிய அபிராமி சுந்தரியென்பவள் தைலஸ்நானஞ்செய்து மேலுப்பரிகையின்பேரில் மயிராத்திக்கொண்டு நின்றவள் தன் புருஷன் காவடிசகிதம் வருவதைக் கண்டு தன்மனதுக்குள் பிரலாபித்து ஐயோதெய்வமே இவர் கி[illegible]ஹ

ந்திற்சென்று நாளில்லாதிருப்பதை யறிந்து யென்சங்கதி தெரிந்து யென்னென்ன விதமாய் துக்கப்படுவாரோ இதற்கென்ன செய்வே னென்று தன் வயிற்றைப் பிசைந்துக்கொண்டு உடனே உப்பரிக்கையை விட்டுகீழே யிரங்கி தனக்குப் பணிவிடைசெய்கின்ற தாதிகளில் ஒருத்தியைக் கூவி அடிதாதி இராஜவீதியில் காசியிலிருந்து காவடிசகிதம் ஒரு பிராமணர் வருகின்றார். அவரை நானழைத்ததாகச்சொல்லி சீக்கிரமிட்டுக்கொண்டு வாவென்றாக்கியாபித்தாள்.

அந்த வாக்கியத்தை சிரமேற்கொண்ட தாதியானவள் ஒடோடியும் வந்து ஐயரைக்கண்டு தெண்டனிட்டு ஒ சுவாமி! யெங்க ளரசி தங்களை தரிசிக்கும் பொருட்டு அழைத்து வரும்படிச் சொன்னாள். சீக்கிரம் வாரும் போவோமென்றனள். அவ்வாக்கியத்தைக்கேட்ட நீலகண்டசாஸ்திரியார் மெத்த சந்தோஷமடைந்து காரிய வசந்தானென்று கருதி தாதியின்கூடச்சென்று அரண்மனைச் சேர்ந்தான். அப்போது இவருடைய மனைவியாகியஅபிராமிசுந்தரி அநேக ஆடையாபரணங்கள் ஜொலிக்க குழந்தையைக் கையிலேந்திக்கொண்டு ஐயருக்கெதிரில் வந்து நின்று நமஸ்காரஞ்செய்தனள். அதையறிந்த நீலகண்டசாஸ்திரியார் தன் மனைவியா யிருக்கக்கண்டு பிரம்மித்து ஐயோ பெண்ணே யிதுவென்ன அனியாயமென்று துக்கசாகரத்தில் மூழ்கி தலை குனிந்து நிற்கின்ற தன்னுதனுக்கு நடந்த வர்த்தமானங்களெல்லாமாதியோடந்தமாய்ச் சொல்லி யென்கெதியிப்படியாய் விட்டதென்று கண்ணீர்ததும்பத் துக்கித்து இன்னமுந் தங்கள் சித்தம் போல் நடந்துக்கொள்ளுகின்றேன். தங்கள் கருத்தைவெளியிட வேண்டுமென்று வேண்டிக்கொண்டனள்.

அப்போது நீலகண்டசாஸ்திரியார் பெண்ணே நீயோ சீமையாளுகின்ற அரசனுடைய வசமாய்விட்டாய், நானோ ரொம்பயேழையாயும் உன்பேரில் மிக்க ஆவல்கொண்டவனாயு மிருக்கின்றேன் யென்னை நீ விரும்புவையோவென்று ஜலம்பெறுகி நின்றனன். அக்குறிப்பை அபிராமிசுந்தரி யுணர்ந்து அநேக நவரத்தினாதிகளைக் கொண்டுவந்து அவருடைய காவடிப்பெட்டியில் நிறப்பி சுவாமி தாங்களின்னமும் என்னை விரும்புவீர்களானால் யான் கூடவருவதற்கு யாதொரு தடையுமில்லை இதைசத்தியமாக நம்பக்கடவீரென்று சொன்னமனைவியின் மனவுறுதியைத்தெரிந்து பெண்ணே நீயென் கூடவந்து விடுவாயாகில் யெங்கேயாவது மறுதேசங்களில் போய்

பிழைத்துக் கொள்ளலாமென்று சொன்னவுடனே அபிராமிசுந்தரி கேட்டு அப்படியே ஆகுமென்று சம்மதித்து சுவாமி தாங்கள்போய் போசனக்கிரியைகளை நிறைவேற்றிக்கொண்டு ஊருக்கு வடபாரிசமாயிருக்கின்ற ஆரண்ணியத்தில் ஒரு ஆலாவிருட்ச மிருக்கின்றது அவ்விருட்சத்தின் கீழ் வந்திருங்கள் நான் இன்றிரவு பனிரெண்டு மணிக்குள்ளாக தங்களிடம் வந்து சேருகின்றேனென்று புருஷனுக்கு திட்டஞ்செய்து அனுப்பிவைத்தனள்.

நீலகண்டசாஸ்திரியார் தன்மனைவி சொன்னபடியே போஜனாதிகளை முடித்துக்கொண்டு ஆரண்ணியத்தில் நிற்கின்ற ஆலாவிருட்சத்தையடைந்து நடந்துவந்த யிளைப்பினாலே மரத்தோடே சாய்ந்து நின்றுக்கொண்டு மனைவியின் வரவை எதிர்ப்பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது அபிராமிசுந்தரி என்னசெய்தனள் என்றால்,

## வெண்பா.

பாலனைத் தூங்கவைத்துப் பார்மன்னன் தலைதுணித்து
சீலமுள்ள வந்தணனைத் தேடிவந்தாள் ஆலமரத்
ததிலிருந்தசர்ப்பமது வந்தணனைத் தீண்டிடவே
பதியிழந்து விண்ணடைந்தான் பார்.

பொழுது அஸ்தமித்தவுடனே அரசனுக்குச் செய்யவேண்டிய பனிவிடைகளை யெல்லாங் குறைவரச்செய்து அரசனோடுகூட மஞ்சத்தில் சயனித்திருந்து இராத்திரி பனிரெண்டுமணி யளவில் எழுந்து அரசன் அயர்ந்து நித்திரைசெய்வதை தன் குழந்தையை யெடுத்து முத்தமிட்டு வயிறுநிறம்பப் பாலைக்கொடுத்து வூஞ்சலில் தூங்கவைத்து தனக்குள் யோசிக்கின்றனள் அரசனை உயிருடனேவிட்டுப் போவோமானால் ஏழையாகிய நம்புருஷனோடு சேர்ந்து வாழ லபிக்காது ஏனென்றால் நாம் எங்கே சென்றபோதிலும் அரசன் நம்மை யெப்படியாகிலும் கண்டுபிடித்து கொள்ளுவானெனக்கருதி உடனே மந்திரவாளையுருவி அரசனுடைய சிரசைத் துணித்துவிட்டு நூலேணிவழியாய் யிறங்கித் தன் புருஷனைநாடி வந்தனள். அதற்குள்ளாக அந்தணன் சாய்ந்து நிற்கின்ற ஆலமரப்பொந்தி லிருந்த நாகசர்ப்பமானது அந்தணன் சிரசில் தீண்டிடவே விஷச்சுவாலையினால் மண்ணுலகைவிட்டு விண்ணுலகை யடைந்தான்.

இவ்வர்த்தமானத்தை யறியாத அபிராமிசுந்தரி ஓடோடியும் வந்து தன் புருஷன் நிற்பதைக்கண்டு ஓ நாதா சீக்கிரம் வாரும் எங்கேயாகிலும் செல்லுவோமென்று கூறினள் அதற்கு அந்தணன் மரம்போல் நிற்பதைக்கண்டு ஆச்சரியப்பட்டு நடந்துவந்த இளைப்பினாலே நின்ற நிலையில்தானே தூங்குகிறார்போ லிருக்கிறதெனக் கருதி சமீபத்தில் வந்து கையைப்பிடித்திழுத்தனள். பிரேதமான அந்தணன் மரம்போலே கீழே விழுந்துவிட்டான். அதைப்பார்த்த அபிராமி சுந்தரியென்பவள் ஆ! தெய்வமே யிதுவென்ன அனியாயமென்று அசைத்தும் புறட்டியும் உறக்க கூப்பிட்டும் பார்த்தாள். அந்தணன் ஒன்றும் பேசாதிருப்பதை யுணர்ந்து சரீரமுழுதுந் தடவிப் பார்க்கும்போது தலையிலிருந்த காயத்தைக்கண்டு இவர் சர்ப்பத்துக் கிரையாய் இறந்துவிட்டாரெனக் கருதி ஆ! விதியே யென்கெதி இப்படியாய்விட்டதே என்று பெருமூச்செறிந்து அரசனைவிட்டு புருஷனைநம்பி அரசனும் புருஷனும் ஆற்றோடேபோன கதையாய்விட்டதே யினியானெங்கே செல்லுவேன் யாரைத் தஞ்சமென்று நம்புவேன் ஐயோ பிராணநாதா நான் ஜாதிக்குலைந்து பிரஷ்ட்டையடைந்து அரசனுக்கு ஓர் ஆண்குழந்தை பெற்றிருந்ததைத் தெரிந்தும் என்பேரிலிருந்த பெருங்காதலினாலே என்னை மறுபடியும் அங்கீகரித்தீரே இப்பேர்ப்பட்ட தயாளகுணத்தையும் உம்முடைய திருமேனியையும் இனியான் எந்தஜென்மத்தில் காணப்போகின்றேன் என்று பலபலவிதமாய்ப் பிரலாபித்து வாயிலும் வயற்றிலும் அறைந்துகொண்டு ஐயோ பொழுது விடிந்தவுடனே அரசனுடைய யேவலாளிகள் நம்மைக் கண்டு பிடித்துக்கொள்வார்களே யென்று திகிலடைந்து தனக்கெதிரில் ஒரு மூங்கில் புதரானது பற்றி எரிவதைக்கண்டு தன் புருஷனாகிய பிரேதத்தை இழுத்துக்கொண்டுபோய் அவ்வக்கினியில் தள்ளி தன் மாங்கல்யத்தை அறுத்து புருஷன்கூடவே அக்கினியில் எரிந்துவிட்டு அந்தனிசிவேளையில் யாதொரு திக்கற்றவளாய் நின்று சொல்லுவாள்.

## விருத்தம்.

ஐயனே பிராணநாதா அரவத்துக் கிரையானீரே
செய்புவாறறிகிலேனே தீவினைக் கென்னசெய்வேன்
கையதைபிசைந்துமங்கை கன்னத்தில் மோதிக்கொண்டு
ஐயய்யோ வென்றுசொல்லி அழுதுக்கொண் டடவிபுக்காள்.

ஐயோவென் பிராணநாதா பிரம்மதேவனுமக்கும் நமக்கும் இப்பேர்ப்பட்ட துர்விதி யமைத்திருப்பரென்று நான் சொற்பனத்திலேயுங் கருதிலேனே இனி யானென்ன செய்வேன் எங்கே செல்லுவேனென்று தன் கையைப் பிசைந்து முகத்திலறைந்துக்கொண்டு ஐய்யைய்யோ வென்று அழுதுக் கொண்டே அவ்வாரண்ணியத்தில் மனம்வந்தபடியே சென்றனள். அங்கு வாசம்பண்ணப்பட்ட துஷ்ட மிருகசாதிகளெல்லாம் அவளுடைய அழுகுரலேயே கேட்டுக்கொண்டு நின்றதுகள் பேய் பிசாசுகளெல்லாம் அவளுடைய சௌந்தரியத்தையே நோக்கிக்கொண்டு நின்றதுகள்.

இதுகளையெல்லாம் அபிராமி சுந்தரியென்பவள் யாதொன்றுங் கவனிக்காமல் அன்றிரவெல்லாம் காட்டில் வழிதெரியாமல் கண்கண்டவிடங்கள் தோறுந் திரிந்து பொழுது விடிந்தவுடனே ஒரு பெரிய ஆரண்ணியத்தில் புகுந்து அங்கு விஸ்தாரமாய்ப்பரவி நிற்கின்ற ஒரு ஆலாவிருட்சத்தைக் கண்டு நடந்துவந்த இளைப்பினால் கைகால்கள் சோர்ந்து அம்மரத்தினிழலில் உட்கார்ந்து தன் குழந்தையை தனியாய்விட்டுவந்ததையும் தன்னைக் காப்பாற்றிவந்த அரசன் தலையை துணித்ததையும் தன்னுடையபுருஷன் சர்ப்பத்தினால் மரணமடைந்ததையும் தனக்கு வந்து நேரிட்ட பெருந்துன்பத்தையும் யெண்ணி யெண்ணி பலகால் விசாரமுற்று கண்களில் சலம் தாரைதாரையாய்ப் பெருக பெருந் துக்கசாகரத்தில்மூழ்கி இருந்தனள். அப்போது அம் மரத்தின்பேரில் நெடுநாளாக வாசம்பண்ணிக் கொண்டிருந்த திமக்கின்னியென்னும் மோகினிப்பேயானது மரத்தின்கீழ் உட்கார்ந்திருந்த அபிராமிசுந்தரியைப்பார்த்து ஆஹா! நமக்கு நல்லஆகாரம்நாமிருக்குமிடந்தேடி வந்திருக்கின்றதென் றெண்ணி மனதில் சந்தோஷங்கொண்டு இவளைக்கொன்று தின்றுவிடுவோமென்றெண்ணி அம்மரத்தி லிருந்தபடியே பிரம்மாண்டகோர ரூபத்துடன் தொப்பென்று கீழேகுதித்து நிற்கின்ற மோகினிப்பேயை அபிராமி சுந்தரியானவள் பார்த்து பெருந்திகிலடைந்து ஐயோ தெய்வமே என்னசெய்வேனென்று ஓவென் றலறி அழத்தொடங்கினாள்.

அப்போது திமுக்கின்னியென்னும் பேயானது அவளிருக்கின்ற சௌந்தரியத்தைப் பார்த்து ஆச்சரியப்பட்டு அவள் படுகின்ற மனோதுக்கத்திற்காக மனதிரங்கி அவள் சமீபத்தில்வந் துட்கார்ந்து பயப்படாதே உனக்கு இவ்வளவு மனோதுக்கம் வரவேண்டியதற்

குக் காரணம் யாது சொல்லென்று கேட்ட திமுக்குதின்னியிடம் தனக்கு நேரிட்ட காரணங்களையெல்லாம் சவித்தாரமாகச் சொல்லி அழுதனள். அதைக்கேட்ட பேயானது பெண்ணே விதியைவெல்ல ஒருவராலும் முடியாது அவரவர்செய்த கர்மங்களை அவரவரே அனுபவித்துத் தீரவேண்டும். அதற்குத் திருஷ்டாந்திரமாய் பெரியோர் களால் உறைக்கப்பட்ட வாக்கியங்களை நீ கேட்டிருப்பதில்லையா சொல்லுகின்றேன் கேள்,

குறள்.

"இனைப்பகை உய்யினும் உய்வர் ஆனால்
வினைப்பகை வீயாது பின்சென்றிடும்."

இதை நீ கவனித்துப்பார் நம் இனத்தாருக்குள் நமக்கு எவ்வளவுபகை வந்து நேரிட்டிருந்தபோதிலும் நாம் அவர்களை விட்டுப் பிரிந்து எங்கேயாகிலும் போய்விடுவோமானல் அந்தப் பகையானது நம்மை என்னசெய்யக் கூடும், ஆனல் வினையின் பகையோ நாம் சப்தசாகரத்திற் கப்பால் ஓடிப்போய் ஒளித்துக்கொண்டபோதிலும் நம்மைவிட் டகலமாட்டாது நாமே யனுபவித்துத் தீரவேண்டும். நீயோ பெரிய பெண்ணும் புத்திநுட்பங்கள் தெரிந்தவளாயு மிருக்கின்றாய் உனக்கு நேரிட்ட துன்பங்களை பெரிதாக பாவித்து என்னேரமும் துக்கசாகரத்தில் மூழ்கிக்கொண்டிருக்கிறாய் ஏழு வயதுடைய மரகதவல்லி யென்னும் இராஜகுமாரத்திக்கு நேரிட்ட துன்பத்தைவிடவா உன்னுடைய துன்பமென்று பேயானது சொல்ல அதைக்கேட்ட அபிராமிசுந்தரி கேட்டு அம்மா மோகினித்தாயே அப்பெண்ணுக்கு என்னதுன்பம் நேரிட்டது அதை எப்படி சகித்திருந்தது அதை ஆதியோடந்தமாய் விபரங்களையெல்லாம் சவிஸ்தாரமாய்சொல்லி அருளவேண்டுமென்று ரொம்பவும் வந்தனம்புரிந்து கேட்டுக்கொண்ட அபிராமிசுந்தரியைப்பார்த்து மோகினிப்பேயானது சொல்லத்தொடங்கிற்று. அதாவது விந்தியாபர்வதத்திற் அடுத்திருக்கப்பட்ட தேசங்களிலொன்றாகிய சிந்துதேசமென்று ஒரு பட்டணமுண்டு. அப்பட்டணத்தை பரிபாலனஞ் செய்துவந்த சுகுணமகாராஜனென்பவன் தன்னுயிர்போல் மன்னுயிரைப் பாதுகாத்து குடிகளிடத்தில் ஆரிலொரு கடமைகொண்டு மிகவும் சத்தியமாய் அரசுபுரிந்து வருங்காலத்தில் நெடுநாளாக புத்திரபாக்கியமில்லாத மனக்குறையினல் விசனமடைந்து இராச்சியத்தை மந்திரிவசமு

ஒப்பிவித்து தன்னைப்போல அரசுபுரிந்து வரும்படி திட்டஞ் செய்து விட்டு தான் மரவுரிதரித்து காட்டில்சென்று கந்தமூலாதிகளைப் பொஸித்துப் பரமசிவத்தைக் குறித்து அகோரமாகிய தவத்தைச் செய்தனன்.

இப்படி நெடுநாள் தவமிழைத்து வரும்போது இவர் தவத்திற்கிறங்கி பரமசிவனானவர் அரசனுக்குமுன் பிரசன்னமாய்த் தோன்றினர். அப்போது அரசனானவன் பரமசிவமென்றுணர்ந்து அவரைப் போற்றிப்புகழ்ந்து அநேகவிதமாய்த் துதித்துக் கொண்டாடி ரொம்பவும் பயபக்தி விஸ்வாசத்துடனே நிற்கின்ற அரசனை பசுபதி பகவான் பார்த்து அப்பா அரசனே யென்னைக்குறித்து நீ செய்யப்பட்ட அகோரமான தவத்திற்காக அதிக சந்தோஷத்தை யடைந்தோம் உனக்கு தேவையான வரத்தைக் கேள் தருகிறோமென்று ஈஸ்பரன் வரங் கூரியதை அரசன்கேட்டு சுவாமி தங்களுடைய கிருபா நோக்கத்தினால் எல்லாசம்பத்துகளும் நிறைந்திருக்கின்றது புத்திரசம்பத்தொன்றில்லாத மனக்குறையினால் தங்களை வருந்துகின்றேனென்று அரசன் கூறியவைகளை பகவான் கேட்டு அப்பா அரசனே நீ பூர்வத்தில் செய்துக்கொண்ட கர்மபந்தங்களினால் உனக்கு இந்த சென்மத்தில் புத்திரரே உண்டாகமாட்டார்கள். ஆனாலும் என்னைக் குறித்து தவமிழைத்ததினாலே ரொம்பவும் ரூபசௌந்தரியத்துடன் ஒரு பெண்குழந்தை உற்பத்தியாகும். நீ உன் பட்டணம்போய்ச் சேர்ந்து எப்போதும்போல ராஜ்ஜிய பரிபாலனஞ்செய்து வருங்காலத்தில் இராஜனுடைய பத்தினியானவள் கற்பவதியாகி பத்துமாதமுஞ் சென்று நல்ல சுபமுகூர்த்தத்தில் ஒரு பெண்குழந்தையைப் பெற்றனள். அரசன் மெத்தவும் சந்தோஷத்தை யடைந்து குழந்தைக்கு டீாகதவல்லியென்று நாமஞ்சரித்து மிகவும் செல்வமாய் வளர்த்துவந்தான். குழந்தையின் ஐந்தாவது வயதில் வித்தியாப்பியாசஞ் செய்துவைத்தனன் இப்படி இருக்கும்போது சர்வக்கியானியென்னும் ஒரு சாஸ்திரியார் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணம் அறுபத்திநான்கு கலைக்கியானம் மனோவிக்கியானம் முதலியவற்றில் தேர்ந்தவராயும் அதிலும் ஜோதிட சாஸ்திரத்தில் முழுதுங் கரைக்கண்டவராயும் தேசதேசங்களிலுள்ள அரசர்களுக்கும் மற்றவர்களுக்கும் சாஸ்திரஞ் சொல்லி ரொம்பவும் பிரக்கியாதி பெற்றவராயும் அங்கங்கு அநேகம் பரிசுகள் பெற்றுக்கொண்டு முடிவில் இந்த சுகுணமகாராஜன் தேசமாகிய சிந்துதேசம் வந்து சேர்ந்தார்.

இந்த சாஸ்திரியார் வந்த சமாச்சாரத்தை சுகுணமகாராஜன் கேள்விப்பட்டு அவரை மிகவும் மரியாதையுடன் வரவழைத்து உபசார வார்த்தைகளாடி அவரை உட்காரவைத்து தன்னுடைய குமாரத்தியாகிய மரகதவல்லியின் ஜாதகக்குறிப்பை எடுத்துவந்து சாஸ்திரியினிடங்கொடுத்து சுவாமி சாஸ்திரியாரே இந்த ஜாதகத்தினுடைய பலாபலன்களை இன்னவிதமென்று நிட்சயமாய்ச் சொல்லி அருள வேண்டுமென்று அரசன் வேண்டிக்கொண்டனன். அப்போது சாஸ்திரியார் ரொம்பவும் ஆராய்ந்துபார்த்து அந்தப்பெண்ணுக்குடைய பலாபலனைத் தெரிந்துகொண்டு அதை வெளியிடுவதற்கு அச்சப்பட்டுக்கொண்டிருந்தார். அக்குறிப்பை அரசன் அறிந்து சுவாமி தாங்கள் யாதொன்றுக்கும் பயப்படாமல் உள்ளபடி சொல்லவேண்டுமென்று கேட்ட அரசன்முகத்தை நோக்கி சாஸ்திரியார் யின்னவிதமென்றுசொல்ல என் னாவானது தடமாகின்றதே நான் எவ்விதம் வெளியிடுவேனென்று வருத்தம் பட்டுக்கொண்டிருக்கிற சாஸ்திரியாரை மறுபடியும் அரசன் வணங்கி அஞ்சாமல் உரைத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்ட அரசனுக்கு சாஸ்திரியார் உள்ளபடி பலனைச்சொல்லத் தொடங்கினர்.

## விருத்தம்.

ஈராருவருடம் பிரேதத்தைக் காக்குமிக் குழந்தை
ஓராருவடந் தாதிக்குள் தாதியாய் ஒடுங்கிப் பின்பு
பாராளுமன்னன் பட்டத்தரசியாய் யிப்பார்தனிலே
சீராயிருந்து செல்வர்களீன்று ஜெயம்பெருமே.

ஓ அரசனே இக்குழந்தைக்கு இப்பொழுது ஏழாவது வயது நடக்கிறது இன்னும் ஏழுதினத்திற்குள்ளாக ஒரு பிணத்தைப் பனிரெண்டுவருஷங் காக்கும்படி நேரிடும் அதுதீர்ந்தால் தனக்குப் பணிவிடை செய்யும்படியான தாசிக்குங் கீழ்தாசியாக ஆறுவருஷகாலம் ஊழியஞ் செய்யும்படி நேரிடும் இந்த வருஷம் பதினெட்டுந் தீர்ந்தால் இந்தப் பார்முழுதும் ஆளப்பட்ட அரசனுக்குப் பட்டத்தரசியாகி செல்வர்களைப்பெற்று சந்தோஷமாய யிருப்பாளென்று சாஸ்திரியானவர் மொழிந்ததை அரசன்கேட்டுக் கடுங்கோபமடைந்து உடனே சாஸ்திரியைப்பிடித்து சிறைச்சாலையி லடைக்கும்படி உத்திரவுசெய்து நீர் சொல்லியபடி இன்னம் ஏழுதினத்திற்குள்ளாக வர்து சம்பவிக்காமல் போகுமானல் உன்னைச் சிரச்சேதஞ் செய்துவிடுவே

னென்று உறுதிகூறி தனக்குள் ஆலோசித்ததாவது நாம் நாட்டில் பெண்ணை வைத்துக்கொண்டிருப்போமானால் எத்தனையோ மனிசர்கள் சாகின்றார்கள் ஒருவேளை ஜோசியர் சொன்னபடி வந்து முடிந்தாலும் முடியும் நாம் காட்டிலிருப்போமானால் இப்படியேன் வந்து சம்பவிக்கப் போகின்றது பார்ப்போமென்று மனதில் உறுதிகொண்டு இராஜ்ஜியத்தை மந்திரிவசத்தில் ஒப்பிவித்து ஜாக்கிறதையாய் இருக்கும்படி திட்டஞ்செய்து ஏழுதினத்திற் காகவேண்டிய பண்டு பலகாரங்களைக் கட்டிக்கொண்டு தன்மகளை அழைத்துக்கொண்டு ஒருபெரிய ஆரண்ணியத்தை வந்து சேர்ந்தான். கேட்டாயோ பிராமணப் பெண்ணேயென்று மோகினிபேய்ச் சொல்லிக்கொண்டு வரும்போது அபிராமிசுந்தரி கேட்டு மேல்நடக்கும் வர்த்தமானங்களையுஞ் சொல்லவேண்டுமென்று வணங்கிக் கேட்டுக் கொண்டனள். பின்னமுஞ் சொல்லுகின்றேன் கவனமாய்க் கேளென்று சொல்லத் தொடங்கிற்று.

பிற்பாடு அரசனும் தன் குமாரத்தியும் ஒரு விருக்ஷத்தின் கீழ் உட்கார்ந்து இந்த ஆரண்ணியத்தில் எந்தப்பிணம் வந்து சம்பவிக்கப்போகின்றது, ஜோஸியர் சொன்னவயிதாவில் நான்கு தினங்கழிந்துபோய்விட்டது. இன்னும் மூன்றுதினந்தானே ஈஸ்வர சங்கற்பத்தினால் தொலைத்துவிடலாமென்று திடங்கொண்டிருக்கும் போது பெண்ணானவள் ஐயா யெனக்கு பசிக்குதென்று முறையிட தான் கொண்டுவந்த பலகாரமூட்டையை யவிழ்த்துவைத்து உண்ணும்படி தந்தையானவர் சொல்லவே உடனே மரகதவல்லியானவள் தனக்குத் தேவையான பலகாரத்தை யெடுத்தனள். இவள் கைவைத்த மாத்திரத்திலே அந்தப் பலகாரங்களெல்லாம் புழுவாகி யோடுகின்றதை அரசன்கண்டு பிரம்மித்து ஐயோ யிதுவென்ன ஆச்சரியம் குழந்தையானது கைவைத்த மாத்திரத்திலே பலகாரங்களெல்லாம் புழுவாய்விட்டதே யென்று அரசன் மனோதுக்கத்துடன் இருக்கும் போது வேறு ஆகாரமில்லாததினாலே குழந்தையானது பசியினாலே சோர்ந்து விழுந்துவிட்டது. இவைகளைக்கண்ட அரசனானவன் சகிக்காதவனாய் அந்தக்காட்டிலுள்ள சில கனிவர்க்கங்களைக் கொண்டுவந்து கொடுத்தான். பெண்ணானவள் எந்தப் பழத்தைத் தொட்ட போதிலும் புழுவாக வோடுதைப் பார்த்து ஐயோயிதுவென்ன அனியாயம் நான் அருமையாய்த் தவஞ்செய்துப் பெற்ற பெண்ணுக்கு

இப்பேர்ப்பட்ட கர்மபந்தம் வந்தலபித்திருக்கின்றதே என்ன செய்வேன் ஈஸ்வரனே இன்றோடு ஆறுதினங்கழிந்துவிட்டதே நாளைக்கு ஏழாவது தினம் எப்படிகழியுமோவென்று உள்ளுக்குரொம்பவும் விசனமடைந்து அந்தவிசனத்தை அப்பெண்ணுக்குக் காட்டாமல் தன் கையிலிருந்த இரண்டொரு கனிகளை அறுத்து அந்தப்பெண்ணுக்குத் தன்கையினாலூட்டி அன்றிரவெல்லாம் அரசனுக்கு நித்திரை கொள்ளாமல் வெகு விசனத்தை யடைந்து மறுநாள் காலையில் யெழுந்திருந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு இன்றுபகல் முப்பது மெப்படித்துலையுமோவென்று இறவெல்லாம் விழித்திருந்ததினாலே அரசனானவன் அந்தப்பெண்ணைத் தன் பக்கத்தில் படுத்துக்கொள்ளும்படிச் சொல்லித்தானும் கொஞ்சம் தலையைச்சாய்த்தான். "விதியைவெல்ல ஒருவராலுமுடியாதென்ற" பழமொழிப்படி அரசன் கொஞ்சம் அயர்ந்து நித்திரைபோய்விட்டான்.

அப்போது சமீபத்தில் படுத்திருந்த பெண்ணானவள் எழுந்திருந்து அரசன் நித்திரைசெய்வதை யுணர்ந்து விளையாட்டுத்தனமாக அந்தக்காட்டில் அநேக புஷ்பச்செடிகள் புஷ்பித்திருப்பதைக் கண்டு பெண் குழந்தையானபடியால் தந்தை நித்திரைசெய்யட்டும் நாம் போய்ச் சில புஷ்பங்களை பறித்து விளையாடலாமென்று கருதி ஓடோடியுஞ்சென்று நல்ல நல்ல புஷ்பங்களைக்கொய்துக்கொண்டே கொஞ்சதூரம் போகையில் தனக்கெதிரில் ஓர் பிரம்மாண்டமாகிய மாளிகையொன்று தென்பட்டது. அடடா நாமிந்த காட்டில்வந்து ஏழுதினமாகின்றதே இதுவரையிலும் இந்த மாளிகைதென்படவில்லையே இந்த மாளிகைக்குள் என்னவதிசயமிருக்கின்றதோ பார்ப்போமென்று கருதி அந்தமாளிகைக்கு சமீபத்தில் போய்நின்றனள். அந்த மாளிகையானது கடினமான இரும்புக் கதவினாலே மூடப்பட்டு இரட்டைத்தாப்பாளால் பூட்டப்பட்டிருந்ததைப் பார்த்து அந்தக் கதவின்பேரில் கைவைத்தவுடனே ஓர்பெரிய சத்தத்துடன் திடீரென்று கதவானது திறக்கப்பட்டு உள்ளேயிருந்து ஒருமனிதனால் இழுக்கப்பட்ட பாவனைப்போல் இராஜகுமாரத்தியாகிய மரகதவல்லியை உள்ளே இழுக்கப்பட்டவுடனே மறுபடியும் கதவானது படீரென்று மூடிக்கொண்டது. இந்தத்தொனியைக் கேட்ட அரசன் விழித்துக்கொண்டு தன் குமாரத்தி அருகிலில்லாதிருப்பதைக் கண்டு ஐயோ குமாரத்தி எங்குசென்றனளோ வென்று அந்தத்தொனி

யெழும்பின திசையை நாடி ஓடிவந்து பார்க்குமளவில் அந்தமாளிகைக்குள் தன் குமாரத்தியானவள் ஓவென்றலரி யழுகின்ற சூரலோசையைக்கேட்டு அரசன் அடியற்ற மரம்போலே கீழே வீழ்ந்து மூர்ச்சையடைந்தான்.

கேட்டாயோ பிராமணப்பெண்ணே யென்று மோகினிப்பேயானது சொல்லிவரும்போது அபிராமிசுந்தரிகேட்டு ஐயோ இப்பேர்ப்பட்ட ஆச்சரியகரமான கதையை நாமிதுவரையிலுங் கேட்டிருப்பதில்லையே குழந்தையாகிய மரகதவல்லிக்கு இப்பேர்ப்பட்ட துக்கம் நேரிட்டதற்காக அபிராமிசுந்தரி விம்மி விம்மியழுது அம்மாமோகினித்தாயே இந்தக் கதையைக் கேட்டமாத்திரத்திலே என்மனோ துக்கமெல்லாம் எங்கையோ பறந்துபோய்விட்டது. பின்னும் குழந்தையாகிய மரகதவல்லிக்கு யென்ன சம்பவித்ததோ அதுகளையுஞ் சொல்லியருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனள்.

கேளும் பெண்ணே அரசனானவன் வெகுநேரம் வரையிலும் மூர்ச்சையடைந்து பின்பு தனக்குத்தானே தேரி குழந்தை யழுகின்ற சத்தத்தைக்கேட்டு ஐயய்யோவென்று தன் மார்பில்மோதிக் கொண்டு அநேகம் கற்களையெடுத்துவந்து பூட்டையுடைத்துத் திறக்க பலவிதமுயற்சிசெய்தும் முடியாமல் என்னசெய்யலாமென்று அரசனானவன் கண்கலங்கி தைரியத்தையிழந்து அம்மா மரகதவல்லியென்று தன்மகளைக் கூவி யழைத்தவுடனே மரகதவல்லியானவள் தந்தையின் தொனியைக்கேட்டு என்னை அருமையாய் வளர்த்த தந்தையே என்கெதி யிப்படியாய்விட்டது நானென்னசெய்வேனென்று பிரலாபித்துச் சொல்லுகின்றனள்.

விருத்தம்.

என்னமாயிருப்பேனிந்த யிருண்டமாளிகைக்குள்ளாக-ஜோசி
சொன்னசொற்படியேவந்து சூழ்ந்துதோவினைகள் தானும்
அன்னைகேட் டழுகுவாளே அருமையாய் வளர்த்ததாயை
இன்னுமெப் போதுகாண்பேன் யென்றுமே யழுகலானாள்.

ஆ! என் தந்தையே "எழுதாக்குறைகளுக்கு அழுதால்தீருமோ" பிரம்மதேவனானவன் இந்தவயதில் நான் இப்பேர்ப்பட்ட துன்பங்களை அனுபவிக்கும்படியாய் எழுதியிருப்பாரென்று யாரறிவார்கள் என் வினைப்பயனை யானே அனுபவித்துத் தீலக்கவேண்டும் அல்லா

மல் மற்றவர்களாலே முடியுமோ இதற்காக தாங்கள் பேதமைப் பெ
ண்களைப்போல புலம்பலாமோ சகல தருமங்களுந் தெரிந்த தாங்கள்
தைரியத்தை முன்னிட்டு பட்டணஞ்சேர்ந்து என் தாயாரிடத்தில்
எனக்குவாய்த்த நிற்கெதியை தெரியப்படுத்தி தங்களுடைய இராஜ்
ஜியபாரத்தை ஒப்புக்கொண்டு தாங்கள் சுகமா யிருப்பீர்களானால்
என்னைப்போல இன்னும் எத்தனையோபிள்ளைகளைப் பெற்றுக்கொண்
டுவாழலாம் தாங்கள் அழுகின்றதைக் கேட்டு என்வயிறானது பற்றி
யெறிகின்றது ஆகையினாலே சகலமுமறிந்த தங்களுக்கு சிறியாள்
என்ன போதிக்கப் போகின்றேன் என்று குழந்தையானவள் கூற
அதைக்கேட்ட அரசனானவன் கொஞ்சந்தெளிந்து அம்மாகுழந்தாய்
இந்தமாளிகைக்குள் என்னதான் அதிசயமிருக்கின்றது அதைப்பார்
த்துவந்து சொல்லென்று கேட்டான். உடனே மரகதவல்லியான
வள் அந்த அரண்மனைமுழுதுஞ் சுற்றிப்பார்த்து வரும்பொழுது
அநேக நவரத்தினங்கள் குவிழ்ந்திருப்பதையும் அரிசிமுதல் சகல சா
மக்கிரிகைகள் நிறைந்திருப்பதையும் ஓரிடத்தில் பலபல விதமாகிய
புஷ்பச்செடிகளும் நிறைந்து அதற்கு மத்தியில் உன்னதமான ஒரு
தெப்பக்குள மிருப்பதையும் பார்த்துக்கொண்டே வரும்போது ஓரி
டத்தில் ஒரு சிங்கார மஹாலிருக்கக்கண்டு இதிலென்ன யிருக்கின்ற
தோ பார்ப்போமென்று அந்த மஹாலுக்குள் பிரவேசித்தாள். அங்
குவோர் சம்பிரஸமஞ்சக் கட்டிலின்பேரில் மகாரூப சௌந்தரியத்
தோடு பிரகாசிக்கின்ற ஓர் திவ்வியபுருஷன் சரீராத்தியந்தமும் கிஞ்
சித்தும் இடமில்லாமல் ஊசிகள் முளைத்திருப்பதையும் தலைமாட்டில்
ஒருவாடாவிளக்கு எரிந்துகொண்டிருப்பதையும் அவ்விளக்கின் சமீ
பத்தில் ஒரு ராமாயண புஸ்தகம்வைத்திருப்பதையும் பார்த்து பய
ந்து அந்ததிவ்விய புருஷனுக்கு உயிரில்லாமல் பிரேதமாயிருப்பதை
யும் வேறுமனிதர் சஞ்சாரமில்லா திருப்பதையும்பார்த்து திகிலடை
ந்து ஓடோடியும்வந்து தன் தந்தைக்கு எல்லாவிபரங்களையுந் தெரிய
ச்சொல்லினள். அரசனானவன் கேட்டு ஐயோ சாஸ்திரிசொன்னபடி
முடிந்துவிட்டதே ஆ! குழந்தாய் உன்விதியும் மிப்படியிருந்ததே
இதற்கு நானென்ன செய்வேனென்று அவ்வரசனானவன் அடை
ந்த துக்கத்தை நானின்னவிதமென்று எப்படிச்சொல்லுவேன் இப்
படியாக அரசனானவன் பலவிதமாய் புலம்பி ஆ! இது கெட்டது
இனி நமக்கு இராஜ்ஜியமும் வேண்டாம் சுகமும் வேண்டாம் எங்
கேயாகிலுஞ்சென்று தன் பிராணனை யிழந்துவிடலாமென்று கருதி

தன் பட்டணஞ்சேர்ந்து சிரச்சாலையிலிருந்த ஜோசியரை வரவழைத்து நீர்சொன்ன சாஸ்திரமானது நிஜமென்று அவருக்குக் கொடுக்கவேண்டியவைகளை குறைவரக் கொடுத்தனுப்பிவிட்டு முன்போல மந்திரியையே இராஜ்ஜியபாரஞ் செய்யும்படி கட்டளையிட்டு தன் குமாரத்தியின் சோகத்தினாலே மரவுரிதரித்து பரதேசியைப்போல வேடம்பூண்டு புறப்படுவதை பட்டத்தரசியானவள் கேள்விப்பட்டு தன் குமாரத்திக்கு நேரிட்ட கிற்கெதியைப்பற்றி ஓவென்றலரி யழுதுக்கொண்டுதானும் மரவுரிதரித்து அரசனோடுகூடப் புறப்பட்டாள். இவர்களிருவரும் கண்கண்ட காடுமேடெல்லாம பித்தங்கொண்டவர்களைப்போல் அலைந்து திரிந்துக்கொண்டிருந்தார்கள். கேட்டாயோ அபிராமி சுந்தரியென்னும் பிராமணப்பெண்ணே, இவர்கள் விர்த்தாந்திரம் இப்படியிருக்க மாளிகையில் தனியேயிருக்கின்ற மரகதவல்லியென்னுஞ் சிறு பெண்ணினுடைய சமாச்சாரத்தைச் சொல்லுகின்றேன் கேள்.

அதாவது மரகதவல்லி யென்பவள் நாள்தோறும் காலையிலெழுந்து தெப்பக்குளத்தில் தீர்த்தமாடி பிரேதத்தின் தலைமாட்டில் வைத்திருக்கின்ற ராமாயணத்தைப் படிக்கத்தொடங்கி கொஞ்சநேரம் வாசித்து பிற்பாடு பிரேதத்தின்பேரில் முளைத்திருக்கின்ற ஊசிகளைத் தலையிலிருந்து ஒவ்வொன்றாக சற்றுநேரம் பிடுங்கிவிட்டு பிற்பாடுபோய் தனக்கு ஆகவேண்டிய ஆகாரம் முதலியவற்றை முடித்துக்கொண்டு பிரேதத்தின் தலைமாட்டில்வந்து சயனித்துக்கொண்டு நம்முடைய விசனத்தினாலே தாயும் தந்தையும் என்னகெதி யடைந்தனரோ தெரியாதே என்று பலபலவிதமாய் விசாரமுற்று அசோகவனத்திலிருந்த சீதாதேவியானவள் என்னேரமும் ராமாராமாவென்று துதித்துக்கொண்டு இருந்ததைப்போல்தானும் இடைவிடாமல் ராமமூர்த்தியையே தியானஞ் செய்துக்கொண்டு காலங்கழித்துவந்தாள் இப்படியாக நாள்தோறும் ஸ்நானம் பண்ணுகிறதும் வந்து இராமாயணம் வாசிக்கிறதும் பிறகு பிரேதத்தின்பேரிலிருக்கப்பட்ட ஊசிகளை ஒவ்வொன்றாக பிடுங்குகிறதுமாக காலங்கழித்துவரும்போதுஜோசியர் சொன்னபடியே 12-வருஷங்களுக்கு பதினோர் வருஷங்களை கழித்துவிட்டனள். இப்படியிருக்கும்போது ஓர்நாள் மரகதவல்லியென்பவள் உப்பரிகையின்பேரிலேறி சாளரத்தின்வழியாக பார்க்கும்போது ஓரிடத்தில் குருவிபிடிக்கின்ற லம்பாடி

ஜாதிகள் இவளிருக்கப்பட்ட அரண்மனைக்கு சமீபமாய் இறங்கியிரு ப்பதைப் பார்த்து அவர்களை கூவிக்கழைத்து தனக்கு யாதொரு பெண்டிக்கில்லாததினாலே அவர்களைப்பார்த்து எனக்கு பணிவிடைக்காக ஒரு பெண்ணை கொடுப்பீர்களாகில் உங்களுக்கு போதுமான திரவிய மளிக்கிறேனென்று சொல்லவே அவர்களுக்குள் தாயுந்தந்தையுமில்லாத அனாதியற்ற ஓர் பெண்ணிருந்தனள் அந்தப்பெண்ணை தருகிறதாக ஒப்புக்கொண்டார்கள் அதன்பேரில் மரகதவல்லியென்பவள் சொன்னபடியே அவர்களுக்கு போதுமான திரவியமளித்துவிட்டு நாலேணிவழியாய் அப் பெண்ணை ஏறிவரும்படி திட்டஞ்செய்து தனக்கு பணிவிடைக்காக வைத்துக்கொண்டு அவளுக்கு வித்தியாப்பியாசஞ் செய்துவருநாளில் சாஸ்திரியார் சொன்ன வ்ருஷம் பன்னிரண்டுந் தீர்ந்து நாளையதினம் முடிவாக இருக்கக்கண்டு அப்போது அப்பிரேதத்தின் பாதத்தில்மட்டும் கொஞ்சம் ஊசிகளிருந்தது. இராமாயணம் முடிந்தது கொஞ்சம் பாக்கியிருந்தது.

மறுநாள் உதயத்தில் மரகதவல்லியானவள் எழுந்திருந்து தன் தாதியை யழைத்து பிரேதத்தின் சமீபத்தி லுட்காரவைத்து அடி தாதி நான் ஸ்நானஞ்செய்து வருமளவும் ஜாக்கிரதையாய் பார்த்துக்கொள்ளென்று திட்டஞ்செய்து ஸ்நானத்துக்கு போகும்போது தாதியானவள் ஓடோடியும் வந்து மரகதவல்லியின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து அம்மாதாங்கள் ஸ்நானத்திற்குதானே போகின்றீர்கள் தாங்களணிந்திருக்கின்ற ஆபரணாதிகளின் பேரிலும் தாம் உடுத்துக்கொண் டிருக்கின்ற ஆடையின்பேரிலும் யான் கொஞ்ச நேரமணிந்து பார்க்க அதிக ஆசையுள்ளவளாயிருக்கின்றேன் ஆகையினால் தாங்கள் ஸ்நானஞ்செய்து வருமளவும் நானணிந்துக்கொண்டிருந்து பின்பு தாம் வந்தவுடனே கழற்றிகொடுத்து விடுகின்றேன் தாங்கள் தயவுசெய்து கொடுத்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனள். அப்போது மரகதவல்லியென்பவள் ஐயோ! ரொம்பவும் ஏழையானபடியினாலே எவ்வளவு ஆசையிருக்குமோ கொஞ்ச நேரமணிந்துக் கொள்ளட்டுமென்று தன்னுடையாபரணாதிகளை கழற்றி அவளுக்கு யணிவித்து அவள் உடுத்தியிருந்த சேலையை தான் உடுத்திக்கொண்டு ஸ்நானஞ்செய்ய போயினள். அப்போது லம்பாடியென்னும் தாதியானவள் பிரேதத்தின் தலைமாட்டி லிருந்த இராமாயணத்தை யெடுத்து பாக்கியாயிருந்த மீதியைபடித்து முடிவாக்கி

விட்டு பிறகு பிரேதத்தின் இரண்டுபாதங்களிலு மிருந்த சொற்ப ஊசிகளை பிடுங்கினவுடனேபிரேதமாயிருந்த இராஜகுமாரன் அப்பா நான் எவ்வளவு நேரந்தூங்கிவிட்டேனென்று எழுந்து வுட்கார்ந்து ராஜபூஷிணங்களினால் அலங்கிருதமாய் சமீபத்தி லுட்கார்ந்திருந்த லம்பாடியை நோக்கி அவள்பேரில் காதல்கொண்டு அவள் சௌந்தரியமில்லாதிருந்தபோதிலும் இவளாலல்லவோ நான் உயிர்பெற்று எழுந்தோமென்றுகருதி அவளிடத்தில் கொஞ்சிக்குலாவி சந்தோஷசாகரத்தில் மூழ்கியிருக்கும்போது முன் ஸ்நானத்துக்குபோன மரகதவல்லியானவள் ஸ்நானமுடிந்தவுடனே சிங்கார மஹாலேநாடி வந்ததை லம்பாடியென்னுந் தாதியானவள் பார்த்து அடிதாதி அரசனுக்கும் எனக்கு சகல பதார்த்தத்தோடு சிக்கிரமன்னந் தயார்செய்யாவிட்டால் உன்னை சுண்ணும்புகாளவாயில் வைத்துவிடுவேனென்று அதட்டிச்சொன்னவுடனே மரகதவல்லியானவள் கேட்டு ஆ தெய்வமே! மோசம் போனேனேயென்று தன்விதியை நொந்து சாஸ்திரியார் சொன்னபடி தாதிக்குங் கீழ்த்தாதியாய்விட்டேனே இனியென்னசெய்வேனென்று மடப்பள்ளியை யடைந்து சகலவித பதார்த்ததோடு அன்னஞ்சமைத்து அம்மா இராஜாத்தி சகலமும் தயாராயிருக்கின்றதென்று மறைவாயிருந்து உரைத்தனள். அப்போது லம்பாடியாகிய தாதியானவள் தன்னுடன் அரசரை அழைத்துக் கொண்டுபோய் அன்னம்படைத்து உண்பித்து தானுமுண்டு அடி தாதி இவ்வெச்சில்களை யெல்லாம் எடுத்துவிடு என்று கட்டளையிட்டு தானும் அரசனும் சிங்காரமஹாலே யடைந்து சந்தோஷங்கொண்டாடிக்கொண்டு யிருந்தார்கள். கேட்டாயோ அபிராமிசுந்தரி யென்னும் பிராமணப்பெண்ணே இந்த மரகதவல்லிக்கு சம்பவித்த துன்பத்தை விடவா உனக்குநேரிட்ட துன்பமென்று மோகினிப்பேயானது சொல்லிக்கொண்டு வரும்போது அபிராமிசுந்தரி யென்பவள் ஆ தெய்வமே! ஓர் குழந்தைக்கு இவ்வளவு துன்பம்வந்து நேரிட்டதே என்னபாவம் எப்படி சகித்திருந்தனளோவென்று துக்கப்பட்டு மோகினிப்பேயைப் பார்த்து அம்மா மேல் நடந்த வர்த்தமானங்களைச் சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்க பின்னுஞ் சொல்லதொடங்கிற்று.

கேளுமம்மா இப்படியாக ஒருநா ளிரண்டுநாளல்ல ஆறுவருஷகாலமாய் அம்மரகதவல்லியானவள் தாதிக்குங் கீழ்தாதியாய் ஊழியஞ்செய்துக்கொண்டு வந்தனள்.

இது இப்படியிருக்க அரசனானவன் லம்பாடியென்னும் தாதியினுடைய கருத்தரூபத்தையும் துர்நாற்றத்தையும் அசங்கியமான நடைத்தையையும் பேசுங் குறலோசையானது கரடிகத்துகின்ற பாவனையாகவும் கொஞ்சமேனும் நாகரீகமில்லாததையும் பார்த்து அருவெறுப்புற்று பேசச்சிரிக்க மனமில்லாதவனாய் அவளை வெறுத்து இவள் இராஜகுமாரத்தியாய் பிறந்திருக்க மாட்டாளென்றுக் கருதி மேலும் அவள் குறட்டைவிட்டு முறட்டுத்தனமாய் சூர்ப்பனகைக்கொப்பாய் தூங்குகின்றதை அறிந்து அவளை விட்டுநீங்கி தன் பூங்காவனத்துக்குள் சென்று ஓர் விருக்ஷத்தின்கீழ் உட்கார்ந்து பலபலவிதமாய் யோசித்துக் கலவறப்பட்டுக்கொண் டிருந்தான். அவ்வேளையில் மரகதவல்லியானவள் ஐயோ பொழுது விடிந்துவிட்டதே சமயல்செய்ய வேண்டுமே நேரமாய்விட்டால் எஜமானியாகிய லம்பாடிதாதி நம்மைச் சிறச்சேதஞ் செய்துவிடுவாளே யென்று நினைத்து அரசன் உட்கார்ந்திருப்பதை யறியாதவளாய் ஓடோடியும் வந்து பூங்காவனத்திலிருந்த தடாகத்தில் அவசரமாய் ஸ்நானஞ்செய்து தான் உடுத்தியிருக்கின்ற கறுந்துணியை துவைத்தனள் அச்சப்தத்தைக் கேட்டு விருக்ஷத்தினடியி லிருந்த ராஜகுமாரன் யாரென்று பார்க்குமளவில் மஹா ரூபசௌந்தரியத்தோடு விளங்காநின்ற சந்திரனுடையகாந்திக் கொப்பாக ஜொலிக்கின்ற ரூபலாவண்ணியத்தைக் கண்டு மூர்ச்சையடைந்து இவளாரோ தெய்வம்பெண்போ லிருக்கின்றாளே இதை விசாரித் தறியலாமென்று அரசன் துரிதமாய்வந்து ஸ்நானஞ்செய்து ஈரவஸ்திரத்துடன் மடப்பள்ளியைநாடி வருகின்ற மரகதவல்லியானவள் எதிர்ச்சென்று அவள்கையைப்பிடிக்க மரகதவல்லியானவள் பயந்து கண்ணீர்ததும்ப அழுதனள். அப்போது அரசனானவன் தன் வஸ்திரத்தினாலே அவள் கண்ணீரைத் துடைத்து பயப்படாதே உன் வரலாற்றைச் சொல்லென்றுகேட்டான் அதற்கு மரகதவல்லியானவள் சொல்லுகின்றாள்.

## விருத்தம்.

மன்னவன் சுகுணராஜன் மகளெனப்பிறந்துபாரில்
முன்வினையாலேயுன்னை மூவாறுவருஷங்கார்த்தேன்
கண்விழிநீரைமன்னாவுன் கையினால்துடைக்கொணாதே
யித்தன்மையையறிந்தால்தாதி தலைதனை துணிப்பாள்பாரே.

இப்படியாகச்சொல்லி யழுகின்ற மரகதவல்லியை யெடுத்துக்
கொண்டு வேறொரு மறைவாகிய விடத்திற்குக் கொண்டுபோய் தன்
மடியி லுட்காரவைத்துக்கொண்டு நல்ல மிருதுவாகிய வசனங்களினா
லே அவள் மனதைத்தேற்றி பெண்ணே நீ ஒன்றுக்கும் அஞ்சாதே
நீயார் உன்வரலாற்றை ஒன்றும் ஒளியாமல் சவிஸ்தாரமாய்ச் சொல்
லவேண்டுமென்று கேட்டுக்கொண்ட அரசனுடைய முகத்தைநோ
க்கி தன் பிறப்புவளர்ப்பையும் தாய்தந்தையர்களுடைய நாமதேயத்
தையும் ஜோசியர் சொன்னபடி ஏழுவயதுமுதல் தான் அடைந்த
மனோதுக்கத்தையும் தனக்குத் துணையில்லாததினாலே லம்பாடிப்பெ
ண்ணை விலைக்குக் கொண்டதையும் அவளுக்குங்கீழ் தான் ஆறுவரு
ஷகாலம் யூழியஞ்செய்ததையும் ஒன்றும் ஒளியாமல் விபரமாய்ச்
சொல்லினாள். அதைக்கேட்ட அரசன் அவன் கண்ணீர்ததும்ப ஐ
யோ என்னால் உனக்குயிந்த துன்பம்நேரிட்டதோ நானிதுவரையி
லும் உன்னை அறிந்துக்கொள்ளாமல் போனேனே அந்த அபசாரத்
தை மன்னிக்க வேண்டுமென்று மரகதவல்லிக்கு அநேக சமாதான
வார்த்தைகள் சொல்லி பெண்ணே உன்னுடைய துக்கமானது கே
ட்ட என்மனமானது பலபலவிதமாகின்றது ஆனால் எனக்கு நேரிட்
டதுன்பத்தையும் சொல்லுகின்றேன், கேளென்று சொல்லத்தொடங்
கினான்.

அதாவது இதற்கடுத்த பட்டணத்துக்கரசனாகிய சூரசேன
மகாராஜனென்பவன் என்தந்தை நெடுநாள் புத்திரனில்லாத மனக்
குறையினால் தவம்புரிந்து என்னை யீன்றெடுத்து வெகு செல்வமாய்
வளர்த்துவரும்போது எனக்கு பதினாறுவயதில் இக்காட்டில் வேட்
டையாடிக்கொண்டிருப்பேன் இப்படி வேட்டை யாடிக்கொண்டு
வரும்போது ஒருநாள் தூரத்தில் நிற்கின்ற ஒரு மானைக்கண்டு பா
ணப்பிரயோகஞ் செய்தேன். அந்தபாணமானது சமீபத்தில் தவஞ்
செய்துக்கொண்டிருந்த ஒரு ரிஷியின் கறத்தில் தாவியது உடனே
ரிஷிக்குக் கோபம்பிறந்து உன் சரீரமெல்லாம் ஊசிமுளைத்து நீ ஒரு
பிரேதமாய்போகக் கடவாய் என்று சாபமிட்டார். அப்போது நான்
அவரைவணங்கி சுவாமி நான் தெரியாமல்செய்த அபசாரத்தை மன்
னித்து நான் மறுபடியும் ஜீவித்திருக்கும்படி கிருபை பாலிக்கவே
ண்டுமென்று நான் அநேகவிதமாய் வேண்டிக்கொண்டேன். அவரு
க்குக் கிருபைபிறந்து நீ பன்னிரண்டுவருஷம் பிணமாக இருக்கக்க
டவாய் உன்தலைமாட்டில் வாடாவிளக்கு எரிந்துகொண்டிருக்க வே

...ர் ராமாயண புஸ்தகமொன்று இருக்கவேண்டும் யாதொரு இராஜகன்னிகையானவள் அந்தப் பன்னிரண்டு வருஷம் இராமாயணத்தைப்படித்து உச்சிமுதல் உள்ளங்கால்வரையிலும் மூளைத்திருக்... ற ஊசிகளை பிடுங்கிவிடுவாளாகில் நீ உயிர்பெற்று எழுந்திருப்...ய் அந்த ராஜகன்னிகையே உனக்கு பட்டத்தரசியாகி ஐம்பத்தாறுதேசத் தரசர்களும் அதிபதியாய் இராஜ்ஜியபாரம் செய்துக்கொண்டிருப்பாயென்று ஆசீர்வாதஞ்செய்து அருளினர். நான் அன்றுமுதல் இந்த மாளிக்குள்ளே ரிஷியின் சாபப்பிரகாரம் பிரேதமாயிருந்தேன் இப்போது விழித்துப் பார்க்குங்காலத்திலே உன்தாதியாகிய லம்பாடிப்பெண் அருகிலிருக்கக் கண்டு இவளாலல்லவோ நாம் உயிர்பிழைத்தோமென்று நான் விசுவாசித்திருந்தேன். பெண்ணே இன்றைக்கு உன்னால் எல்லாவிபரமும் தெரிந்தேன் சற்றுநேரம் இவ்விடத்தி லிருவென்று மரகதவல்லியை அவ்விடத்தில் நிருத்திவிட்டு ஓடோடியும்வந்து தாதியாகிய லம்பாடியை மயிரைப்பிடித்திழுத்து வந்து மரகதவல்லியின்முன் தன் மந்திரவாளினலே அரசன் இருதுண்டமாகவெட்டி எறிந்துவிட்டு தன்மனைவியை தாவி எடுத்துக்கொண்டு அரண்மனையைச்சேர்ந்து கிருஷ்ணனவர் சத்தியபாமையை எவ்விதமாய் அலங்கரிப்பாரோ அவ்விதமாகவே மரகதவல்லிக்கு தன் கையினால் அநேக ஆடை ஆபரணங்களா லலங்கரித்து கண்குளிரப்பார்த்து ஆனந்தசாகரத்தில் மூழ்கினவனாய் தன் தந்தையாகிய சூரசேன மஹாராஜனுக்கு தான் உயிர்பெற்று எழுந்தசங்கதியைத் தெரிவித்தான் அரசன்கேட்டு மஹா சந்தோஷத்தையடைந்து தன் சேனைகளோடு அநேக மேளவாத்தியங்கள் முழங்க தன்மகனைகண்டு ஆலிங்கனஞ்செய்து ஆனந்த பாஷ்பங்கொண்டு மருமகளைப்பார்த்து அம்மா என் குலதெய்வமே உன்னாலல்லவோ என்குமாரன் உயிர்பெற்றெழுந்தானென்று பல ஆசிகள்கூறி நிற்கின்ற மாமனர் மாமியாருக்கு தீர்க்கதண்டஞ் சமர்ப்பித்து மஹா சந்தோஷங்கொண்டாடினள் அவ்வேளையில் மரகதவல்லியின் தாயுந்தந்தையும் அநேக தேசங்கள்தோறுந்திரிந்து பரதேசிவேடத்துடன் ஜோசியர்சொன்ன வருஷம் பதினெட்டுந்தீர்ந்து விட்டதே நம் குமாரத்தி என்னகதியடைந்தனளோ பார்ப்போமென்று அம்மானிகையை நாடிவந்தார் ...இவ்விடத்தில் மஹா வைபோகத்துடன் அநேக தளங்கள் சூழ்

துக்கொண் டிருப்பதைக்கண்டு அம்மாளிகையை யடுத்து இவ்வூக்காரர்கள் தங்களை உள்ளே பிரவேசிக்கவிடாததைக் கண்டு ஓவென்றலறி யழுதார்கள் அதைக்கேட்ட வேவுக்காரர்கள் ஓடிவந்து மரகதவல்லியும் ராஜகுமாரனும் வீற்றிருப்பதைக் கண்டு அவர்களுக்கு தண்டஞ்சமர்ப்பித்து யாரோ இரண்டு பரதேசிகள் நாங்கள் உள்ளே விடாததினால் ஓவென்றலறி யழுதுக்கொண் டிருக்கின்றார்களென்று சொன்னவுடனே மரகதவல்லி உடனே யாரோ பார்ப்போமென்று வந்தனள் இராஜகுமாரனும் பின்தொடர்ந்து வந்தான் மரகதவல்லியானவள் பரதேசி வேடமாக நிற்கின்ற தன் தாய்தந்தையர்களைப் பார்த்து குறிப்பினால் அவர்களை தெரிந்துக்கொண்டு வாயிலும் வயற்றிலும் மோதிக்கொண்டு என்னாலல்லவோ என் தாய்தந்தையர்களுக்கு இக்கதி நேரிட்டது என்று தாயும் தகப்பனையுங் கட்டிக்கொண்டு அலறி அழத்தொடங்கினாள். தாயுந்தந்தையும் தம்மகள் என்றுணர்ந்து இவர்களு மழத்தொடங்கினார்கள் இதுகளைப் பார்த்துக்கொண்டிருந்த வீரமர்மனென்னு மரசகுமாரன் மாமனார் மாமியார் என்றுதெரிந்து அவர்கள் பாதாரவிந்தங்களில் வந்து வணங்கி நின்றான் இவ்வர்த்தமானங்களை யெல்லாம் வேவுகாரர்களால் தெரிந்துக்கொண்ட சூரசேன மஹாராஜாவும் அவர்பத்தினியும் ஓடோடியும் வந்து சம்மந்திகளை ஆதரித்து அவர்களை வெகு வினயத்துடன் அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்குத்தகுந்த உபசாரம்செய்து பரதேசிவேடத்தை போக்கி தகுந்த விருந்துமுதலியவைகளை செய்வித்தார்கள் அப்போது சுகுணமாஹாராஜன் தன் பட்டணத்தை பாதுகார்த்து வருகின்ற மந்திரிக்கு சொல்லியனுப்பவே மந்திரியானவன் சகல தளத்தோடுவந்து அரசனைக்கண்டு வணங்கினான் எல்லோரும் ஆனந்தசாகரத்தில் மூழ்கினவர்களாய் இந்த அரண்மனைக்கும் தன் சிந்துதேசத்திற்கும் பலவித புஷ்பங்களினால் பந்தல் அலங்கரித்து தன்மகளையும் மருமகனையும் தன் சம்மந்திமார்களையும் அழைத்துக்கொண்டு தன் பட்டணஞ்சேர்ந்து தேசதேசங்களுக்கு திருமுகமெழுதி அரசர்கள் எல்லாம்வந்து சேர்ந்தவுடனே தன் பட்டணத்தை தெய்வலோகம் இதற்கு இணையில்லை என்று சொல்லும் படியாக அலங்கிருதஞ்செய்து விதிமுறைகள் வழுவாமல் சகல சடங்குகளையும் நிறைவேற்ற வீரவர்மனென்னு மரசகுமாரனுக்கு

வே